ஒரே இடம்
அதுவே
நிறைவு தரும்



ஏழு
தளங்களில்
எத்தனை
ரகங்கள் !

பட்டுப்புடவைகள், பட்டு வேட்டிகள்,
திருமண புடவைகள்,
டிசைனர் புடவைகள்,
பெண்களுக்கான துணிவகைகள்
சுடிதார்கள், காக்ராஸ் (Ghagras),
குழந்தைகளுக்கான ஆடைகள்,
ஆடவரின் ரெடிமேட் ஆடைகள்
சூட்டிங் & ஷர்ட்டிங்ஸ் மற்றும் பல ...

என்றும்
நினைவிருக்கட்டும்

100 நல்லி

100 உஸ்மான் சாலை

Nalli®
FIRST AND STILL THE FINEST
சில்க் சாரிஸ்
Since 1928

100, உஸ்மான் சாலை,
(துரைசாமி ரோடு ஜங்ஷன்)
தி. நகர், சென்னை-17.
தொ. பே.: 4314900-05
∴பேக்ஸ் : 4314919

காவியங்களை பட்டுத்துணியிலும் படைப்பவர்கள் !

FAME/NALLI/2152



✉ இன்னும் நாட்டில் தீண்டாமை வாழ்ந்து கொண்டு இருக்கிறது என்பதை அழகாய்ப் படம் பிடித்துக் காட்டியது ''இராப்பாடம்' கதை

திண்டுக்கல், செ.ரா. ரவி



✉ வித்யாசாகரின் மனம் திறந்த பேட்டி வியக்க வைத்தது. ஆனால் அவருக்குத் திருப்புமுனை கொடுத்த ஹிட் பாடல் தில்ருபா தில்ருபா (ப்ரியம் படத்தில்) குறித்து அவர் ஒன்றும் குறிப்பிடவில்லையே ஏன்?

திருப்பரங்குன்றம்,
டி.கே.சுப்பிரமணியன்



✉ வலது கால் முழுவதும் விபத்தொன்றில் நொறுங்கியபோதும், மனம் தளராது, நம்பிக்கை இழக்காது சிறந்த 'நடிகன்' ஆகியே தீருவது என்ற ஒரு வெறியுடன், நேர்மையோடு போராடிய விக்ரமின் வைர நெஞ்சைப் பாராட்டத்தான் வேண்டும்.

மதுரை, என்.பாலகிருஷ்ணன்



# இண்டக்க மண்டக்கத்தான் பதிலு!

✉ பானுமதி எழுதிய 'வெளிச்சம்' கதை உள்ளத்தை உருக வைத்தது. கொடூர நெஞ்சங்கள் கொண்ட மனிதர்கள் சூழ்ந்த ஒரு குடும்பத்தில் இருளில் வெதும்பிய விதவை மருமகள் ஜானகியின் வாழ்வில் வெளிச்சம் ஏற்படப் பாடுபடும் புதிய மருமகளின் பாத்திரப்படைப்பு அற்புதம்!

வேலூர், ஜி.சகுந்தலா

✉ இன்றைய கால பெண்களிடம் 'இடக்கு மடக்கு' கேள்வி கேட்டால், குண்டக்க, மண்டக்கத் தான் பதில் சொல்வார்கள்! அதுதான் ஃபேஷன்.

தஞ்சாவூர்,
கே. மித்ரா

✉ கிருஷ்ணனுக்கு வந்த நோயான 'பார்கின்ஸன்' பற்றி முதல் முறையாகப் படித்தபோது வினோதமாகவும் ஆச்சர்யமாகவும் இருந்தது. ஆனால் இந்த நோயால் பாதிக்கப்பட்ட கிருஷ்ணனின் மனோ வலிமையும்- அந்தக் கொடுமையான வியாதியிலிருந்து மீள 'ஆர்ட் தெரபி'யை தேர்ந்தெடுத்த விதமும் புதுமையாகவும் புதிராகவும் உள்ளது.

பெங்களூர், அ. சங்கரன்

✉ “பதற வைக்கும் பட்டினிச் சாவுகள் தலையங்கம், குறை காண்பதுடன் நின்றுவிடாமல் ஆக்கபூர்வமான ஆலோசனைகளும் வழங்கியது மகிழ்ச்சியளிக்கிறது. உடலுழைப்பின் பெருமையை மக்கள் அனைவரும் உணருமாறு நமது மாநில - மத்திய அரசுகளின் கல்வி, பொருளாதாரக் கொள்கைகள் திருத்தி அமைக்கப்பட வேண்டும் என்பது அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்தியின் குரலாக ஒலிக்கிறது.

மதுரை, தி.ரங்கசாமி



✉ அண்ணா வழியில் கண்ணியம் காக்கும் பேராசிரியர் அன்பழகனைப் பாராட்டி, நேர்மைக்குப் புகழாரம் சூட்டுவதில் தங்களை மிஞ்ச ஆள் இல்லை என்பதை மீண்டும் ஒரு முறை நிரூபித்து விட்டீர்கள்! ஆனால் 'அம்மா வழி'யை எதிர்கொள்ள 'பரிதி வழி'யே லாயக்கு என்றுதான் தோன்றுகிறது.

நெல்லையப்பபுரம், டி. செல்வன்



கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# காதில் விழுந்தவை

தமிழ்நாடு காங்கிரஸ் அறக்கட்டளைக்கு அதிரடியாக நான்கு அறங்காவலர்களை சோனியா நியமித்ததை அடுத்து எழுந்த அதிர்ச்சியிலிருந்து த.மா.கா பிரமுகர்கள் இன்னமும் மீளவில்லை. எரியும் வீட்டில் பெட்ரோலை ஊற்றுவது போல, 'அறக்கட்டளை விவகாரத்தில் காங்கிரஸை கலக்காமல் நீதி மன்றம் நடவடிக்கை எதுவும் எடுக்கக்கூடாது' என்று இளங் கோவனின் 'கேவியட்' மனு வேறு அவர்களுக்குக் கடுப்பை உண்டாக்கியிருக்கிறது. பதினாறு நாள் துக்கம் முடிந்த வுடன்தான் புதிய தலைவர் கோவிந்தவாசன் வாய் திறப்பார் என்று த.மா.காவினர் கூறினாலும் காங்கிரஸ் தலைமையுடன் பேச்சுவார்த்தைகளை ரகசியமாக துவங்கியிருக்கிறது த.மா.கா.

எந்தக் காரணம் கொண்டும், ஜெயலலிதாவின் துணையை இந்த விஷயத்தில் த.மா.கா நாடக் கூடாது என்பதுதான் காங்கிரஸ் தலைமையின் முதல் கட்டளை. காங்கிரஸுடன் உடனடியாக இணையாமல் உள்ளாட்சித் தேர்தலிலும் அ.தி.மு.க.வுடன் கூட்டணி சேர்ந்து கணிசமான இடங்களைப் பிடிப்பதுதான் த.மா.கா.வின் உடனடித் திட்டம். அதற்கு முன் காங்கிரஸுடன் இணைந்தால் இப்போது பொறுப்பிலிருக்கும் பிரமுகர்களுக்குக் கூட உள்ளாட்சியில் மீண்டும் இடம் பெற்றுத் தர முடியாது என்று சொல்கிறார்கள் த.மா.கா பிரமுகர்கள். "பாராளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்கள் போல எங்களை ஜூனியர் பார்ட்னர் ஆக கணக்கில் கொண்டு பெயருக்குக் கொஞ்ச இடங்களைக் கொடுத்து அழுத்தப் பார்த்தால் சும்மா இருக்க மாட்டோம். தனித்துப் போட்டியிடுவோம்" என்கிறார் ஒரு காங்கிரஸ் தலைவர்.

எது எப்படியிருந்தாலும் த.மா.கா என்ற அமைப்பு இனி தமிழகத்தில் இருக்கக்கூடாது என்பதில் காங்கிரஸ் தலைமை தெளிவாக இருக்கிறது. இதற்கிடையில் அறக்கட்டளையில் மீதி இருக்கும் இரண்டு காலி இடங்களில் சோனியா யாரை நியமிப்பார் என்று ஊகங்கள் வந்துகொண்டிருக்கின்றன– த.மா.கா "சமர்த்துப் பிள்ளையாக" இருக்கும் பட்சத்தில் ஒரு இடம் கோவிந்தவாசனுக்காம். மற்றொரு இடம் சிதம் பரத்துக்கா அல்லது வாழப்பாடிக்கா என்று பலமான போட்டி! வாழப்பாடி கொஞ்சம் அதிகப்படியாகப் போய் ஜெ.வுக்கு ஜால்ரா தட்டத் துவங்கியிருப்பதால் சிதம்பரத்துக்குப் பிரகாசமான வாய்ப்பு இருக்கிறது என்கிறார்கள். ஆனால்,



சோனியாவைச் சுற்றியுள்ள சிலர் சிதம்பரத்துக்கு எந்த வித முக்கியத்துவமும் கொடுக்கக்கூடாதென்றும் பிடிவாதமாக இருக்கிறார் கள். "தமிழ்நாட்டில் இப் போதுள்ள நிலையில் காங் கிரஸ் பிளஸ் த.மா.கா ஆகி யவை ஒன்றுபட்ட சக்தியாக உருவாகும்போது, அதற்குச் சிதம்பரம் போன்ற தலைவர் இருந்தால் கட்சிக்கு எதிர்

## பட்டுப் புடைவைப் பரிசுப் போட்டி முடிவு – 4

**வைர மொழி : 'வைரத்தால்தான் வைரத்தை அறுக்க முடியும்.'**

பெரும்பாலான வாசகர்கள் சரியான விடையை எழுதியிருந்தனர். அவர்களில் குலுக்கல் முறையில் ரூ 2500/- மதிப்புள்ள பட்டுப் புடைவை பரிசு பெறு பவர்:

**லலிதா ராதாகிருஷ்ணன்,**
**32, நீல்கண்ட் அபார்ட்ஸ்,**
**திலக் நகர், செம்பூர், மும்பை – 89.**

காலம் பிரகாசமாக இருக்கும்'' என்று சோனியா நினைத்திருக்கிறாராம். காங்கிரஸில் என்ன நடக்கும் என்பது யாரும் ஊகித்துச் சொல்ல முடியாது. மூப்பனாரைக் காமராஜ் அரங்கத்துக்குப் பக்கத்தில் உள்ள மைதானத்தில் எரித்ததும் சர்ச்சையைக் கிளப்பியிருக்கிறது. 'சென்டிமென்ட்லாகப் பார்க்கும்போது இனி கல்யாணம் போன்ற மங்கள நிகழ்ச்சிகளை காமராஜ் அரங்கத்தில் நடத்த மக்கள் முன் வருவார்களா? என்பது சந்தேகமே' என்கிறார் அரங்க ஊழியர் ஒருவர்.

"ஏகப்பட்ட சட்டச் சிக்கல்களில் மாட்டிக் கொண்டு பதவியைக் காப்பாற்றிக் கொள்ளப் போராடும் ஜெயலலிதா உள்ளாட்சித் தேர்தலை நடத்தத் துணிய மாட்டார்'' என்று

கொஞ்சம் ரிலாக்ஸ்டாக இருந்த தி.மு.க.வுக்குத் தேர்தல் அறிவிப்பு ஷாக் கொடுத்திருக்கிறது. அதற்கு முக்கியமான காரணம் சட்டமன்றத் தேர்தலில் அமைத்த கூட்டணியைவிட வலுவான கூட்டணியை அது இன்னும் அமைக்க முடியாமல் இருப்பதுதான். "உள்ளாட்சித் தேர்தல் பெரும்பாலும் லோக்கல் பிரச்னைகளின் மையமாககொண்டு லோக்கல் பிரமுகர்களின் செல்வாக்கு அடிப்படையில் தீர்மானிக்கப்படும் விஷயமாக இருந்தாலும், நகராட்சி, மாநகராட்சி பகுதிகளில் வெற்றி பெற வலுவான கூட்டணி தேவை'' என்று தி.மு.க பிரமுகர்கள் கருதுகிறார்கள். குறிப்பாக ம.தி.மு.கவும், பா.ம.க.வும் சேர்ந்து

# சிக்கலில் த.மா.கா!



கூட்டணி அமைக்க முடிவு செய்து இருப்பதும் அவர்களைக் கவலை கொள்ளச் செய்திருக்கிறது.

"இந்த இரு கட்சிகளும் கூட்டணி அமைத்தாலும் அந்தக் கூட்டணியுடன் இணைந்து ஒப்பந்த அடிப்படையில் தி.மு.க அணி போட்டியிடும் சாத்தியமும் உண்டு' என்கிறார் பா.ஜ.க பிரமுகர் ஒருவர். ஆனால் இது போன்ற ஒரு யோசனைக்குத் தி.மு.க ஒப்புக் கொள்ளாது என்று கழகப் பிரமுகர்கள் சொல்கிறார்கள். இந்த நிலையில் "வாக்காளர் பட்டியலில் ஏகப்பட்ட குளறுபடிகள்; அதைச் சரி செய்யாமல் தேர்தலை நடத்தக்கூடாது என்று 'யாராவது' ஒரு வாக்காளர் நீதிமன்றக் கதவைத் தட்டலாம் என்றும் சொல்கிறார்கள்.

சமீபத்தில் டில்லியிலிருந்து பத்திரிகையாளர்கள் மீது நடந்த தாக்குதல்களைப் பற்றி விசாரிக்க பிரஸ் கவுன்ஸில் குழு வந்திருந்தது. அந்தக் குழு காவல் துறைத் தலைவருக்கும், மாநகர கமிஷனருக்கும் சம்மன் அனுப்பி ஆஜராகச் சொன்னது. 'பிரஸ் கவுன்ஸில் குழு முன் அவர்கள் ஆஜராகத் தேவையில்லை; அஃபிடவிட் தாக்கல் செய்தால் போதும்' என்று முதல்வர் சொன்னாராம். 'இல்லை... அது சரியாக வராது; இருவரும் நேரில் ஆஜராவதே சரி' என்று தலைமைச் செயலாளர் சொல்லி, இருவரும் குழு முன் நேரில் ஆஜரானார்கள். "டி.ஜி.பி அலுவலகத்தைத் தாக்க "ஏவுகணைகளுடன் தி.மு.க தொண்டர்கள் வந்தார்கள்'' என்று காவல்துறை சார்பில் சொல்லப்பட்டபோது பிரஸ் கவுன்ஸில் உறுப்பினர்களும் மற்றவர்களும் கொல்லென்று சிரித்து விட்டார்களாம். "எங்களுக்குத் தி.மு.க மீது எந்த வன்மமும் கிடையாது. எங்களைப் பிடிக்காத சில அதிகாரிகள் பத்திரிகையாளர்கள் மீது மூர்க்கத்தனமாக நடந்துவிட்டார்கள்'' என்று சரண்டராகியதாம் காவல் துறை குழு!

— சஞ்சயன்

## சோனியா வைக்கும் செக்!

# டைரக்டர் ஆகப் போறேன்!

**'எய்ட்ஸ் குழந்தைகளுக்கு உதவப்போகிறேன். சமூக சேவை செய்யப் போகிறேன்' என்று அனாயாசமாகப் பேட்டி கொடுக்கும் உலக அழகிகள் எல்லாம் சினிமாவுக்குள் நுழைந்து விடுகிறார்கள். லேட்டஸ்ட் அரைவல்: லாரா தத்தா!**

**'அரசாட்சி' படத்தில் அர்ஜுனுக்கு ஜோடியாக அறிமுகமாகும் லாராவை, பிரத்யேகமாகச் சந்தித்தோம் சோழா ஓட்டலில்.**

*அழகின் அரசாட்சிதான் சினிமாவில் என்ற நிலையில் நீங்களும் சினிமாவுக்கு வந்துட்டீங்க?*

"நான் உலக அழகியாகத்தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்தே எனக்குச் சினிமா வாய்ப்புகள் வரத் தொடங்கி விட்டன. நான் கிரீடம் வென்று, முதல் தடவையாக இந்தியா திரும்பியதும் டாக்டர் முரளி மனோகர் என்னைச் சந்தித்து, தம் படத்தில் நடிக்க வேண்டும் என்று கேட்டார். என் மிஸ் யுனிவர்ஸ் காண்டிராக்ட் முடிந்தவுடன், சினிமாவுக்கு வரத் தயாரானேன். முரளி மனோகரும், டைரக்டர் மகாராஜனும் சொன்னக் கதை, எனக்குரிய கேரக்டர், இவை பற்றிச் சொல்லி, உங்களைவிடப் பொருத்தமாக வேறு எவரையும் எங்களால் நினைத்துப் பார்க்க முடியவில்லை என்றவுடன் ஓ.கே. சொல்லிவிட்டேன்.

"படத்தில் பெரிய நட்சத்திர ஓட்டல் முதலாளியின் மகளாக நான் வருகிறேன். என் கேரக்டர் ரொம்ப பவர்ஃபுல்லான ஒன்று."

*நீங்கள், ஃபேஷன் ஷோக்களில் பூனை நடை நடந்திருக்கலாம், மாடலிங் செய்திருக்கலாம், ஆனாலும், நடிப்பு என்பது உங்களுக்குப் புதிதுதானே!*

"மாடலிங்கிற்கு வருவதற்கு முன்பே மேடையில் நடித்த அனுபவம் உண்டு. பதிமூன்று வயதில் ஆரம்பித்து ஏறத்தாழ ஐந்து வருடங்கள் நான் இந்தி மற்றும் ஆங்கில நாடகங்களில் நடித்திருக்கிறேன். நடிப்பு என்பது, வசனத்துக்கேற்ப, தசைகளை அசைத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் டெக்னிக்தானே! எனவே நடிப்பு என்னைப் பொறுத்தவரை சிரமமான ஒரு விஷயமில்லை."

"இந்தி உங்களுக்குத் தெரிந்த மொழி. தமிழ்ப் படத்தில் நடிப்பதைவிட, இந்திப் படத்தை முதலில் ஒப்புக் கொண்டிருந்தால் சௌகரியமாக உணர்ந்திருப்பீர்கள் இல்லையா? இந்திக்கு வியாபார மார்க்கெட்டும்





பெரியதாயிற்றே?"

"நான் அப்படி நினைக்கவில்லை. தமிழில், எனக்கு ஒரு அட்சரம் தெரியாது. எனக்குரிய வசனங்களுக்கு என்ன அர்த்தம் என்று தெரியாது. எனவே, நடிப்பு என்பதும் மொழி என்பதும் ஒரு கூடுதலான சவாலாகி விடுகிறது. அதை வெற்றி கொள்ளுவது, பெரிய விஷயம் என்று நான் நினைக்கிறேன்.

"அதுமட்டுமின்றி, தென்னிந்திய திரைப்படத்துறையில் காணப்படும் ஆழமான ஈடுபாடு,



— லாரா

வேகம், எல்லாம் என்னைக் கவர்ந்த அம்சங்கள். எனவே, தமிழில் முதலில் நடிப்பதை நான் ஒரு மாற்று குறைவான விஷயமாகக் கருதவில்லை."

உலக அழகியானவுடன் அளித்த பேட்டியில் பி.பி.சி., சி.என்.என். போன்ற உலக அளவில் புகழ் பெற்ற நியூஸ் சேனல்கள் ஏதாவது ஒன்றில் பணிபுரிவது லட்சியம் என்று சொன்னீர்கள்! இப்போது என்னடா வென்றால், சினிமாவுக்கு வந்து, பத்திரிகையாளர்களுக்குப் பேட்டியளித்துக் கொண்டிருக்கிறீர்களே!"

"எனக்குப் பத்திரிகையாளர் ஆகும் விருப்பம் இருக்கிறது. நான் அமெரிக்காவில் டெலிவிஷனிலும், ரேடியோவிலும் நிகழ்ச்சிகள் வழங்கிக் கொண்டுதான் இருக்கிறேன். டைரக்டர் ஆக வேண்டும் என்பதுதான் என் லட்சியம். நிறைய டாகுமெண்டரி படங்களை டைரக்ட் செய்யப் போகிறேன். அதற்கு இந்த சினிமா, டீ.வி., ரேடியோ அனுபவங்கள் கைகொடுக்கும் என்று நினைக்கிறேன்."

"நீங்கள் நியூயார்க்கில் ஒரு அபார்ட்மெண்ட் வாங்கியிருப்பதாகவும், அங்கேயே செட்டிலாக முடிவு செய்து விட்டதாகவும் செய்திகள் வந்ததே? அதெல்லாம் வெறும் வதந்திதானா?"

"நியூயார்க்கில் சொந்த அபார்ட்மெண்ட் இருப்பது நிஜம்தான். ஆனால், நான் பிறந்த

மண்ணை, எந்த தேசத்தின் பிரதிநிதியாக அழகிப் போட்டியில் கலந்து கொண்டு விருதினைப் பெற்றேனோ அந்தத் தேசத்தை முற்றிலும் மறந்து விட்டு, அமெரிக்காவிலேயே செட்டிலாகிவிட நான் ஒருபோதும் சம்மதிக்க மாட்டேன். இங்கேயும் அங்கேயுமாக இருப்பதே என் பிளான். அதுமட்டுமில்லை என் பெற்றோர்கள் இன்னும் இங்கேதான் இருக்கிறார்கள்."

"ஹாலிவுட் படங்கள் இரண்டில் நடிக்கப் போவதாகக் கூட நியூஸ் வந்தது."

"ஹாலிவுட் படங்களில் நடிப்பது என்பது சுலபமான விஷயம் இல்லை. உலக அழகியானதும், இங்கே சினிமாவில் நடிக்க அழைத்து கியூவில் நின்றார்கள். ஆனால், அழகிப்பட்டம் எனக்கு ஹாலிவுட்டில் விசிடிங்கார்டு மாதிரிதான் பயன்பட்டது. அங்கே எதிர்பார்க்கப்படும் நடிப்பு பாணி, இந்திய சினிமா நடிப்பிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. அங்கே டைரக்டர்களின் எதிர்பார்ப்புகளே வேறு. கடுமையான தேர்வு முறைகள் அங்கே நடைமுறையில் உள்ளன. அதற்கு ஏற்ப பிரத்யேகப் பயிற்சிகள் மூலம் என்னை நான் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். இரண்டு படங்களில் நடிக்க வாய்ப்பு கிடைக்கும் சாத்தியமிருக்கிறது. கிடைக்கும் என்று நம்புகிறேன்."

*உலக அழகியாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட தருணத்தில், நீங்கள் சந்தோஷத்தின் உச்ச கட்டத்தில் இருந்ததை உலகமே அறியும். ஓராண்டு காலம் கழித்து, உங்கள் கிரீடம் கழற்றப்பட்டபோது உங்கள் மனநிலை எப்படி இருந்தது?*

"ரொம்ப நிம்மதியாக இருந்தது! சந்தோஷமான சுமையைச் சுமந்து கொண்டிருந்தபோதிலும், அதை இறக்கி வைத்தது போலத்தான் நான் உணர்ந்தேன்."

*அதற்கு என்ன காரணம்?*

"நான் உலக அழகியாத் தேர்ந்தெடுக்கப்பட்ட கணமே, மீடியா வெளிச்சம் என் மீது விழுகிறது. இந்தியா சந்தோஷப்படுகிறது. ஆனால் அதன் பின் ஓராண்டு காலத்துக்கு ஆற்றும் பணி இருக்கிறதே ரொம்ப கடுமையானது. கடந்த ஒரு வருஷத்தில், மொத்தம் முந்நூற்றி முப்பது நாட்களை நான் எந்த நாட்டிலாவது, எந்த நிகழ்ச்சியிலாவது கலந்து கொள்ளச் செலவழித்திருக்கிறேன். நான் ஆறு லட்சத்து எண்பதாயிரம் மைல்கள் விமானத்தில் பறந்திருக்கிறேன். சமுதாயப் பிரச்னைகள், அரசியல் பிரச்னைகளை அலசும் கருத்தரங்குகள், சமூக சேவை அமைப்புகளுக்கு விசிட், விழாக்கள் என்று பலதரப்பட்ட எங்கேஜ்மென்ட்கள். ஒரு இருபத்தி இரண்டு வயது பெண்ணுக்குத் தெரியாத, தொடர்பே இல்லாத விஷயங்கள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேண்டிய சூழ்நிலைக்கு ஆளாகியிருக்கிறேன். முன்பின் தெரியாதவர்கள் சந்திப்பு, கேள்விப்பட்டிராத நாடுகளுக்கு விஜயம் என்று பெரிய பட்டியலே போடலாம்."



**"இதுவா? எங்க மாவட்டத் தலைவரோட சிலைதான். அடிக்கடி கட்சித் தலைவரோட காலில் விழுந்து. விழுந்தே எல்லோரட கவனத்தையும் கவர்ந்ததால அவரோட சிலையையும் இப்படியே செய்ய ஆர்டர் கொடுத்தோம்!**

— பாஸு

புறப்படுகிறபோது, லாரா சொன்ன தகவல்: "எனக்கு ரொம்பப் பிடித்த ஊர்களில் சென்னையும் ஒன்று. காரணம் என் அப்பாவும் அம்மாவும் முதலில் சந்தித்து, காதலித்து திருமணம் செய்து கொண்டது சென்னையில்தான்!

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படங்கள்: **யோகா**

எல்ஐசி

பாலிசிகளுடன்

நானும்

வளர்வேன்



**ஓய்வூதியத் திட்டங்கள்**
(ஜீவன் சுரக்ஷா, புதிய ஜீவன் தாரா,
புதிய ஜீவன் அக்ஷய்)

**உடல்நலம் பேணும் திட்டங்கள்**
(ஜீவன் ஆஷா II, ஆஷா தீப் II)

**வளர்ச்சிக்கான திட்டங்கள்**
(பீமா நிவேஷ், பீமா ப்ளஸ், ஜீவன் ஸ்ரீ)

**பணமீட்சித் திட்டங்கள்**
(ப்ளான் 75-20, ப்ளான் 93-25, ஜீவன் ஸ்நேஹா,
ஜீவன் சுரபி, ஜீவன் சஞ்சய்)

**எண்டவ்மெண்ட் திட்டங்கள்**
(எமது எப்போதும் பசுமையான ப்ளான் 14,
ஜீவன் மித்ரா-டபுள் & ட்ரிபிள் கவர், ஜீவன் சாத்தி)

**குறித்த கால திட்டங்கள்**
(பீமா கிரண், ஜீவன் க்ரிஹா)

**ஆயுள் முழுவதற்குமான திட்டங்கள்**
(வரையறுக்கப்பட்ட, மாற்றக்கூடிய திட்டம்)

**குழந்தைகளுக்கான திட்டங்கள்**
(குழந்தைகளுக்கான பணமீட்சி திட்டங்கள்,
ஜீவன் கிஷோர், ஜீவன் சுகன்யா, பால் வித்யா, ஜீவன் பால்யா)

**லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

இந்தியாவை நாங்கள் நன்கு அறிவோம்

Visit us at www.licindia.com

Insurance is the subject matter of the solicitation.





• 'கை'யும் 'மெய்'யும்!



• 'சிக்கல்' பேச்சு!



• மேலும் நாறு!



• திட்டமிட்டச் சாடல்!

● ஆர்.வேலு, மதுரை - 16.

*? கருகும் நெற்பயிருக்குத் தண்ணீர் விட கர்நாடக அரசு மறுத்து வருவதை மத்திய அரசு கவனிக்கும் என நம்பலாமா...?*

! மத்திய அரசு கவனிக்கத்தான் முடியும். ஆனால் தன் கையாலாகாத் தனத்தில் தவிக்கும். சோனியா மனம் வைத்தால் நடக்கும்.

● கோ. ரா. சந்திரன், சங்கரன்கோவில்.

*? ராம கோபாலன் கைது பற்றி...?*

! போஸ்டர் ஒரு பக்கம், மறியல் மறு பக்கம். அம்மாவையும் திருப்திபடுத்திய மாதிரி ஆச்சு; தன் பிடிவாதத்தையும் விட்டுக் கொடுக்காதது மாதிரி ஆச்சு! Well planned strategy.

● கோ. கிருஷ்ணன், சென்னை - 5.

*? பிராமண மாணவர்களுக்கு ஒரு விடுதி பிராமணர் அல்லாதோர்க்கு ஒரு விடுதி என ஏனாத்தூரில் காஞ்சிமடம் நடத்தும் யூனிவர்சிடியில் பிரிக்கப்பட்டுள்ளது பற்றி உங்கள் கருத்து...?*

! அதிர்ச்சியூட்டும் அநியாயம்!

● க. மாரியப்பன், கோவை - 11. ❐

*? இனி தமிழகத்தின் அரசியலில் ப. சிதம்பரம் கை ஓங்குமா...?*

! தமிழகத்தின் அரசியலில் அவர் கை ஓங்குமா தெரியாது; தமிழகத்தின் அறிவாளிகளிடத்தில் அவர் கை ஓங்கும். பலன்தான் இராது.

● பாலு, மதுரை -1.

*? தமிழ்நாடு காவல்துறை மீண்டும் நல்ல பெயர் எடுக்க வாய்ப்பு உள்ளதா...?*

! அது காவல்துறைக்குப் பொறுப்பு ஏற்றுள்ள அமைச்சரின் மனநிலை, நடுநிலை, அறநிலை ஆகியவற்றைச் சார்ந்தது. சாட்டையைச் சரியாகச் சொடுக்கினால்தான் பம்பரம் ஒழுங்காகச் சுற்றும்.

● வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

*? பட்டினிச் சாவுகளுக்கு மாநில அரசுகளே காரணம். ஒதுக்கும் உணவுப்*

# காவல்துறை

*பொருட்களைச் சரிவர பெற்றுக் கொள்ளாததுடன் திருப்பியும் சில மாநிலங்கள் அனுப்புகின்றன என்று மத்திய அரசு கூறுகிறதே...?*

! மத்திய அரசு தன் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடியாது என்றாலும் உணவு விநியோகம் மாநில அரசுகளின் கட்டுப்பாட்டில்தான் உள்ளது என்பதும் உண்மைதான். பட்டினிச் சாவுகள் மாநில அரசின் ஆற்றலின்மையைத்தான் உணர்த்துகின்றன. அதைக்கூட சகிக்கலாம்; முதல்வர் முதல் அதிகாரிகள் வரை அனைவரது அலட்சியப் போக்குதான் ஆத்திரத்தைக் கிளப்புகிறது.

● என். கந்தசாமி, மதுரை-17.

? தி.மு.கவும் அ.தி.மு.கவும் அரசியல் நாகரிகம் தெரியாத கட்சிகள் என்று கடுமையாகச் சாடி இருக்கிறாரே டாக்டர் ராமதாஸ்...?

! மூன்றாவது அணிக்கு வாய்ப்பான கால கட்டம் இது என்று கருதுவாராய் இருக்கலாம்.

● எம். சிவகுருநாதன், சென்னை - 42.

? தமிழகத்தில் அ.தி.மு.க ஆட்சியை விமர்சிக்க மேலும் நூறு நாட்கள் தேவை என்று புதிய தமிழகம் டாக்டர் கிருஷ்ணசாமி சொல்வது எப்படி இருக்கு...?

! ஆட்சி அவலங்களை விமர்சிக்க நூறு நாட்கள் தேவை என்கிறாரா? அல்லது இன்னும் நூறு நாட்கள் கழித்துத்தான் எடைபோட முடியும் என்கிறாரா...? - தெளிவாக இல்லை. ஆயினும், காத்திருந்து மீன்பிடிக்க விரும்புவாரானால் வியப்பில்லை!

● எம். ரேவதி, மன்னார்குடி.

? வாய்மை - தூய்மை - நேர்மை - திறமை - வலிமை - இவை அனைத்தும் ஒருங்கே அமைந்த ஒரு சிறந்த அரசியல்வாதியைத் தற்போது காண முடியுமா...?

! ராஜாஜிக்குப் பிறகு யாரிடமும் இல்லாத காம்பினேஷன் அது.

□ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
க. மாரியப்பன்
368, அழகேசன் ரோடு,
ஸாயிபாபா மிஷன் அஞ்சல்,
கோவை - 641 011.

**நீங்கள் கேட்டவை - தராசு**

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:
வி.பி.மகராசி,
ஜோ. இல்லம்,
பாஸ்டின் நகர்,
மதுரை - 16.

இல்லாதபோது சபித்துக் கொண்டு தான் கொடுத்து அழுவார்கள்.

● கே.வி.ராமன், சென்னை - 73.

? பெல்லாரியில் காதலர்கள் ஓடிப் போனார்கள் என்று காரணம் காட்டி, ஒரு தலித் பெண்ணை நிர்வாணமாக ஊர்வலம் விட்ட கோரம் குறித்து...?

! காதலுக்குத் துணை போனதற்காகக் கிடைத்த 'தண்டனை'. தலித்களுக்கு எதிரான கொடுமைகள் இந்நாட்டில் கேட்பாரற்றுத் தொடர்கின்றன என்பதற்கு மற்றொரு உதாரணம்.

# நல்லபெயரை மீட்குமா?



• கிடைக்காத காம்பினேஷன்!

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் - 5.

? பா.ஜ.க. எம்.எல்.ஏ. இலட்சுமணன் 'சிக்னல் கிடைத்திருக்கிறது' என்ற துவக்க உரையுடன் அம்மாவைப் புகழ்பாடியதாக பரபரப்பாகச் செய்தி வருகிறதே...?

! சிக்னல் பா.ஜ.கவிடமிருந்து கிடைத்ததா அல்லது அம்மாவிடமிருந்து கிடைத்ததா என்று அவர் சொல்லவில்லை பார்த்தீர்களா...!

● மஞ்சுதேவன், தானே.

? ரயில்வே கட்டணங்களின் உயர்வு தேவைதானா...?

! தேவையில்லாவிட்டாலும் மனமுவந்து கொடுக்கத் தயாராவார்கள் பொதுமக்கள்- பாதுகாப்பான, நேரம் தவறாத, சௌகரியமான பயணம் உத்தரவாதமானால். இவை

● வி.பி. மகராசி, மதுரை - 16. *

? தேசியக் கட்சிகளுக்கு மாநிலப் பார்வையும் மாநிலக் கட்சிகளுக்குத் தேசிய பார்வையும் இல்லாமல் போய்விட்டதே...?

! தேசியக் கட்சிகளுக்குத் தேசியப் பார்வையும் மாநிலக் கட்சிகளுக்கு மாநிலப் பார்வையும் கூட இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆட்சியின் மீது இரு தரப்பினருக்கும் ஒரு 'கண்' இருக்கிறதே தவிர, பரந்துபட்ட 'பார்வை' இல்லை.

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? எண் ஜோதிடர்கள் அறிவுரைப்படி தன் பெயரின் எழுத்துகளை முதல்வர் ஜெயலலிதா மாற்றிக் கொண்டது பற்றி...?

! பெயரை மாற்றலாம்.... குணத்தை?.....

சினிமாக்காரர்களுக்கும் வைரங்களுக்கும் ஒரு ஒற்றுமையுண்டு. இரண்டு விஷயங்களும் நிறையவே பரவியிருக்கும் நிரூபணமற்ற சங்கதிகளில் அடிபடுபவை. இந்த 'கிசுகிசு'க்களுக்கு அப்பாற்பட்ட சில விஞ்ஞான அடிப்படைகள் வைரத்திற்கு உண்டு. வைரங்கள் சம்பந்தப்பட்ட மிகப் பிரபலமான செய்தி அதன் 'தோஷங்கள்' பற்றியது. "எனக்கு வைரம் போட்டதிலிருந்து எல்லாமே நல்ல சங்கதிகளாக வருகிறது" என்பதிலிருந்து – "காலையில்தான் அந்த வைர மோதிரம் முதன் முதலாகப் போட்டேன். மவுண்ட் ரோடில் சரி ட்ராஃபிக்கில் பைக் ஆஃப் ஆயிடுச்சு" என்கிற கிலி வரை–

# "ஒரே 'காரட்'டில் ஒரு வைர செட்!"



வைரம் பற்றிய ஆசை கலந்த நம்பிக்கையும், பயம் மேவிய கூச்சங்களும் தென் இந்தியாவில் அதிகம்.

சரி...விஞ்ஞானமும், வேதியியலும், தொழில் நுட்பமும் கலந்து உருவாகும் இந்த வைரங்களை எப்படி வாங்குவது? எங்கே வாங்குவது? விவரம் தெரிந்த மாதிரி 3 கேள்வியாவது கேட்டு வாங்க வேண்டாமா? என்று யோசிப்பவர்களும் உண்டு. 'De Beers'விளம்பரங்களினால் வைரம் அணியும் ஆர்வமும் அதற்கு செலவு பண்ணும் தைரியமும் இப்போது மிகவும் அதிகம். வைரம் வாங்கியதும் 3 நாட்கள் தலையணையடியில் அல்லது பூஜை அறையில் வைத்து எந்தவித தொந்தரவும் இல்லை என்றால் அணிந்து கொள்ளலாம் என்று சிலர் எண்ணுகிறார்கள்.

இதற்கு ஒரு தீர்வு. உங்கள் மனதில் எழுந்த கூச்சத் தூசிகள் அடங்கி அமைதி காணும் வகையில் தி.நகர் பகல்லா ரோடு ஸ்வர்ணாலயா ஜூவல்லரி. திரு. சுகுமார னது பொறுப்பான பதில்: "நாங்கள் வைரம் வாங்குவதே முகூர்த்த நாளில். அதுவும் முகூர்த்த நேரத்தில்தான். கிழக்கு நோக்கியமர்ந்து 10 x Loop Lens-ல் ஒவ்வொன்றாக வைரம் டெஸ்ட் பண்ணும் Fluorescent Lamp-ல் பரிசோதனை செய்வோம்.

எல்லோரும் நினைப்பது வைரத்தில் இருக்கக் கூடிய கறுப்பு புள்ளி மட்டும்தான் தோஷம் என்று. அது தவிர, தவிர்க்க வேண்டிய முக்கிய தோஷங்கள் ஒரு டஜனுக்குமேல் இருக்கின்றன. எக்ஸ்பர்ட்டுகள் கண்களுக்குப் புலப்படக் கூடிய, வெண்புள்ளிகள், தேய்வு குறிகள், இன்னொரு வைரம் புதைந்து கிடப்பது, ஊசி நுனியளவு சிறிய மற்ற ஜாதிக் கற்கள். வைரம் பிறக்கும்போதே ஏற்பட்ட உள்ளீட்டு சரிவுகள், தவறான டிகிரியில் வெட்டப்பட்ட கோணத்தில் ஏற்படுகிற பிழைகள்,

கல் உயரம், கல் ஆழம், அகலம், நிறம், நிறத்தெறித்தல் எனப் பல பரிமாணங் களையும் சோதித்து, பின்னர் தெரிவு செய்யப்பட்ட கற்களை பூஜையில் வைத்து 3 நாட்களுக்குள் எந்தவிதமான பாதிப்பு அதிர்வுகளும் இல்லை என்று அறிந்து அதன் பின்தான் 'செட்டிங்' செய்யத் தருவோம். 'செட்' பண்ணி வந்த பின்னும் இதே பரிசோதனைகளுக்குட்பட்ட நகைகள்தான் Counter க்கு வரும்" என்றார்.

"வைரம் பற்றிய முன்ஜாக்கிரதைக்கு இரண்டு காரணம்" என்றார். "ஒன்று கஸ்டமர்களது எண்ணங்களுக்கும் யோசனைகளுக்கும் பொறுப்பாகச் செயல்பட வேண்டும் என்பது. இரண்டாவது டெக்னிக்கலாக எந்தவித தோஷமும் இல்லாத கற்களே உயர்ந்த கற்கள். அரிதான கற்கள். அதைத் தேடித் தெரிந்து தொகுத்துத் தர வேண்டும் என்பது." அவரது வைரம் பற்றிய அறிவும் தோஷம் பற்றிய முன் ஜாக்கிரதை உணர்வும் எங்களை வியக்க வைத்தது. அடுத்து கேட்டோம். "இப்போது வைர நகைகளில் தாங்கள் செய்யும் புதுமை விற்பனை முயற்சி என்ன?"

"புதுமை என்பதைவிட, நடுத்தர வர்க்கத்தினருக்கும் வைர நகைகளுக்கும் இடையே இருந்து வரும் பயம் மற்றும் விலை தொடர்பான தவிர்ப்பு மனோபாவம் என்கிற திரையினை விலக்கும் வகையில் ஒரு Practical Plan அறிமுகப்படுத்தியிருக் கிறோம். "ஒரே காரட் எடையில் ஒரு டயமன் செட்" என்று எல்லோரையும் சென்றடையும் டயமன் நகைகள் ரெடியாகவும் செய்தும் தருகிறோம்!" என்றார்.

மகிழ்ச்சித் திகைப்பில் ஆழ்ந்த நாங்கள் கேட்டோம். "அப்படியா? 'எல்லோர்க்கும் வைரம்' என்று பெயரிடுங்கள் இந்த முயற்சிக்கு. ஓகே என்ன விலை ஆகும்?"



திரு. சுகுமாரன் சொன்னார், "முப்பதிலிருந்து முப்பத்தைந்தாயிரம் தான் ஆகும்" என்று. "ஒரு ஜோடி தோடு, ஒரு மோதிரம், ஒரு மினி நெக்லஸ் அல்லது பென்டன்ட் சேர்த்து!!" என்றார் சிரித்துக் கொண்டே...

"மீண்டும் வருகிறோம் பேட்டி எடுக்க அல்ல - பணத்துடன் வைரம் வாங்க" என்று ஆனந்தத்துடன் விடை பெற்றோம். திரும்ப எங்களை அழைத்துச் சொன்னார். "அதுமட்டும் அல்ல, வைரம் வாங்கும்போது கேட்க வேண்டிய கேள்விகளை நாங்களே தந்து, கஸ்டமர்களைக் கேட்க வைத்து, ஒன் றொன்றாக பதிலும் தந்து விற்பனை செய்கிறோம்" என்று!!!

# பல நிபுணர்கள் 20 கமாண்டோக்கள் ஒரு வேன்!



மண்ணடியில் முத்தபத்தைந்து அடி ஆழக்குழியில் விழுந்த இளம் பிஞ்சு தமிழ்மணி பரிதாபமாக இறந்ததையடுத்து, எதிர்பாராமல் நிகழும் ஆபத்து / விபத்துகளிலிருந்து பாதிக்கப்பட்டவர்களை உடனடியாய் மீட்க ஒரு சிறப்புப் பிரிவை உருவாக்கியிருக்கிறது தமிழக அரசு. சென்னை மாநகர (வடக்கு) இணை கமிஷனர், சி. சைலேந்திர பாபுதான் இந்தப் பிரிவின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருக்கிறார்.

"விபத்து என்பது எந்த நேரத்திலும் எந்த உருவிலும் வரலாம். அப்படி வருகிறபோது, என்ன செய்வது? யார் உதவியை நாடுவது என்று தீர்மானித்து, சம்பந்தப்பட்டவர்களை அழைத்து வந்து மீட்புப் பணியில் ஈடுபட வைக்கிறபோது ஏற்படுகிற காலதாமதத்தால், மீட்புப் பணிகளில் வெற்றி பெற முடியாமல் போகிறது. எனவே, பல்வேறு விதமான ஆபத்து, விபத்து நிகழும்போது, உடனடி மீட்பு நடவடிக்கைகளில் ஈடுபட உதவியாய் இருப்பவர்களைக் கொண்டு இந்தச் சிறப்புப் பிரிவை அரசு உருவாக்கியிருக்கிறது.

"இந்தப் பிரிவில் தீயணைப்புத் துறை, குடிநீர் மற்றும் கழிவு நீரகற்று வாரியம், மற்றும் தனியார்த் துறைகளைச் சேர்ந்த கட்டிடக்கலை வல்லுனர்கள் என்று பலதரப்பட்ட நிபுணர்களும் இடம் பெற்றுள்ளனர். தவிர, பிரத்யேகப் பயிற்சிகள் பெற்ற இருபது கமாண்டோக்களும் ஒரு வேனும் போலீஸ் கட்டுப்பாட்டு அறையில் எந்நேரமும் தயாராக இருக்கும். தகவல் கிடைத்தவுடன் ஸ்பாட்டுக்கு விரைந்து, மீட்பு நடவடிக்கைகளில் இப்பிரிவு உடனடியாக இறங்கும்.

"சென்னை மாநகரைப் பொறுத்தவரை சாலை விபத்துக்கள், கட்டிட இடிபாடுகள், கிணறு, ஆழ்குழாய்க் கிணறு வெட்டுகிறபோது உள்ளே விழுந்து சிக்கிக் கொள்ளுவது, தீவிபத்துக்கள், கடலில் எதிர்பாராதவிதமாக மூழ்குதல் போன்றவை நடக்கக்கூடும் என்று எதிர்பார்த்து மீட்கத் தயாராக இருக்கிறோம்." என்றார் சைலேந்திரபாபு.

சிவகங்கைக்கருகில் சாலையின் ஓரத்திலிருந்த ஏரிக்குள் ஒரு பஸ் விழுந்து பயணிகள் உயிருக்குப் போராட, தனியாளாய் ஏரிக்குள் குதித்து பதினெட்டுப் பயணிகளைக் காப்பாற்றியவர்தான் இந்த சைலேந்திர பாபு. இதற்காக பிரதமரின் பதக்கத்தையும் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

- மௌலி




2001 செப்டம்பர் 16
விஷு ஆவணி 31
மலர் : 60
இதழ் : 7

**கல்கி**



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# ஜெயலலிதா சந்திக்கும் முற்றுப்புள்ளி!

டான்ஸி வழக்கு விசாரணையைத் தாமதப்படுத்த ஜெயலலிதாவின் வழக்கறிஞர்கள் வரிந்துகட்டிக் கொண்டு முயற்சிகளை மேற்கொண்டனர் ஒரு காலகட்டத்தில். ஆனால் அதே ஜெயலலிதாவின் வழக்கறிஞர்கள், அவர் முதல்வராகப் பதவியேற்ற பிறகு, உயர்நீதிமன்றத்தில் மேல் முறையீட்டில் உள்ள வழக்கை முடித்தாக வேண்டும் என்று அவசரம் காட்டினர்.

இதற்கான காரணத்தையும் அவர்களே வெளிப்படையாக ஒப்புக் கொண்டனர்- நவம்பர் 13க்கு முன்னதாக ஜெயலலிதா தேர்தலில் நின்று சட்டமன்ற உறுப்பினராகத் தேர்வு பெற வேண்டும்; முதல்வராகத் தொடர வேண்டும்! ஆனால் உச்சநீதிமன்றம் இந்த அவசரத்துக்குத் தடை விதித்து டான்ஸி வழக்கு விசாரணையை நெறிப்படுத்தி யிருக்கிறது.

நீதியின் போக்கும், வழக்கு விசாரணைகளின் முன்னேற்றமும் தமது சௌகரியத்துக்கு ஏற்ப மாற்றியமைக்கப்பட வேண்டும் என்று எதிர்பார்க்கிற ஜெயலலிதா, உச்சநீதி மன்றத்தின் இந்த உத்தரவுக்குப் பிறகு தார்மிக அடிப்படையில் பதவி விலகுவார் என்று எவ்வாறு எதிர்பார்ப்பது!




தார்மிகப் பண்புகளை மதிப்பவராயிருந்தால் அவர் முதல்வர் பதவியை ஏற்றுக்கொண்டே இருக்க மாட்டாரே.

எனினும், ராஜினாமா செய்வது தவிர வேறு வழி இல்லை என்கிற நிலைமைக்குத் தள்ளப்பட்டிருக்கும் தமிழக முதல்வர் அதிக தாமதமின்றி அதைச் செய்வதன் மூலம் ஓரளவு கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

மாறாக, சட்டபூர்வமான அங்கீகாரம் பெறுவதற்கு முன்னரே மீண்டும் தேர்தலில நிற்பதற்கான முயற்சிகளில் அவர் இறங்குவாரேயானால், அந்த முடிவு சட்டத்தையும் அரசியல் சாசனத்தையும் கேலிக்கூத்தாக்குகிற அவமதிப்பாகவே அமையும்.

கடந்த சட்டமன்றத் தேர்தலின்போது நான்கு தொகுதிகளில் வேட்பு மனுத் தாக்கல் செய்து, எப்படியேனும் சட்டமன்ற உறுப்பினராகிவிட படாத பாடுபட்டார் ஜெயலலிதா. நான்கு வேட்பு மனுக்களும் நிராகரிக்கப்பட்டன. தேர்தல் கமிஷன் முறையாகவும் உறுதியுடனும் உத்தரவுகள் பிறப்பித்து தனக்கும் இந்திய ஜனநாயகத்துக்கும் ஒருங்கே ஏற்பட்டிருக்கக்கூடிய அவப் பெயரைத் தவிர்த்தது.

மீண்டுமொரு முறை ஜெயலலிதா வேட்பு மனு தாக்கல் செய்வாரேயானால் அதே உறுதியுடன் அதனை நிராகரிக்கும் பொறுப்பு தேர்தல் அதிகாரிகளுக்கும் தேர்தல் கமிஷனுக்கும் இருக்கிறது.

தற்போதைய தேர்தல் கமிஷனர் இது விஷயத்தில் விழிப்புடன் இருக்க வேண்டியது மிகவும் அவசியம்.

உச்சநீதிமன்றம், ஜெயலலிதா பதவியில் நீடிக்க தார்மிக உரிமையற்றவர் என்று விசாரணையின்போது தெரிவித்திருந்தாலும் அ.தி.மு.க.வுக்கு தமிழக சட்டமன்றத்தில்




தனிப் பெரும்பான்மை பலம் இருக்கிறது. கூட்டணி கட்சிகளும் ஆதரவைத் தொடர்வதாக அறிவித்திருக்கின்றன. இந்நிலையில், ஜெயலலிதா முதல்வராகத் தொடராவிட்டாலும் அவர் நியமிக்கக்கூடிய ஒருவரே அப்பொறுப்பை வகிப்பார் என்பது தெளிவு. கோட்டையில் இருந்தபடி ஆட்சி நடத்துவதற்குப் பதிலாக போயஸ் தோட்டத்திலிருந்தபடி, தமக்கு நம்பிக்கையான ஒருவர் மூலம் தாம் விரும்புகிற ஆட்சியையே அவர் வழங்குவார் என்பதில் சந்தேகம் இல்லை.

உயர்நீதிமன்றத்தில் நிலுவையில் இருக்கும் டான்ஸி வழக்கில், தீர்ப்பு அவருக்கு எதிராக அமைந்தாலும் உச்சநீதி மன்றத்தில் மேல் முறையீட்டுக்குப் போகலாம்.

எனவே, தமிழக அரசியலிலும் ஆட்சியிலும் ஜெயலலிதாவின் ஆதிக்கம் தொடரவே செய்யும். அ.தி.மு.க.வுக்கு வாக்களித்த தமிழக மக்கள் ஐந்தாண்டு இறுதிவரை அதை அனுபவித்தாக வேண்டும்.

இந்தச் சூழ்நிலையில், தார்மிகக் கொள்கைகளிலும் உயர் ஜனநாயக மரபுகளிலும் பற்று கொண்டவர்கள் ஒரே ஒரு விஷயம் குறித்து ஆறுதல் கொள்ளலாம்.

இதுநாள்வரை சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து தப்பி வந்த ஜெயலலிதா சட்டத்தைச் சாதகமாக வளைத்துக் கொள்ளவும் தயங்காத ஜெயலலிதா, உச்சநீதிமன்றத்தின் கண்டனத்தில் ஒரு முற்றுப்புள்ளியைச் சந்தித்திருக்கிறார்.

'ஜனநாயக அமைப்பில் நீதித் துறையும் நிர்வாகமும் சட்டமன்றமும் ஒன்றையொன்று கண்காணிக்கும் அமைப்புகளாகச் செயல்பட வேண்டும்' என்ற நமது அரசியல் சாசன அமைப்பாளர்களின் உயர்நோக்கு ஜெயித்திருக்கிறது. சட்டத்தைக்காட்டிலும் நீதி உயர்வானது என்பது அழுத்தந்திருத்தமாக இந்திய நீதித்துறை வரலாற்றில் பதிவாகியிருக்கிறது. ○




# கல்கி சூட்டும் வைரவிழா கிரீடம்!

அரசியல் தலைவர் முதல் அன்னம்மா பாட்டி வரை - கார்ட்டூனில் கேலி செய்பவர்களா?

இதோ...
கல்கி சூட்டும் வைர விழா கிரீடம்!

நீங்கள் செய்ய வேண்டியது : கல்லூரிக்கு அணி செய்யும் மாணவர் / மாணவி என நீங்கள் கருதும் இளைய வைரத்தைப் பற்றிய முழு தகவல்களோடு புகைப்படம் இணைத்து எங்களுக்கு எழுதி அனுப்பவும். 'இவர் இக் கல்லூரியின் தலைசிறந்த மாணவ / மாணவிதான்' என்று குறைந்த பட்சம் நான்கு பேராசிரியர்களாவது கையெழுத்திட்டு வழி மொழிய வேண்டும். படிப்பு, கலை, விளையாட்டு, சமூக சேவை என எந்தத் துறையில் பிரகாசித்தாலும் அத்தகைய மாறுபட்ட முகங்களைக் கண்ணாடியாய்ப் பிரதிபலிக்க நாங்க ரெடி! நீங்க?...

விவரங்கள் கல்கிக்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 10.10.01

முன்னாள் கர்நாடக முதல்வர் வீரப்ப மொய்லி வால்மீகியின் இராமாயண காவியத்தைக் கன்னடத்தில் எழுதி வருகிறார். எளிய கன்னட கவிதைகளாக உள்ள இது, ஐந்து பகுதிகளாக உருவாகிறது. முதல் பகுதி மட்டும் இப்பொழுது வெளிவந்துள்ளது. அக்கால அரசியலுடன், ஆங்காங்கே இக்கால அரசியலையும் ஒப்பிட்டு சில 'பன்ச் லைன்'களும் இதில் உண்டாம்.

- ஆர். மார்க்கண்டன், சென்னை



• வீரப்ப மொய்லி

# மொய்லியின் இராமாயணம்!

## சிலை!

மாவீரன் அலெக்சாண்டரைப் பார்க்க ஒரு விருந்தினர் வந்திருந்தார். அவரை தன் மாளிகையில் தங்க வைத்து நன்கு உபசரித்தான் மாவீரன். பின்னர் தன் தோட்டத்துக்கு அழைத்துப் போனான். இருவரும் தோட்டத்தைச் சுற்றி வந்தார்கள். தோட்டத்தில் அநேக பெரிய சிலைகள் இருந்தன. விருந்தினர் ஒவ்வொரு சிலையின் அருகிலும் நிற்பார். மாவீரன் அதன் வரலாற்றைக் கூறுவார். இவ்வாறு ஒவ்வொரு சிலையாக பார்த்துக் கொண்டே தோட்டத்தின் கடைசிக்கு வந்துவிட்டார்கள். வந்த விருந்தினர் அலெக்சாண்டரைப் பார்த்து, "இத்தனை வீரர்கள் சிலை இருக்கும்பொழுது உங்களுடைய சிலை மட்டும் ஏன் இல்லை?" என்றார். "இங்கு என் சிலையைப் பார்த்து இது யாருடைய சிலை? என வருபவர்கள் கேட்பதைவிட மாவீரன் அலெக்சாண்டருடைய சிலை ஏன் இங்கு இல்லை என கேட்பதையே நான் விரும்புகிறேன்" என்றான் மாவீரன்.

- கே. சுதர்ஷன், தூத்துக்குடி.



## கிரிக்கெட்டிலும் கட்அவுட்!

அண்மையில் இலங்கை இந்திய கிரிக்கெட் டெஸ்ட் நடந்தபோது, மைதானத்தில் இலங்கை கிரிக்கெட் வீரர் முரளீதரனுக்கு 'கட் அவுட்' வைக்கப்பட்டிருந்தது! கிரிக்கெட்டிலும் கட் அவுட் கலாசாரம் ஆரம்பமாகிவிட்டது. எங்கே போய் முடியப் போகிறதோ!

- கு. அருணாசலம், தென்காசி.

## வீரத்தை வாங்கலாமா?

படுக்கையை வாங்கலாம்; உறக்கத்தை வாங்க முடியாது. புத்தகத்தை வாங்கலாம்; அறிவை வாங்க முடியாது. உணவை வாங்கலாம்; பசியை வாங்க முடியாது. பகட்டை வாங்கலாம்; பண்பாட்டை வாங்க முடியாது. கேளிக்கையை வாங்கலாம்; மகிழ்ச்சியை வாங்க முடியாது. ஆயுதங்களை வாங்கலாம்; வீரத்தை வாங்க முடியாது. வேலைக்காரர்களை



• முரளீதரன்

• சுவாமி சின்மயானந்தர்



வாங்கலாம்; சேவை மனப் பான்மையை வாங்க முடியாது. அமைதியான சூழ்நிலையை உண்டாக்கிக் கொள்ளலாம்; ஆனால் மனச் சாந்தியை வாங்க முடியாது.

(சுவாமி சின்மயானந்தர்)

- எஸ். சுவாமிநாதன்,
மன்னார்குடி.

## முதல் பேட்டி!

பத்திரிக்கைகளுக்குப் பேட்டி அளிக்கும் முறை முதன் முதலில் அமெரிக்க ஜனாதிபதி 'ஜான் டுயின்ஸி ஆடம்ஸி'லிருந்துதான் ஆரம்பமாயிற்று. இதுவும் எளிதில் நடக்கவில்லை.

அவர் நீச்சல் குளம் ஒன்றில் குளித்துக் கொண்டிருந்தபோது நிருபர் ஒருவர் திடீரென்று, அவர் முன் தோன்றி, அவர் கரையில் வைத்திருந்த ஆடைகளின்மீது அமர்ந்து கொண்டு, 'பேட்டிக் கொடுப்பதற்கு இணங்கினால்தான் இங்கிருந்து நகர முடியும்' என்று பிடிவாதம் செய்தார்.

நீண்ட நேரம் தண்ணீரில் இருந்தவாறே மறுத்துப் பார்த்த ஆடம்ஸிக்குக் குளிர் தாளவில்லை. கரையேறி வந்தால்போதும் என்றாகி விட்டது. ஆடைகளை வாங்கிக் கொள்வதற்காக பேட்டி அளிக்க ஒப்புக் கொண்டார். இதுதான் பத்திரிகை நிருபர்களுக்கு முதன் முதல் கொடுத்த பேட்டி!

- ஏ.எஸ். யோகானந்தம், ஔவையார்பாளையம்

## அஜகர்ணன்!

யானை நான்கு கால்களையும் ஊன்றி நிற்காது. சில மனிதர்கள் ஒரு விஷயத்தில் ஊன்றாமல் மாற்றி மாற்றிக் குழம்புவார்கள். இவர்களை கஜகர்ணன் என்பார்கள்.

அஜம் என்றால் ஆடு. ஆட்டின் வாலைப் பிடித்து இழுத்தால் அது தலையைத் தொங்கப் போடும். சில மனிதர்களின் குறைகளைச் சுட்டிக் காட்டினால் தலையைத் தொங்கப் போடுவார்கள். வெறித்துப் பார்ப்பார்கள். இத்தகைய ஒருவன் அஜகர்ணன்.

கோகர்ணம் என்றால்? பசுமாட்டின் உடல்பகுதியில் எந்த இடத்தைத் தொட்டாலும் உடல் சிலிர்க்கும். அது போல அறிவாளிகள் சிறு குறையைச் சுட்டிக் காட்டினாலும் புரிந்து கொண்டு மன்னிப்பு கேட்பார்கள். "கோகர்ணம் போட்டுக் காரியத்தைச் சாதித்தான்" என்று சொல்வது வழக்கம்.

– ஸரோஜா ரங்கராஜன், சென்னை–85



# நிகில் முருகன்

திரைக்குப் பின்னால், ஒரு நொடிக்கு முப்பத்து இரண்டு பிரேம்கள் வேகத்தில் ஓடி உழைக்கும் பலரில், பட உலகிற்கும், பத்திரிகைகளுக்கும் இடையில் பாலமாய் விளங்கும் சினிமா மக்கள் தொடர்பாளர்களின் பணி, தவிர்க்க முடியாது.

பழுத்த அனுபவமும், பரவலான தொடர்புகளும் கொண்ட மூத்த மக்கள் தொடர்பாளர்களே மூச்சுத் திணறும்போது, இளைஞராய் நுழைந்து சாதித்துக்காட்டியிருக்கிறார் நிகில் முருகன்.

வலிகள் நிறைந்துகிடக்கும் இந்தத் துறையில் வென்று வந்த, தமது வழியைத் திரும்பிப் பார்க்கிறார்.



நான் பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த போது சட்டென்று ஒரு சினிமா பாடல் என்னை ஈர்த்தது. ''இருந்தாலும் மறைந்தாலும் பேர் சொல்ல வேண்டும்'' என்ற எம்.ஜி.ஆர். படப் பாடல் அது. இந்த பாடல் கொடுத்த உத்வேகத்தோடு, எப்படியும் ஒரு வெற்றிகரமான நடிகனாகிவிட வேண்டும் என்ற கனவுடன் கோடம்பாக்க வீதிகளை வலம் வந்தேன். "இப்போதைக்கு வாய்ப்புகள் இல்லை. பிறகு வாருங்கள்" என்று சிலர் மட்டுமே ஈர இதயத்தோடு பதில் தந்தார்கள். ஆனால் பலர் மனநோயாளிக்குக் காட்டுகிற குறைந்தபட்ச மனிதத்தைக் கூட காட்டவில்லை. மாறாக வெளிக்கிரக வாசியைப்போல விரட்டியடித்தனர். இயல்பாகவே எனக்கிருந்த சகிப்புத் தன்மையால், நான் இதை ஜீரணித்துக் கொண்டாலும், என்னைப் போன்று வாய்ப்புத்தேடி அலைந்தவர்களுக்கு நேர்ந்த அவமானங்களைக் கண்கூடாக கண்டதில், நடிப்பின் மீதிருந்த காதல் கசந்தது. இந்த நேரத்தில் எனக்கு நம்பிக்கையூட்டியது எனது நட்புவட்டம்.



* மகன்கள் அகில் முகிலுடன் நிகில்

"அவமானப்படுத்துவதும், அவமானப்படுவதும் இங்கே அல்வா சாப்பிடுவது மாதிரி. அதற்காக இத்தனை நாளும் கஷ்டப்பட்டு சேர்த்த சினிமா உலகத் தொடர்புகளை அறுத்துக் கொண்டு நீ எங்கே போக விரும்புகிறாய்? எல்லாத் துறைகளிலும் தோல்விகள் மட்டுமல்ல; துரோகங்களும் சகஜம். "தோற்றுக் கொண்டேயிரு; நிச்சயம் ஒருநாள் ஜெயிப்பாய்" என்று துவண்டுபோன என்னைத் தூக்கி நிறுத்தியவர் என் நண்பர்களில் ஒருவரான தங்கத்துரை. இயக்குனர் ஷங்கர் உச்சத்தை எட்டியபோது, இவரிடமெல்லாம் நமக்குப் பணியாற்றும் வாய்ப்பு கிடைக்குமா என்று

# வழிகளைத் திறந்த வலி!

தயங்கிக் கொண்டிருந்த என்னை, ஷங்கரிடம் அழைத்துப் போய் அறிமுகப்படுத்தியவரும் இதே நண்பர்தான்.

நண்பர்களின் பலம் இருந்தபோதும் நடிப்புக்கு வாய்ப்புத் தேடுவதைக் கொஞ்ச நாள் நிறுத்தி வைத்துவிட்டு, இதழியல் வகுப்பில் சேர்ந்து முதுகலைப் பட்டயம் பெற்றேன். அதற்குக் கைமேல் பலனாக பொம்மை மாத இதழ், மற்றும் தினமணி பத்திரிகையிலும், சினிமா செய்திகளைத் திரட்டித் தரும் பகுதி நேர நிருபர் பணி கிடைத்தது.

நடிகர் விவேக்கை எனது முதல் பேட்டிக்காக சந்தித்தேன். முதல் சந்திப்பிலேயே என்னை அவருக்கும், எனக்கு அவரையும் பிடித்துப் போய் நண்பர்களானோம். அப்போது அவர், தனியார் தொலைக்காட்சி ஒன்றுக்காக 'கவுன்டவுன்' நிகழ்ச்சியைத் தயாரித்துக் கொண்டிருந்தார். அதில் நடிக்க எனக்கு வாய்ப்பும் கொடுத்தார். நான் அவரது நண்பர் என்பதால், படப்பிடிப்புக் குழுவினர் என்னை விழுந்து விழுந்து கவனித்தார்கள். இது வெற்றி பெற்றவர்கள் மட்டுமே கண்ணுக்குத் தெரிகிற துறை என்ற ஞானோதயம் அப்போதுதான் பிறந்தது. நடிப்பாசையும் என்னைவிட்டுப் பறந்தது.

ஒரு புறம் பத்திரிகைப் பணிக்காகவும், மறுபுறம் சினிமா நண்பர்கள் கேட்கிற உதவிகளை உடனடியாக முடித்துக் கொடுக்கவும் நான் ஓடிக் கொண்டிருந்தேன். எட்டாம் வகுப்பு படிக்கிறபோது, காலை ஐந்து மணிக்கு எழுந்து வீடு விடாகப் போய்ச் செய்தித்தாள் போடுகிற 'பேப்பர் பையனாக' நான் கற்றுக் கொண்டது காலந்தவறாமை. அதே வேகத்தை, செய்தி சேகரிப்பிலும் காட்டினேன்.

"காலில் என்ன சக்கரம் ஏதாவது கட்டிக் கொண்டிருக்கிறாயா, சொன்ன நேரத்திற்கு வந்து விடுகிறாயே?'' என்ற நண்பர்களின் வியப்பு என்னைக் குழப்பக் கூடச் செய்யும். நமது இயல்பான வேகத்திற்கே இத்தனை பாராட்டா? என்று ஆச்சர்யமாகவும் இருக்கும். இதுபோன்று பாராட்டு மழை பொழியப்படுகிறபோது, நாம் ஏன் ஒரு திரைத்துறை மக்கள் தொடர்பாளனாக மாறக்கூடாது? என்ற கேள்வி எனக்குள் எழும். பத்திரிகைக்கு செய்தி சேகரிப்பதற்கும், செய்தி கொடுப்பதற்கும் அடிப்படையில் வேறுபாடு இருந்தாலும், இறுதியில் இரண்டும் ஒன்றுதான் என்று எனக்குத் தோன்றியது. எனது விருப்பத்தை நண்பர்களிடம் சொன்னேன். "பெரிய ஜாம்பவான்கள் கோலோச்சுகிற துறையிது; எதற்கும் ஒருமுறை யோசி'' என்றார்கள். ''உங்களைப் போன்ற நண்பர்கள் இருக்கிறபோது நான் எதற்கு யோசிக்க வேண்டும்'' என்றேன்.

நண்பர் விவேக் என்னை இயக்குனர் சரணிடம் அழைத்துப் போனார். சரண் கவிதாலயா என்கிற கோட்டைக்குள் என்னைக் கூட்டிப் போனார். பாரதிராஜா, சேரன் போன்ற மண்ணை மதிக்கிற கலைஞர்களிடம் என்னைக் காட்டி, இவன் நல்ல நண்பன் என்று தொழிலுக்கு அப்பாற்பட்ட தோழமை காட்டினார். இயக்குனர் வசந்த் மூலம், மணிரத்னம். கே.வி. ஆனந்த் மூலம் பி.சி.ஸ்ரீராம் என்று நண்பர்கள் மூலமே நான் தூரமாய் நின்று ரசித்த செல்லுல்லாய்டு சிற்பிகளிடம் செல்லப் பிள்ளைபோல் பணியாற்றிக் கொண்டிருக்கிறேன்.

நான் பணியாற்றிய முதல் படம் 'உல்லாசம்'. பெரிதும் எதிர்பார்க்கப்பட்ட அந்தப் படம் தோல்வியடைந்தது. 'இந்த ஆள் அதிர்ஷ்டமில்லாதவன், இவனைப் போட்டால் தோல்வி நிச்சயம்' என்று எனக்கு எதிராக பிரசாரம் நடந்தது. பிரசாரம் செய்தவர்கள் மீது எனக்குக் கோபம் வரவில்லை. 'Best way of revenge is living well before them' என்ற ஜப்பானியப் பழமொழி எனக்கு வழி காட்டியது. அவர்கள் முன்னால் வாழ்ந்துகாட்ட விரும்பி, எனக்கெதிரானவர்களை என் நினைவு அடுக்களில் இருந்தே நீக்கினேன். தொண்ணூறு சதவிகிதம் கடின உழைப்பையும், பத்து சதவிதம் விதியையும் மட்டுமே நான் நம்பினேன். நம்புகிறேன். சினிமா உலகில் இருந்து கொண்டே இதை அழுத்தம் திருத்தமாக என்னால் சொல்ல முடியும். எனவே உழைத்தேன். உழைத்துக் கொண்டேயிருந்தேன். உழைத்துக் கொண்டேயிருப்பேன். திருப்பு முனையாக எனக்கு 'முதல்வன்' பட வாய்ப்புக் கிடைத்தது. இயக்குனர் ஷங்கர் அடிக்கடி சொல்லிக் கொண்டேயிருப்பார். ''ஒரு நாளைக்கு ஒரு அங்குலமாவது முன்னேற்றம் இருக்க வேண்டும். அதற்கு



உழைக்க யோசிக்கவே கூடாது" என்று. அதை அப்படியே பின்பற்றினேன்.

எனது பட நிறுவனத்திற்கு என்ன தேவையோ அதைச் செய்து கொடுப்பதுதான் என் வேலை. அதே நேரம் ஊடகங்களுடனான எனது உறவில் எந்த பாகுபாட்டையும் நான் கடைபிடிப்பதில்லை.

கொடுக்கும் செய்தியில் 'நியூஸ் அக்யூரசி' எத்தனை முக்கியமோ அது போன்றுதான் மக்கள் தொடர்பு பணிக்கும் 'உண்மை தன்மை' ஆக்ஸிஜன் போல அவசியம். இதைக் கடை பிடிக்க முடியாவிட்டால், ஒன்று இந்த துறையைவிட்டு நாம் வெளியேறி விடுவது நலம். இல்லையெனில் வெளியேறும்படி நேர்ந்துவிடும். இங்கே எனக்கு வழிகாட்டியாக விளங்கும் பலரில் ஒருவராக நான் மதிக்கும் குட்லக் ப்ரிவியூ திரையரங்கின் மேலாளர் கல்யாணத்தின் வார்த்தைகள் எனக்கு வேதமாகப் பயன்பட்டு வருவதைச் சொல்ல விரும்புகிறேன்.

"உண்மைக்கு ஞாபக சக்தி தேவையில்லை. நாம் பொய் பேசினால்தான், திரும்பப் பேசும்போது, என்ன பேசினோம், இப்போது என்னப் பேசப் போகிறோம் என்று திட்ட மிடத் தோன்றும். அது உங்கள் முகத்திரையை விலக்கிக் காட்டிவிடும்" - இந்த வார்த்தைகள் எத்தனை யதார்த்தம். எனவே யதார்த்தமான மக்கள் தொடர்பாளனாக நான் தொடர் கிறேன்.

இந்தத் துறையில் உழைப்பும் அதிகம், களைப்பும் அதிகம். இழப்புகளும் சகஜம். ஒரு நாளைக்கு நான்கு மணி நேரம் மட்டுமே என்னால் உறங்க முடிகிறது. "இரவு ஒரு மணிக்கு வருகிறீர்கள். நாம் சந்தோஷமாய்ப் பேசிக் கொண்ட நாட்களைக் குறித்து வைத் திருக்கிறேன். முக்கிய முடிவுகளைக்கூட தொலைபேசி மூலம் எடுக்க வேண்டியிருக் கிறது" என்று கடிந்து கொள்கிறார் மனைவி.

'நாணயத்தின் இரண்டு பக்கங்களில் இருக்கும் பூவும், தலையும் சந்தித்து கொள்ள முடியாதுதான். ஆனால் ஒரே நாணயத்தில் அல்லவா இரண்டும் இடம் பிடித்திருக்கின்றன' என்று நான் அவளுக்கு நம்பிக்கையூட்டுவேன். எனது குழந்தைகள் உறங்கிய பிறகு இல்லம் சென்று, அவர்கள் விழிப்பதற்கு முன் வெளி யேற வேண்டிய இந்தப் பணியில், சரியான நேரத்திற்கு உணவும் உண்ண முடியாது. இதனால் வயிற்றுப் புண்ணால் பாதிக்கப்பட்டு, குடல்வால் அறுவை சிகிச்சையும்கூட செய்து கொள்ள வேண்டி வந்தது. இதுபோன்ற இழப்புகளை ஏற்றுக் கொள்கிற நெஞ்சுரத்தைத் தருவது, இந்தப் பணியில் கிடைக்கும் புகழும், பொருளும் மட்டுமல்ல, ஆத்மதிருப்தியும்தான். பத்திரிகை நண்பர்களும், பட நிறுவனங்களும் என்மீது வைத்திருக்கிற நம்பிக்கையை, துலாக்கோல்போல துல்லியமாய் காப்பாற்ற முடிவதில் கிடைக்கிற மகிழ்ச்சியின் மூலம் தான், என்னை நான் சுறுப்சுறுப்பாகவும், உற்சாகமாகவும் வைத்துக் கொள்கிறேன்.

இந்தத் துறைக்கு மொழிகளின் பரிச்சயம் தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது. தொடக்கத்தில் தமிழும், ஆங்கிலமும் தெரிந்த நிலையில், தென்னக மொழிகளைக் கற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயம். படிப்படியாக முயன்று தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி போன்ற மொழிகளைச் சரளமாய்க் கற்றுக் கொண்டேன். இப்போது ஜப்பானிய மொழியைக் கற்று வருகிறேன்.

சினிமா மக்கள் தொடர்பில் நான் கற்றுக் கொண்ட விஷயங்கள் பலவுண்டு. ஈகோ நிறைந்த சினிமாவில் ஒரு மக்கள் தொடர் பாளர் ஈகோவுடன் இருக்கக்கூடாது. அவசரப்பட்டு முடிவெடுத்துவிட்டு, நிதான மாக வருத்தப்படக் கூடாது. குடையில் ஓட்டை விழுந்தால் வருத்தப்படுவதை விட்டுவிட்டு, அந்த ஓட்டை வழியே வானத்தைப் பார்க்கலாம் என்ற மனநிலையை வளர்த்துக் கொள்ள வேண்டும். எச்ஐவி வைரஸ் தவிர எல்லாவற்றையும், பாசிட்டிவாக எடுத்துக் கொள்ள வேண்டும். மக்கள் தொடர்பில் வலிகள் அதிகமிருக்கலாம். அதற்காக இங்கிருந்து வெளியேறிவிடுவது ஒரு போதும் நம்மை உயர்த்தாது. வலிகள்தான் எனக்கு வழிகளைத் திறந்துவிட்டன. எனவே வலிந்து ஏற்றுக் கொள்கிறேன்.

- சந்திப்பு : **ஜெயந்தன்**

படங்கள் : **சங்கர்சத்தியமூர்த்தி**

---

**"என்ன சொல்றீங்க சார்...? இன்னிக்கு உங்க வீட்டுல கவுன்சிலிங்கா..?"**

**"ஆமாங்க; மருமக புதுசா வரால்ல... கவுன்சிலிங் பண்ணித்தான் சேர்த்துப் பேன்னு மாமியார் கண்டிஷனா சொல் லிட்டா...!"**

*- கே.ஜி.எஸ்.கோவிந்தன்*



# 23



“இருப்பதை விட்டுப் பறப்பதற்கு ஆசைப் பட்டிருக்க வேணாம்” என்றபடி பூசணிக்காய்க் கூட்டை சிவப்ரியாவின் தட்டில் வழித்துப் போட்டாள் அவள் அம்மா.

“போதும்மா” என்றாள் சிவப்ரியா பொறுமைச் சிரிப்புடன்.

“எதுடீ? கூட்டா, என் பேச்சா?”

“ரெண்டும்தான். முக்கியமா உன் பேச்சு.”

அம்மா பேச்சை நிறுத்திக் கொள்வதாக இல்லை. “பெரிசா அந்த ப்ரொபசர் ராம்ஷேகரை பூஜை செஞ்சியே, இப்ப என்ன ஆச்சு? குருதட்சணையா உன் வேலையைக் கேட்டு வாங்கிண்டுட்டார்!”

“இல்லம்மா. நானேதான் விட்டுட்டு வந்தேன்.”

அம்மா அவளை உற்றுப் பார்த்தாள். “அப்படியா? ஏன் வந்தே? கிராமம் பிடிச்சுப் போச்சா? அல்லது அம்மா பாசம் பொங்கிடுச்சா?”

சிவப்ரியா மௌனமானாள்.

“உன்கிட்ட பதில் இல்லடீ. ஏன்னா நீயா இங்க வரல்ல. உன்னைப் போகும்படி வச்சுட்டார் அந்த மகானுபாவன்.”

சிவப்ரியா தன்னையே நொந்துகொண்டாள். ரயில் நிலையத்திலிருந்து ஜட்கா வண்டியில் வீடு வந்து சேர்ந்ததும், விழி விரியப் பார்த்து ஓடி வந்து கைகளைப் பிடித்துக்கொண்ட அம்மாவைக் கண்டதும் என்றுமில்லாத திருநாளாக மனச்சுமையை இறக்க வேண்டுமென்று ஏன்தான் தோன்றியதோ! இப்போது டாக்டர் ராம்ஷேகரை அம்மா இகழும்போது தாங்கிக் கொள்ள முடியவில்லை.

தட்டில் இருந்ததை ஒரே வாயில் விழுங்கி, தண்ணீரால் அதை உள்ளே தள்ளிவிட்டு எழுந்தாள் சிவப்ரியா.

அன்புத் தொல்லை என்பதற்கு உதாரணமாக அம்மாவைச் சுட்டிக்காட்டி விடலாமெனத் தோன்றியது.

“உனக்குப் பிடிக்குமென்று லாலா கடையிலேயிருந்து காராசேவ் வாங்கிண்டு வந்தேன்... உனக்குப் பிடிக்குமேன்னு எதிர்வீட்லேயிருந்து மருதாணி பறிச்சிண்டு வந்தேன். ராத்திரி இட்டு விடறேன்.”

அம்மாவைப் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இந்தக் காராசேவ், மருதாணி இன்னபிற வஸ்துக்களின் மீதுள்ள மோகமெல்லாம் பள்ளியிறுதி நாட்களிலேயே மறைந்துவிட்டது. அது அம்மாவுக்கும் தெரியும். இருந்தும் ஏற்க மறுக்கிறாள்.

“ஏன் இப்படி அழுத்தமாயிருக்கே. உனக்கு என்னதான் பிடிச்சிருக்குன்னு வாயைத் திறந்து சொல்லேன்.”

தனிமைதான் தனக்குப் பிடித்திருக்கிறது என்பதை எப்படிச் சொல்ல? மனப்புண்ணுக்குத் தனிமை மருந்தோ இல்லையோ, அம்மாவைப் போல அது கீறி மேலும் ரணமாக்காது.

சிவப்ரியாவின் கண்கள் நிறைந்தன. தன் வாழ்வில் எப்படிப்பட்ட சறுக்கல்!

“அழாதேடீ. என்னாலே உன்னைப் புரிஞ்சுக்க முடியுது. தாயறியாத சூல் உண்டா? அந்த ஆனந்த் இல்லேன்னா வேறொரு ஆனந்த். உன் அழகுக்கும், படிப்புக்கும் வரன்கள் வந்து வரிசையிலே நிக்கும்.”

அழகி, கல்வியறிவு கொண்டவள் என்பதோடு நடிகை என்ற கூடுதல் தகுதி வேறு! ஆக, கண்ணுக்குத் தெரியாத நியதியின்படி ஒரு திரைப்பட இயக்குனரோ வெளிநாட்டுத் தொழிலதிபரோதான் தனக்கு ஜோடி! துக்கத்திலும் சிரிப்பு வந்தது.

“அம்மா, ஆளை விடு. ஆனந்தோ வேறே ஆனந்தோ என் பிரச்னை இல்லே.”

“அப்படின்னா?”

“காதலோ கல்யாணமோ எனக்குப் பெரிய விஷயம் இல்லேங்கிறேன்.”

“மறைக்காதே. நேத்து ராத்திரி கூட அந்தப் பையனை நினைச்சுத்தான் நீ அழுதுண்டிருந்தேன்னு எனக்குத் தெரியும்.”

“சுத்த அக்மார்க் பைத்தியக் காரத்தனம்.”

“அதெப்

படி? அவன் வேறொருத்தியைக் கல்யாணம் செய்துண்டதிலே உனக்குக் கொஞ்சம்கூட வருத்தம் இல்லையா?"

"கொஞ்சம் என்ன, நிறையவே இருந்தது. ஆனா கொஞ்ச நாளிலே மனசைத் திடப் படுத்திக்க முடிஞ்சது."

"அதெப்படி முடியும்? கல்யாணம் செய் துண்ட ரெண்டே மாசத்திலே என்னை விட்டுட்டுப் போயிட்டார் உங்கப்பா. இன் னமும் என் மனசு முழுசா சமாதான மாகல்லியே."

தான் தவறான முறையில் ஒப்பீடு செய் திருக்கிறோம் என்பது அம்மாவுக்கே விளங்கியிருக்க வேண்டும். படபடப்புடன் தொடர்ந்தாள். "ஒருத்தனை மனப் பூர்வமாக விரும்பிட்டு, அவன் கிடைக் கலேன்னதும் சட்னு மனசை ஸ்விட்சு போட்ட மாதிரி மாத்திக்க முடிஞ்சா அது என்ன தெய்வீகக் காதல்?"

"என்னுடையது அந்த மாதிரிப் பிரியம் இல்லேம்மா. கொஞ்சம் சுயநலத் தோடதான் ஆனந்த்தின் காதலை ஒத்துக் கிட்டேன். அதனாலேதான் அவர் விலகியதைச் சீக்கிரம் ஜீரணிக்க முடிஞ் சது."

"என்ன சுயநலம்?"

"ஆனந்த் என்னை விரும்புவதை வெளிப்படுத்தினப்போ நான் உடனே ஒத்துக்கலே. மருத் துவப் படிப்புக்கோ பின்னாலே நான் டாக்டரா ப்ராக்டிஸ் செய்யவோ எங்க காதலும் கல்யாணமும் இடைஞ்சலா இருக்கக்கூடாதுன்னு ப்ராமிஸ் வாங்கிண்டேன். அதுமட்டு மில்லை; ப்ரொபசர் ராம்ஷேகர் சம்மதிச் சாதான் கல்யாணம்னும் சொன்னேன். ஆக என் டாக்டர் வாழ்க்கைதான் எப்ப வுமே என் முதல் குறியாக இருந் திருக்கு."

"அதுக்கும்தான் வேட்டு வச்சிட்டாரே அந்த ஆள். சரி விடு. உனக்கு வேறெங் கேயும் நல்ல வேலை கிடைக்காதா என்ன? இந்த ராம்ஷேகர் இல்லேன்னா வேற ராம்ஷேகர். லோகத்திலே க்ளினிக் குகளுக்கா பஞ்சம்?"

முதலில் ஆனந்த். இப்போது ராம் ஷேகர். டக்கென்று மாற்றுப் புலப்பட்டு விடுகிறது அம்மாவுக்கு!

"ஆனா ஒண்ணு சிவப்ரியா. உன் மனசை ஒடிச்சு அனுப்பின அந்த ராம் ஷேகர் என்ன பெரிசா வாழ்ந்திடப் போறாருன்னு பார்க்கறேன்."

"வாயை மூடும்மா. நன்றி கெட்டத் தனமா பேசாதே."

"என்னடீ நன்றி? நீ அற்புதமா படிச்சே. அதனாலே ஒரு குருன்ற முறையிலே அவ ருக்கு உன் மேலே வாத்சல்யம். நீ ஒரு திறமையான டாக்டர். அதனாலே தன் க்ளினிக்கிலே சேர்த்துண்டார். வாடகை யில்லாம தன் அவுட்ஹவுசிலே உன்னைத் தங்க வச்சார். அவ்வளவுதானே."

எவ்வளவு சுலபமாகத் தவறாக எடை போடுகிறாள்! அவரும் அவர் குடும்பமும் தனக்களித்த பாசமும், பாதுகாப்பும் அளவிடக் கூடியதா?

"ஏம்மா, நீ என்னைப் பெத்தே, வளர்த்தே அவ்வளவுதானேன்னு நான் சொன்னால் அது நியாயமா?"

அம்மாவின் முகம் சிவந்தது. தன் கண வரின் புகைப்படத்தை உற்றுப் பார்த் தாள். பின் "இப்பவும் நான்தான் உனக்கு ஆதரவாயிருக்கேன். அந்த ராம் ஷேகர் இல்லே" என்றாள் உடைந்த குர லில்.

"என்னைத் தலை முழுகினதா ஆக் ரோஷப்பட்ட நீ எனக்கு இப்போ ஆதரவா இருக்கேன்றியே. அந்த மாதிரி டாக்டரும் என்னைத் திரும்பக் கூப்பிடுவார்."

அழுத்தமாக பதிலளித்தாலும், அம்மா விடம் பரிதாபம் ஏற்பட்டது. தன்னுடை



**"பேப்பரைப் படிச்சிட்டு கடுகடுனு இருக்கீங்களே! எரிச்சலூட்டும் செய்தி எதுவும் இருக்கா?"**

**"ஆமா! இனிமேல் என்னிடம் ஓசிப் பேப்பர் வாங்கிப் படிக்க வேண்டாம்னு எதிர்வீட்டு முனுசாமி முதல் பக்கத் திலேயே எழுதி வச்சிருக்கான்...!**

**— உ. ராஜாஜி**

யதைப் போலவே மகளின் வாழ்வும் தொலைந்துவிடப் போகிறதே என்ற பயம் அவளுக்கு. பாவம்!

"ஏம்மா, மருதாணியை ஒரு மூணு மணி நேரம் வச்சுண்டா போதாது?"

அம்மாவின் முகத்தில் பிரகாசம் ஏற்பட்டது. "என்ன புதுசாக் கேக்கறே? ராத்திரி பத்து மணிக்கு நான் வச்சேன்னா..."

சிவப்ரியா புன்னகையை அடக்கிக் கொண்டாள்.

"ஸ்பெஷல் பார்ட்டி தரணும் எங்களுக்கு" என்றார் முகர்ஜி.

"போய் வந்த பிறகுன்னு நழுவக் கூடாது நாளைக்கே கொடுக்கணும்" என்றான் ஆனந்த்.

"வீட்டுக்கும் ஸ்வீட் பார்சல் குடுக்கணும்" என்றாள் லோலிடா.

டாக்டர் ராம்ஷேகர் இந்த வற்புறுத்தல்களை மிகவும் ரசித்துக் கொண்டிருந்தார்.

"கொஞ்சம் விட்டா நம்ம க்ளினிக்கிலே அட்மிட் ஆகியிருக்கிற டயபடிக் நோயாளிகளுக்குக் கூட ஸ்வீட் தரச் சொல்வீங்க போலிருக்கே."

"ஏன் கூடாது? இது அப்படிப்பட்ட விசேஷமாச்சே" என்றன பல குரல்கள்.

தனது பல்வேறு ஆராய்ச்சிகள் குறித்து உலகப் புகழ் பெற்ற மருத்துவ அமைப்புகளுக்கு அவர் அவ்வப்போது தெரியப்படுத்துவதுண்டு. ஆனால் அதற்கு இப்படியொரு அங்கீகாரம் கிடைக்குமென்பதை அவரே எதிர்பார்க்கவில்லை.

லண்டனில் நடைபெறவிருக்கும் சர்வதேச மருத்துவ மாநாடு ஒன்றிற்கு அவர் தலைவராகத் தேர்வு செய்யப்பட்டிருக்கிறார்.

வீட்டுக்கு வந்தவுடன் மனைவியிடம் இதைத் தெரிவித்தபோது ஒரு குழந்தையின் குதூகலத்தை அவள் முகத்தில் தேடி ஏமாந்தார்.

"நான் சொன்னது காதில் விழல்லியா?"

"விழுந்தது" என்ற மாமி "அந்த வேணுவுக்காக நம்ம ப்ரியாவை க்ளினிக்கை விட்டனுப்பியது சரியா?" என்றாள்.

சிவப்ரியாவுக்கு ஒரு பெரும் அநீதி நடந்திருக்கையில் மற்ற எதற்காகவும் சந்தோஷப்படுவது துரோகம் என்ற மன



'ஏரியா கவுன்சிலரை கட்சில சஸ்பெண்ட் பண்ணிருக்காங்களே... ஏன்?'

''இதுவரை ஒருதடவை கூட நகராட்சி மீட்டிங்ல இவர் கலாட்டா பண்ணலைனு மேலிடத்துக்குத் தெரிஞ்சு போச்சாம்!''

— அம்பை தேவா

நிலையில் மனைவி இருப்பது தெளிவாகவே புரிந்தது.

வாசலில் ஏதோ கார் நின்றது.

"இதோ பாரு கல்பகம். அவனை அனுப்பலேன்னா அந்த வேணு நம்ம க்ளினிக் மேலே வழக்குத் தொடுத்திருப்பான்."

"அது நிக்குமா?"

"அது இல்ல பிரச்னை. 'அனு க்ளினிக்'கின் இமேஜ் சரிஞ்சிடும். அதற்கு நான் அனுமதிக்க மாட்டேன். சிவப்ரியாவின் புத்திசாலித்தனம் எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஆனா அவளோட சினிமா நிழல் அடிக்கடி அவ மருத்துவ வாழ்க்கையிலே குறுக்கிடறது. அது அவளுக்கும் நல்லதில்லே, நம்ம க்ளினிக்குக்கும் நல்லதில்லே. வேறே மாற்று வழியை யோசிக்கணும்."

"அதாவது மீண்டும் ப்ரியாவை உங்க க்ளினிக்கிலே சேத்துக்கப் போறதில்லேன் நீங்களா? இதைவிட ஒரு துரோகம் இருக்க முடியாது டாக்டர். செய்து கொடுத்த சத்தியத்தையும் மீறி சில விஷயங்களை நான் சொல்லித்தான் ஆகணும்" என்றாள் அங்கு நுழைந்த முத்துலட்சுமி.

(தொடரும்)

"அண்ணன் தம்பி கதைதானுங்களே... கட்டுச் சோறு கட்டிகிட்டுப் போயி குடும்பத்தோட க்யூவுலே நின்னு பார்ப்போமுங்கோய்..." என்று தமிழ் ரசிகர்கள் தயாராய் இருக்கிறபோது சௌத்ரி மாதிரியான தயாரிப்பாளர்கள் 'ஆனந்தமாய்' ஆயிரம் படமெடுப்பார்கள் என்பதற்கு சமுத்திரம் ஒரு மூர்மார்க்கெட் சாம்பிள்.

இதில் மூன்று அண்ணன்களோடு ஒரு அன்புத்தங்கையின் பாசம், அந்த தங்கையைப் பகடை மலராக்கி, அவளின் அண்ணன்களைப் பழிவாங்கும் எம்.ஜி.ஆர். காலத்து பண்ணையார் வில்லன். சரத் – அபிராமி, முரளி – சிந்து, மனோஜ் –

வேதம்



தேசப்பற்றுக்குக் கொஞ்சம் ஓய்வு கொடுத்துவிட்டு, பாசப் பற்றைக் கையிலெடுத்திருக்கும் அர்ஜுன் அசத்தலாய் ஒரு சிக்ஸர் அடித்திருக்கிறார்.

மணமாகி முதல் அனிவர்சரி கொண்டாடும் முன்பே ஈகோ போரில் இருவேறு துருவங்களாகி விடுகிறார்கள், வினித்தும் திவ்யா உன்னியும். ஒரே வீட்டில் வசித்துவரும் இருவரையும், வழிப் போக்கராய் வரும் அர்ஜுன் எப்படிச் சேர்த்து வைக்கிறார் என்பதுதான் கதை!

முதுமையின் முகவரியே அறியாதவர் போல, இளமைத் தோற்றத்தில் வளைய வரும் அர்ஜுன், வழக்கம்போல் சண்டைக்காட்சிகளில் ஜொலிக்கிறார். வினித் – திவ்யா இருவரும் மோதிக் கொள்கிற காட்சிகளில் எரிமலைக் குழம்பு போல நெருப்பும், நடிப்பும் அனல் பறக்கிறது. சாக்ஷிகூட நடிக்க முயற்சி செய்திருப்பது ஆச்சர்யம்!

இரண்டே இரண்டு காட்சிகளில் வந்து படத்திற்கு மதிப்பு கூட்டி விட்டுப் போகும் விசுவின் நாடகத்தனம் தெரியாத நடிப்பிற்கு ஒரு சல்யூட் வைக்கலாம்.

நறுக்குத் தெறித்த மாதிரி சின்னச் சின்ன ப்ளாஷ் பேக்குகளில் ஸ்டோரிலைனை அமைத்திருக்கும் அர்ஜுனின், குழப்பமில்லாத திரைக்கதைக்கு ஒரு ஷொட்டு. சாய்சுரேஷின் தேர்ந்த படத்தொகுப்பு கை கொடுத்தும் படம் மெல்ல நகருவதால் ஒரு குட்டு.

மோனல் ஆகிய மூன்று ஜோடிகளுக்கும் தலா ஒரு டூயட். இடையிடையே கொஞ்சம் டுஷ்யூம், டுஷ்யூம். ஆஹா! தமது புரட்சிகர பார்முலாவிலிருந்து அங்குலம்கூட விலகி விடாமல் படமெடுத்திருக்கும் ரவிகுமாரின் தொழில் பக்தியை என்னென்று சொல்வது? பண்ணையாரின் பழி வாங்கலுக்கு, இயக்குனர் சொல்லியிருக்கும் காரணம், பலவீனத்தின் மொத்த உருவம்.

கர்ப்பஸ்திரீயின் வயிற்றை உருட்டுக்கட்டை கொண்டு தாக்குதல், அவனின் பாதங்களைப் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியால் சூடு போடுதல் போன்ற, தமிழ் ரசனையை மேலும் மழுங்க அடிக்கும் காட்சிகளோடு, சில நம்பிக்கையூட்டும் காட்சிகளும் படத்தில் உண்டு.

முரளியின் முறைப்பெண்ணாக வந்து, இரண்டாவது பாதியில் எல்லோரையும் வசீகரித்துவிடும் துறுதுறு சிந்துவும், அறிமுக இசை அமைப்பாளர்கள் சபேஷ் - முரளியும் அற்புதமான தேர்வு.

கதையோட்டத்தோடு வந்து காமெடி பண்ணும் கவுண்டமணி - செந்தில் ஜோடி கொஞ்சம் ஆறுதல்.

சினிமா 'கனவுலகம்' என்பதை அப்படியே புரிந்துகொண்டிருக்கும் இயக்குனர், தமது சீடர் சேரனைப் பார்த்தாவது கொஞ்சம் யதார்த்தமாய்ப் படமெடுக்கக் கற்றுக் கொள்ளலாம்.

● ஆவரெஜ்



நடைமுறை வாழ்க்கையோடு நூறு விழுக்காடு பொருந்திப் போகிற வசனங்கள்தான் (எழுதியவர் அர்ஜுன்?) படத்தின் முதுகெலும்பு.

லாஜிக் இல்லாவிட்டாலும், 'ரன் லோலா ரன்' ஜெர்மன் படத்தை ஒரு பாடல் காட்சிக்கு உல்டா செய்த விதத்தை ரசிக்கலாம். 'மலைக்காற்று வந்து தமிழ்ப் பேசினாலும்' - பாடல்கள் திணிக்கப்பட்டிருப்பது வெளிப்படையாகத் தெரிவதால் வித்யாசாகரின் உழைப்பு வீண்.

சில திடுக் சினிமேட்டிக் திருப்பங்களைத் தவிர்த்துவிட்டுப் பார்த்தால், இன்றைய தேதிக்கு அவசியமான செல்லுல்லாய்டு க்ளாஸ் ரூம்.

— விஷ்வல்தாசன்

● ஆவரெஜ்

# முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

மருத்துவத்தில் இன்று எத்தனையோ விஞ்ஞான முன்னேற்றங்கள் இருந்தாலும், குழந்தைச் செல்வம் உண்டாவது என்பது 'இறைவன் கொடுத்த வரம்' போல் ஆகி விட்டது.

''குழந்தைப்பேறு இல்லாத தம்பதியரில், குறை பாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி, அவர்களை இயற்கையாகவே குழந்தைபேற்றுக்குத் தகுதி உள்ளவர்களாக ஆக்கும் – பக்கவிளைவுகள் இல்லாத சிகிச்சை, நாங்கள் கடைப்பிடிக்கும் 'ஹோமியோபதி – சித்தா – ஆயுர் வேதம்' என்ற முக்கூட்டு மருத்துவ முறையாகும்'' என்று கூறுகிறார் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி யில் பிராமணர் தெருவிலும், சென்னை வடபழனி யில் 100 அடி சாலையில் கவுரி சங்கர் திருமண மண்டபம் எதிரிலும் சிகிச்சை நிலையங்கள் நடத்தி வரும் டாக்டர் ஏ. அர்ஜுனா.

''கடந்த 40 ஆண்டுகளுக்கும் மேலான என் மருத்துவ அனுபவத்தில் ஆயிரக்கணக்கான தம்பதியர்களுக்குச் சிகிச்சையளித்திருக்கிறேன்.



• உயிரணு உற்பத்தி ஆகியும், கருப்பை கோளாறுகள் நீங்கியும் குழந்தை பெற்ற சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா - அலமேலு தம்பதியர் உலகப் புகழ்பெற்ற மருத்துவத் திலகம் டாக்டர் அர்ஜுனாவுடன்.

''என்னிடம் வரும் தம்பதியரில் ஆண்களில் 70 சதவிகிதம் பேரும், பெண்களில் 30 சதவிகிதம் பேரும் குறைபாடு உடையவர்களாக இருக்கிறார்கள்'' என்று விவரம் தெரிவித்தார் அர்ஜுனா.

குழந்தைப்பேறு இல்லாமல், குடும்பத்தில் பிரச்னைகள் ஏற்பட்ட காரணத்தால் தற்கொலைக்கு முயன்ற பெண்களை, தனது சிகிச்சை முறையில் தடுத்து நிறுத்தியிருப்பதாகக் கூறுகிறார் டாக்டர் அர்ஜுனா. அதுபோல், ''மனைவிக்குக் குழந்தை இல்லை என்பதற்காக மறுமணம் புரியவிருந்த கணவன் மார்களுக்கு நம்பிக்கையூட்டி, அவர்கள் குடும்பத்தில் குழந்தைச் செல்வம் உண்டாக்கி மகிழ்ச்சியூட்டியிருக் கிறேன்''என்கிறார் அவர்.

''எங்களிடம் வரும் தம்பதியரிடம் சிகிச்சைத் தொடங்கும் முன் கணவனின் உயிரணு உற்பத்திச் சரியாக இருக்கிறதா என்பதைக் கண்டறிய விந்துப் பரிசோதனை செய்யச் சொல்வோம். அதில் குறை பாடு இருந்தால் எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் சரியாகும் வரை அவர்களுக்குச் சில கட்டுப் பாடுகளுடன் சிகிச்சை அளித்து, உயிரணுக்கள் உற் பத்தி செய்து அணுக்களின் எண்ணிக்கை – உயிரோட் டத்தை அதிகரிக்கச் செய்து கருத்தரிக்கச் செய் கிறோம்.

பொதுவாக ஓர் ஆணின் உயிரணுக்களின் எண் ணிக்கை சராசரியாக 100 முதல் 150 மில்லியன் வரை இருக்கும். அந்த அணுக்களின் உயிரோட்டம் மொட்டிலிட்டி 80 சதவிகிதத்திற்கு மேல் இருக்க வேண்டும்.

நாங்கள் சராசரிக்கும் குறைவாக உள்ளவர்களைக் கூட புத்திரபாக்கியத்திற்குத் தகுதி உடையவர்களாக ஆக்கியிருக்கிறோம். ஆண்தன்மை அறவே இல்லாத ஆண் மகனுக்கு ஆண் தன்மை உண்டாக்கிப் புத்திர பாக்கியம் உண்டாக்கியிருக்கிறோம்.

எங்களிடம் சென்னையில் சிகிச்சைக்கு வந்த ஒரு ஆணுக்கு 3.2.2000ல் கவுண்ட் 6 லட்சமும், மொட்டிலிட்டி 50% இருந்தது. அவர் மருந்து சாப் பிட்டு ஒரு மாதத்திற்குள் செமன் டெஸ்ட் பரிசோ தித்ததில் 26.2.2000ல் மொட்டிலிட்டி 80%ம் கவுண்ட் 50 மில்லியன் உயர்ந்திருக்கிறது. அடுத்து மருந்து சாப்பிட்டதில் மீண்டும் 31.3.2000 கவுண்ட் 110 மில்லியன் உயர்ந்திருக்கிறது. வேறு எங்கும் காண முடியாத இது ஒரு உலக சாதனையாகும்.

**ஆண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள் :**

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந் தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், இந்திரிய நரம்புகள் இல்லாமல் பிறந்திருந்தாலும்,

அவர்களால் புத்திரபாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது.

சில ஆண்களுக்கு முறையற்ற சிற்றின்ப பழக்கங்கள், அதிகமான போதைப் பொருட்களின் பழக்கம், மற்றும் நீரிழிவு நோய் இருந்தாலும் குழந்தை பிறக்கச் செய்வதற்கான தகுதி இழந்து போகிறார்கள். அவர்களுக்கு எங்கள் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்ய முடியும்.

**பெண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள்:**

பெண்களின் பிரச்னைகளைப் பொறுத்தவரையில், வளர்ச்சியே இல்லாமல் இருக்கும் பெண்களின் கர்ப்பப்பையை வளர்ச்சியடையச் செய்கிறோம். சில பெண்களுக்கு வீட்டு விலக்கு ஒழுங்கில்லாமல் இருக்கும். அதை ஒழுங்குபடுத்துகிறோம். சில பெண்களுக்கு மாதந்தோறும் வீட்டு விலக்கின் போது சூதக வயிற்று வலி வரும். இதனால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையையும் எங்கள் முக்கூட்டு மருந்துகளால் குறைபாடுகளை நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்குக் கருமுட்டை உற்பத்தி இருக்காது. எங்கள் முக்கூட்டு மருத்துவத்தால் கருமுட்டை உண்டாக்கி, கருவுறச் செய்கிறோம். இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பெண்களுக்குள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி விடுகிறோம்.

எதிர்ப்புறம் படத்தில் உள்ள தம்பதிகளாகிய சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, பல டாக்டர்களிடம் சிகிச்சை பெற்று பலனின்றி தோல்வியுற்ற பின்னர் என்னிடம் வந்தார்கள். தம்பதியரில் இருவருக்கும் குறைபாடுகள் இருந்ததால், அவர்களுக்கு முக்கூட்டு மருந்து கொடுத்து சிகிச்சையளித்ததில், திருமதி ராஜாவுக்கு கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துள்ளது.

பெங்களூரில் வசிக்கும் தம்பதியினருக்கு 20 ஆண்டு காலம் குழந்தை இல்லாமல் இருந்து முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் குழந்தை பிறந்துள்ளது. மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் பணிபுரியும் ஒரு மாவட்ட அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு கடந்த 5.6.2000ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்தது. பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர் பேட்டையில் சந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.

❍ சென்னை வியாசர்பாடியில் கென்னடி நகரில் புஷ்பா சக்கரபாணி தம்பதிகளுக்கு ஆண், பெண் வாரிசுகள் பிறந்துள்ளது.

❍ தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா தற்போது கர்ப்பமாக உள்ளார்.

❍ பாண்டிச்சேரி கணபதிபட்டில் சாந்தி செல்வராஜ் தம்பதிகளுக்கு பெண்ணும், பையனும் பிறந்துள்ளார்கள்.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு.

ஒரு ஜாதி மருந்துகளால் உருவாகும் கரு, வேறொரு ஜாதி மருந்தினால் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. அதனால் பிரசவம் ஆகும் வரை உஷாராக இருக்க வேண்டும். அப்போதுதான் சுகப்பிரசவம் ஏற்படும் என்றார் **டாக்டர் அர்ஜுனா**. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திர பாக்கியம் அடைய **டாக்டர் ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி **டாக்டர். வி.ஏ.ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா** ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

**சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் நெ.9 (புதிய எண் 65) நெற்குன்றம் பாதை. (டிஎஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை – 600 026 போன் : 4833484 எஸ்டிடி. 044**

**செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் –**

**வீடு : நெ. 30, பிராமணர் தெரு, ஈஸ்வரன் கோயில் அருகில், வந்தவாசி,**

**திருவண்ணாமலை மாவட்டம் – 604 408 போன் : 25208, 26180 எஸ்டிடி. 04183**

ADVT



• ஜப்பான் போகும் டான்ஸ் குரூப்



• கல்யாண்

# ஜப்பானில் தமிழ் டான்ஸ்!

ரஜினி நடித்த 'முத்து' திரைப்படம் சூப்பர் ஹிட்டாகி படுத்திய பாடு ஜப்பானியர்களின் கண்களெல்லாம் இப்போது தமிழ்ச் சினிமாவின் மீது மொய்த்திருக்கிறது!

பின்னே பாருங்களேன், ஜப்பானின் மின்ஆன் நிறுவனம் தமிழகத்தின் 'சைன் டேலன்ட்ஸ்' நிறுவனத்துடன் கைகோத்துக் கொண்டு நடிகர் ராம்ஜி, நடிகை சங்கீதா உட்பட ஒரு டான்ஸ் பட்டாளத்தையே அங்கு கொண்டு செல்கிறது என்றால் சும்மாவா?

உலகம் பூராவும் வருடத்துக்கு ஆயிரத்தைந்நூறு (ஒரு நாளைக்கு எத்தனை நிகழ்ச்சிங்க?) இசை நிகழ்ச்சிகளை நடத்துகிறதாம் மின்ஆன் நிறுவனம்!

இந்திய ஜப்பான் தூதரக உறவு ஆரம்பித்து ஐம்பதாண்டுகள் ஆவதையொட்டி இருநாட்டு கலாசாரத்தைப் பகிர்ந்து கொள்ளும் விதமாக டோக்கியோவிலுள்ள இந்திய தூதரக ஆதரவுடன் இந்நிகழ்ச்சி நடத்தப்படுகிறதாம்!

"இப்படியொரு டான்ஸ் நிகழ்ச்சியை நடத்துவதற்குக் காரணமே 'முத்து' படம்தான். ஜப்பானியர்களின் உள்ளம் கொள்ளை கொண்ட தமிழ்படம் அது. இதையடுத்து தமிழகத்திலிருந்து ஒரு டான்ஸ் நிகழ்ச்சி நடத்தினால் ஜப்பானில் நல்ல வரவேற்பு இருக்குமென்று நினைத்தோம்" என்ற மின்ஆன் நிறுவனத்தின் ஆகாஷ் ஔஜி, இந்தியாவிலிருந்து ஜாகிர் உசேன், எல். சுப்பிரமணியம், அலர்மேல்வள்ளி உட்பட பலரின் நிகழ்ச்சிகளை ஏற்கெனவே நடத்தியிருக்கிறோம் என்றார்.

'தில்லானா' என்று பெயர் வைக்கப்பட்ட இந்த மசாலா மியூசிக் நிகழ்ச்சி ஒன்றரை மணி நேரம் நடக்குமாம். செப்டெம்பர் பதினொன்றாம் தேதியிலிருந்து அக்டோபர் பதினைந்தாம் தேதிவரை ஜப்பானின் பல நகரங்களில் நடத்தப்பட இருக்கிறது.

இதுக்கு யாருங்க டான்ஸ் மாஸ்டர்? அட நம்ம கல்யாண்! ஆமாம் தில் படத்தின் டான்ஸ் மாஸ்டர்!

"வெறும் டான்ஸ்னா போரடிக்குமேன்னு கொஞ்சம் கலர்புல்லா யோசிச்சோம். ஒரு டான்ஸர், வேலையில்லாத ஒரு இளைஞர். அவருக்கு டான்ஸர் மேல காதல். டான்ஸ் தெரிஞ்சாதான் கல்யாணத்தை முடிச்சு வைப்பேன்னு காதலி வீட்ல சொல்ல, இதுக்கிடையில முறைமாப்பிள்ளை வில்லன் வந்து..." (அட போங்க சார்) என்று ஆரம்பித்த கல்யாண் "இது வித்தியாசமா இருக்கும்" என்றார் காது வளையத்தைத் தடவிக் கொண்டே! என்ன வித்தியாசமோ?

— ஏக்ஜி

# கழனி நீராகும்



• சுத்திகரிக்கப்படும் இடம்

**க**ழிவு நீரைக் கழனி நீராக மாற்றும் திருச்சி பாய்லர் ஆலை நிறுவனத்தின் முயற்சி சக்ஸஸ் ஆக, இப்போது மூன்று போக சாகுபடிக்குத் தயாராகிவிட்டனர் இப்பகுதி விவசாயிகள்.

பாய்லர் ஆலை வளாகத்தின் உள்ளே எழுநூறு ஏக்கர் பரப்பளவில் ஐந்தாயிரத்து ஐந்நூறு குடியிருப்புகள் இருக்கின்றன. இங்கிருந்து நாளொன்றுக்குச் சராசரியாக எண்பது லட்சம் லிட்டர் கழிவு நீர் வெளியேறுகிறது.

இதனை, கழிவு நீரேற்று மையங்களின் வாயிலாக ஓரளவு சுத்திகரித்து அப்படியே வெளியேற்றி வந்துள்ளார்கள். இந்த சுத்திகரிக்கப்பட்ட கழிவுநீர் கழனி நீராக தரக்கட்டுப்பாடு பெற்று விட்டால் விவசாயத்துக்கும் பயன்படுத்தலாமே என்கிற சிந்தனை பாய்லர் ஆலையின் செயலாண்மை இயக்குனர் வி.கே. கோபிநாத்துக்குத் தோன்ற அதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டது. அடுத்த சில மாதங்களிலேயே இதை விவசாயத்துக்குப் பயன்படுத்தலாம் என்று சான்று கிடைத்துவிட, எல்லையில்லா மகிழ்ச்சியில் இருக்கிறார்கள் இப்பகுதி விவசாயிகள்.

"**இ**ங்குள்ள கழிவு நீரேற்று சுத்திகரிப்பு மையம் தினசரி பதினாறு மணி நேரம் செயல்பட்டு வருகின்றது. ஊரகப் பகுதி மொத்தக் குடியிருப்புகளின் கழிவு நீரும் இங்கு வந்து சேர்கின்றது. தினசரி வந்து சேரும் எண்பது லட்சம் லிட்டர் கழிவு நீர் இங்கு சுத்திகரிக்கப்படுகிறது. 1.55 ஹெக்டேர் மற்றும் 1.35 ஹெக்டேர் பரப்பளவு கொண்ட ஆக்ஸிடேஷன் ஏரிகளில் தேக்கி வைக்கப்படுகின்றன. இந்த ஆக்ஸிடேஷன் ஏரிகளுக்குக் கழிவு நீரேற்று மையத்திலிருந்து பிளாஸ்டிக் பைப்புகள் மூலமாக கழிவுநீர் கொண்டு வரப்படுகின்றது.

"இரண்டு ஆக்ஸிடேஷன் ஏரிகளில் நிரப்பப்பட்டு தூய்மைப்படுத்தப்படும் கழிவு நீர் இரண்டே கால் ஹெக்டேர் பரப்பளவுள்ள இன்னொரு ஏரியில் விடப்படுகின்றது. இது ஏழு அடி ஆழம் கொண்டது. இதனுள் படிந்திருக்கும் பாசிகளும், கிழிருக்கும் பாக்டீரியாக்களும் உணவு வகையில் ஒன்றுக்கொன்று எதிர்குணம் கொண்டவை. தண்ணீரில் இருக்கும் கார்பன் டை ஆக்ஸைடை பாசிகள் எடுத்துக்கொண்டு ஆக்ஸிஜனை வெளிப்படுத்தும். பாக்டீரியாக்களோ ஆக்ஸிஜனை



எடுத்துக்கொண்டு கார்பன் டை ஆக்ஸைடை வெளிப் படுத்தும்.

''இந்த நீரை மேலும் சுத்திகரிப்பதற்காக இதனுள் மீன் வளர்த்தால் என்ன? என்று தோன்றியது. இந்த யோசனை மீன் வளர்ப்புத் துறைக்குத் தெரிவிக்கப்பட்டதும், சுத்தி கரிக்கப்பட்ட நீரின் தரத்தை ஆய்வு செய்தனர் அவர்கள். மீன் வளர்க்க ஒப்புதல் தெரிவித்ததும் ஒருங் கிணைந்த மீன் வளர்ப்புப் பண்ணையாக அந்த ஏரி மாறிப் போனது. கட்லா, ரோகு, முறுகல் வகை மீன்களென மொத்தம் பன்னிரண்டாயிரம் மீன்கள் இதனுள்ளே வளர்ந்து வருகின்றன. இதன் மூலமாக வருடத்திற்கு நான்கு லட்ச ரூபாய் வருவாய் இடைக்கும் என்கிற உத்தேச மதிப்பீடும் உள்ளது" என்றார் ஊரகத் துணைப் பொது மேலாளர் கே. ராஜாபெருமாள்.

மீன் வளர்ப்புக்கு மட்டுமின்றி இங் கிருந்து வெளியேறும் உபரி நீர் ஊரகப் பகுதிகளில் உள்ள மரங்கள், செடிகளுக்குப் பாய்ச்சப்படுகிறது. விவசாயத்திற்கும் பயன்படும் அளவுக்கு இந்த நீரின் தரம் இருந்தால் மகிழ்ச்சிதானே? அதற்கென விவசாயத் துறையையும், தேசிய சுற்றுச் சூழல் ஆய்வு மையத்தையும் அணுகியுள் ளார்கள்.



• கோபிநாத்

நாக்பூரில் உள்ள தேசிய சுற்றுச் சூழல் ஆய்வு மையம் இத் தண்ணீர் குறித்து தரச் சான்றிதழ் அளித்துள்ளது. பொதுவாக விவசாயத்துக்குப் பயன்படும் தண்ணீரில் அதிகபட்சமாக முப்பது மில்லி கிராம் பயோ கெமிக்கல் ஆக் ஸிஜன் டிமான்ட் இருந்தால் போதுமாம். இங்கு கழிவு நீர் சுத்திகரிக்கப்பட்ட பின் வெளி யேறும் தண்ணீரில் பன்னிரண்டு மில்லி கிராம் பயோ கெமிக்கல் ஆக்ஸிஜன் டிமான்ட் உள்ளதால் இது விவசாயத்திற்கு வயல்களில் பாய்ச்சப்பட வேண்டிய நல்ல நீர்.

குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் ஒவ் வொரு முறையும் இங்கிருந்து மாதிரிக்குத் தண்ணீர் எடுத்து அனுப்பப்பட்டு விவ சாயப் பயன்பாடு உள்ளதா? என்பதனை அவ்வப்பொழுது தர நிர்ணய அறிக்கை பெற்று தெரிந்து கொள்கிறார்கள். கழிவு நீரைச் சுத்திகரித்து கழனி நீராய் மாற்றுகின்ற இத்திட்டத்திற்கு என்ன செலவாகி இருக்கும்? "இதன் பயன்களை எண்ணும் போது இதற்கான செலவு ஒரு பொருட்டே இல்லை!'' என்கிறார் கே. ராஜபெரு மாள்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# கழிவு நீர்!



• ஆக்ஸிடேஷன் ஏரி

# தண்ணிடை

மாட்டுவண்டியில் அமர்ந்து கொண்டு வலப்பக்க செவலையின் வாலைத் திருக்கி அதன் அடிபாகத்தில் கைவைத்து 'ம்' என்று அதட்டினான் தங்கத்துரை. "பய காளை... போறதைப் பாரேன்" என்று அவன் சொன்னதும், விர்ரென்று பாய்ந்த காளைகளை அடுத்த சில நிமிடங்களிலேயே மூக்கணாங்கயிறை இழுத்துப் பிடித்து நிறுத்தினான்.

அருகில் வாசமடக்கி மரநிழலில் குடலு மகன் ஏழு வயது மாரிமுத்து உருண்டையான ஒரு விநோதப் பொருளை உருட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும்தான் இந்த நிறுத்தம்.

ஒரு நீண்ட கம்புக் குச்சியை வைத்து கொண்டு சிறிய வட்டு போலான அதை அவன் அடிக்கவும், அது 'சக்கடி சக்கடி' என்று நெளிந்து உருண்டு போவதையும் பார்த்தான்.

''ஏல கொடலு மவனே.. அதென்ன புதுசா இருக்கு?''

"கொடலு மவனா.. எங்கப்பன் காதுல கேட்டது முதுகு தொலியப் பிச்சுப் போடுவாரு உன்னைய.."

"போய்ச் செல்லுல உங்கப்பன்ட்ட, நான் இப்படிச் சொன்னேன்னு. பயலுக்கு வாயப் பாரேன். அத இங்க கொண்டாடே பாத்துட்டுத் தாரேன்."

''இதையா...?'' என்று அந்த உருண்டையானப் பொருளை எடுத்து, "இந்தாப் பாரு" என்று சொல்லிவிட்டு வலது கையை மடக்கி 'குஸ்க்கு குஸ்க்கு' என்று ஓட்டம் பிடித்தான் சிறுவன்.

"ஓட்டத்தைப் பாரேன். ஏல வக்கட்டே.. கீழ விழுந்திராதல.." என்றவாறு காளைக்கு மீண்டும் அதே அதட்டல், முறுக்கல். பாய்ந்தன காளைகள்.

கடனாநதி ஆற்றின் கரையோரத்தில் வண்டியை நிறுத்திவிட்டு மணலில் இறங்கும்போது, தோளில் மண்வெட்டியுடன் வந்து கொண்டிருந்தான் குடலு. குடலு என்பது அவனது தேகம் குறித்து ஊரில் எழும்பிய காரணப் பெயர். அவன் பெயர் ராமசாமி என்பதாகத்தான் ஞாபகம். ஆனால் ஊரில் யாருக்கும் அவனின் நிஜப் பெயரைச் சொல்லிக் கேட்டால் தெரியாது. இது போன்றே அநேகம் பேர்களுக்குப் பட்டப் பெயரே நிலைத்த பெயராகி இருந்தது.

"என்னா.. தண்ணிப் பாய்ச்சியாச்சா?"

"தங்கத்துரையா..? வா...! என்னத்த... நேத்து பாரு வாமடையைப் போட்டுட்டு வீட்டுக்குத் திரும்பியிருக்கேன். அதுக்குள்ள எவனோ தண்ணிய திருப்பி விட்டிருக்கான். காலையில இருந்து இப்ப வரை நின்னு முழு





அதை உடுவனாங்கான்.”

சும் பாய்ஞ்ச பெறவுதான் திரும்ப வேண்டி யிருக்கு. அடுத்தவன் பயறு எப்படியும் போவட்டும்னு நெனைக்கிறானுவ. என்ன மனுஷனுவளோ.”

“ஆமாமா... நாமதான் வெவரமா இருக்க வேண்டியிருக்கு. சரி, உன் மவன் எதையோ வச்சு வெளையாடிட்டு இருக்கானே அது என்னது?” - விஷயத்துக்கு வந்தான் தங்கத் துரை.

“அது என்னமோ வட்டுனு நெனைக் கேன்.”

“வட்டா... இல்லண்ணே, வேற என் னமோ மாதிரிலா இருக்கு.”

“வேற என்னமோ மாதிரியா... மூணு நாளுக்கு முன்னால பின்ன மரத்தைப் பாக்க, மஞ்சப்புளிச்சேரி போயிருந்தேன். பொத்தை யத் தாண்டும்போது சரியான மண்ணுளி பாம்பு. எதையாவது தூக்கிப் போடணும்னு கல்லை எடுக்கப் போனா... கையில வட்டு மாதிரி தட்டுப்பட்டுது. சரி இந்தப் பயலுக்கு வெளையாட ஆவு மேன்னு தூக்கியாந்துட் டேன். இவனும் காலையில இருந்து ராத்திரி வரை

அன்று மாலையில் அது ஒரு பெரிய சர்ச்சையாகி இருந்தது. ஊர்ப் பெரிசுகளி லிருந்து சிறுசுகள் வரை முத்தாரம்மன் கோயில் வேப்பமரத்தடியில் கூடி இதுபற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். கிரா மத்துப் பெரிசுகளுக்கு இப்படி ஏதாவது ஒரு விஷயம் அசைபோட்டுக் கொண்டிருக்க கிடைத்து விடுகிறது. இதுவும் இல்லை யென்றால் அவர்களின் பாடுகளும் திண் டாட்டம்தான்.

அவன் சொன்ன வட்டு, வட்டு போன்று உருண்டையாகவும் இல்லை; வட்ட வடிவத்தில், ஒரு முனையில் ஒன்றின் பகுதி இன்னொன்றின் உள்ளே சென்று சேர்ந்திருந் தது. காலம் காலமாக மண்ணுள் கிடந்து உழன்றிருக்க வேண்டும் அது. இல்லையென் றால் பாதிக் கருப்பும், பழுப்பும் மண் படிவமும் சேர்ந்த ஒரு வித்தியாமான கலரை அது பெற்றிருக்க முடியாது.

கழுத்துவரை வெண் தாடி வைத்திருந்த முத்துக்கண் பண்டாரம் தாத்தா அதை

**செ.ஏக்நாத்ராஜ்**

வாங்கிப் பார்த்தார். ஊர்ப் பெரிய மனிதர்களில் அவர் முக்கியப்புள்ளி. அதைத் திருப்பினார். கைகளை வைத்துச் சுரண்டினார். உட்கார்ந்திருந்த கல்லில் தேய்த்தார். ம்ஹூம். அவருக்கு எதுவும் புலப்படவில்லை. "இது ஏதோ வண்டிச் சக்கரத்துல மாட்றது மாதிரிலா இருக்கு." என்றார்.

"வண்டிச் சக்கரத்துல மாட்றதுன்னா இப்படியா இருக்கும். எல்லா புறமும் ஒரே மாதிரியில்லா இருக்கும்." இது தங்கத்துரை.

ஆளாளுக்கு இப்படிப் பேசுவதையும், அவர்கள் ஏதாவது சொல்வதையும் குத்துக்காலிட்டு அதிசயமாய்க் கேட்டுக் கொண்டிருந்தனர் குடலும், மாரிமுத்தும். இடையிடையே



சிரித்துக் கொண்டான் குடலு. எதையோ கீழே கிடந்து எடுக்கப் போய் அது இவ்வளவு பெரிய விவகாரத்தை எழுப்பும் என்று அவன் நினைக்கவில்லை.

நீண்ட நேர கதையாடலுக்குப் பிறகு பேச்சு எங்கெங்கோ போய் பக்கத்து ஊரான கீழாம்பூரில் கொடையின்போது நடந்த சண்டைக்கு வந்தபோது சைக்கிளில் வந்து இறங்கினார் நாராயண கம்பர்.

ஊரிலுள்ள நான்கு கோயில்களுக்கும் வயல்வெளி பக்கமாய் இருக்கும் பச்சத்தி மாடனுக்கும், போத்தி கோயிலுக்கும் இவர் தான் பூசாரி என்பதால் அவருக்கென்று தனி மரியாதை உண்டு.

"கம்பரு வந்தாச்சு. ஏல அந்த வட்டைக் கொடு அவர்ட்ட காட்டும்."

பேச்சு திசைமாறி இருந்தாலும் தங்கத்துரை இதன் ஞாபகமாய் இருந்து, வெடக்கென்று மாரிமுத்துவின் கையிலிருந்த வட்டைப் பிடுங்கி கம்பரிடம் கொடுத்தான்.

பேசி முடிந்து ஒரு வழியாய்த் திரும்பி வந்த வட்டு, கையிலிருந்து மீண்டும் பிடுங்கப்பட்டதில் மனம் குலைந்து போனான் மாரிமுத்து. அவனின் மனம் திக்திக்கென்று அடித்துக் கொண்டிருந்தது. மீண்டும் கைக்கு வருமா? வராதா? என்ற ஏக்கங்களூடே அவன் பார்வை பரிதவிப்பாய் இருந்தாலும் அப்பாமீது ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. இவர் ஏன் இங்கு அதைக் கொண்டு வந்தார். கம்பரின் கையிலிருக்கும் அதைப் பிடுங்கி கொண்டு வேகமாய் வீட்டுக்கு ஓடி விடலாமா? என்று கூட நினைத்தான். பிறகு ஏனோ அந்த எண்ணத்தைத் தூர வைத்துவிட்டு அப்பாவின் முட்டைப் பிடித்துக் கொண்டு அவர்கள் பேசுவதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஏல அத விடமாட்ட போலருக்கே நீ.. அவர்ட்ட இவர்ட்டனு எல்லார்ட்டயும் காட்டுத. அது என்ன திருநெவேலில வாங்குன துணியால..." என்ற குடலை,

**"ஒரு சினிமா, டிராமாதான் அழைச்சுட்டுப் போறதில்லே. அக்கம்பக்கம் வீடுகள்ல ஏறி**

"சும்மாருண்ணே... அவரு என்ன சொல்லுதாருன்னு பாப்பமே.." என்றான் தங்கத்துரை.

முகமெல்லாம் ஆச்சர்யம் தாங்கி ஒரு அதிசயப் பொருளைப் பார்ப்பதுபோல் பாத்தார் கம்பர். சில நிமிடங்கள் மூக்கில் விரல் வைத்துப் பார்த்துவிட்டுத் தானாகவே இரண்டுமுறை சிரித்துக் கொண்டார். பிறகு, "இது தண்டைலா, அம்மனுக்குள்ள தண்டை மாதிரிலா இருக்கு."

"அம்மனுக்குள்ள தண்டையா?" ஒரு நிமிடம் ஆடிப் போய்விட்டான் குடலு. இது வரை மலர்ந்திருந்த அவன் முகம் டப்பென்று சிறுத்துப் போயிற்று.

"அந்த காலத்துல ஆத்தாளுக்கு அலங்காரம் பண்ணும்போது இதையெல்லாம் வச்சுதான் பண்ணுவாங்க. என்ன பண்டாரம் தாத்தா உமக்குமாயா தெரியலை?"

வட்டு, தண்டையாகி முத்துக் கண் பண்டாரம் தாத்தாவின் கைகளுக்கு மறுபடியும் சென்றது. அவர் கண்களைக் கசக்கி விட்டு மீண்டும் பார்த்தார். "அட ஆமா.. யோல் கம்பரே, இதுக்குத்தான் உம்மைப் போல வெவரம் உள்ள ஆள் வேணுங்கது" என்று சொல்லிவிட்டு, "அம்மனுக்கு மட்டு

மில்லை, நம்ம கருப்பசாமிக்கும் இந்த மாதிரி தண்டையைப் போட்டு எங்க தாத்தா காலத்துல கொடை கொடுத்திருக்காங்க. அப்பலாம் நீங்க பொறந்திருக்கவே மாட்டீயோ..."

"அப்ப இது தங்கமாத்தானே இருக்கும்" என்றான் தங்கத்துரை.

"ம்ஹூம். நம்ம மாதிரி ஆட்கள்லாம் இரும்புல தான் இதை செஞ்சு போடுவாங்க. வசதியான ஜாதிகாரங்கதான் தங்கத்துல செஞ்சு போடுவாங்க." முத்துக்கண் பண்டாரம் சொல்லி முடிக்கவும் குடலு வாய்ப் பிளந்து கேட்டுக் கொண்டிருந்தான் அதிர்ச்சியோடு.

"அம்மன் தண்டைங்கறீங்க. இத சின்னப் பையன் விளையாடறதுல ஏதும் சாமிகுத்தம் வந்துருமோ..." கேட்டான் குடலு, மனதுக்குள் திகிலோடு.

"இதுலயெல்லாம் சாமி குத்தம் வராதுவே; இருந்தாலும் நாளைக்கு வெள்ளிக்கிழமை. சாயந்திரமா தேங்காய்ப் பழத்தோட ரெண்டு விட்டரு எண்ணெய் வாங்கிட்டு வா. சின்னதா ஆத்தாளுக்கு ஒரு பூசை பண்ணிரும். பெறவு நடக்கறதை அவா பாத்துக்கிடுவா."

இரவு. மாரிமுத்துவுக்குப் பயம். சாமி அம்மன், தண்டை, அது இது என்று பேசியதில் அவன் பயந்து போயிருந்தான். அம்மாவின் இடுப்பை இறுக அணைத்துக் கொண்டு அவளின் வயிறுக்குள் புகுந்து ஒடுங்கிப் படுத்துக் கொண்டான். அந்த வட்டு தமக்கு விளையாட வருமா? வராதா? என்ற யோசனை வேறு. மனசுக்குள் அது பற்றிய நினைப்பு அரிப்பெடுத்துக் கொண்டிருக்கின்றது. அப்படியே தூங்கிப் போனவன், நடுராத்திரி திடீரென்று, "வட்டு எனக்குத் தான்... குடு.. குடுல..." என்று முனகுவதைக் கேட்டு விழித்தாள் அம்மா.

இந்த முனகலை, குடலும் கேட்க வேண்டுமென்று நினைத்து மல்லாந்து உருண்டு ஓரமாய்க் கிடந்தவனைத் தட்டி எழுப்பினாள் அவள். வாய் முழுவதும் வந்த கொட்டாவியை ஒரு வித சப்தத்துடன் விட்டுவிட்டு மனைவியை முறைக்கப் போனவன், மகனின் முனகலைக் கேட்டான்.

"பார்த்தியா... நீ பண்ணுன வேலையை." என்பது மாதிரி இருந்தது அவள் பார்வை.

"அது ஒண்ணுமில்லைடீ. ஆசையில உளறுதான் அவ்வளவுதான். தூங்கு. காலைல பாப்போம்."

"எங்கயிருந்து எந்த எழவையோ எடுத்துட்டு வந்துட்டு, இப்ப சாமி, பூசைன்னு பயம் காட்ட வேண்டியிருக்கு. தேவையா? தூக்கி வீசிர வேண்டியதுதானே.."

"ச்சீ.. நாயே, வாயப் பொத்து, சின்ன பய ஆசைப்பட்டு வெளையாண்டுட்டு இருக்கான். அதைப் போய் தூரப் போடணுங்கியே; இப்ப யென்ன கெட்டுப் போச்சு. ஆத்தாளுக்குத்தானே பூசைப் பண்ணுதோம். இதுல ஒண்ணும் கொறஞ்சி போவாது.. தூங்குடீ."

மறு நாள் பூஜை, புனஸ்காரங்கள் முடிந்து மிகவும் சந்தோஷமாகத் தான் இருந்தனர் மாரிமுத்துவும் குடலும். ஒரு பெரிய கம்பு குச்சி கொண்டு அந்த வட்டை ஓங்கி ஓங்கி தட்டியபடி தெருக்களில் மகிழ்ச்சியாக விளையாடிக் கொண்டிருந்தான் மாரிமுத்து.

ஒரு அதிகாலையில் எழுந்து கஞ்சி குடித்துவிட்டு வட்டைத் தேடிய மாரிமுத்துவுக்குத் திக்கென்றது. மாயமாகி இருந்தது அது. எங்கு தேடியும் கிடைக்கவில்லை. எதையும் கேட்காமல் கண்ணீர் பொல பொலவென்று வடிந்தது அவனுக்கு. இரண்டு மூன்று நாட்கள் அது பற்றிய ஏக்கமாகவே இருந்தான்.

சில மாதங்களில் அது குறித்த நினைப்பே எல்லோரிடமும் மறந்து போய் சைக்கிள் டயரை, மாரிமுத்து உருட்டிக் கொண்டிருந்த காலத்தில் அவ்வளவு வசதியில்லாத தங்கத்துரை ஊரில் பங்களா ஸ்டைலில் புது வீடு கட்டிக் கொண்டிருந்தான். ●



**இறங்கி நாலைந்து வம்பு தும்புகளையாவது கேட்டு வந்து சொல்லக் கூடாதா?**

**- இரா. திலீப்**

# சிவகாமியின் சபதம்

பதின்மூன்றாம் அத்தியாயம்

**அமர சிருஷ்டி**

புத்த பிக்ஷுவின் குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்த ஆயனர், விரைந்தெழுந்து, ''வாருங்கள்! அடிகளே! வாருங்கள்!'' என்று கூறிக் கொண்டே வாசற்படியண்டை சென்றார்.

சிவகாமி அவசரமாக எழுந்து அருகிலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

உள்ளே பிரவேசித்த பிக்ஷு நாலாபுறமும் சுற்றிப் பார்த்துவிட்டு "ஆயனரே! நான் சென்ற தடவை வந்து போன பின்னர், புதிய சிலைகள் செய்திருக்கிறீர்களோ?'' என்றார்.

''ஆம், சுவாமி! அப்புறம் பன்னிரண்டு ஹஸ்த வகைகளை அமைத்திருக்கிறேன். இதோ பாருங்கள்! இந்தச் சிலைகளெல்லாம் புதியவை!'' என்றார் ஆயனர்.

பிக்ஷு ஆயனர் காட்டிய சிலைகளைக் கண்ணோட்டமாய்ப் பார்த்துவிட்டு, தூணைப் பிடித்துக்கொண்டு நின்ற சிவகாமியை நோக்கியபடி, "அதோ அந்தத் தூணின் அருகில் நிற்பதும் சிலைதானோ?'' என்று வினவினார். அப்போது புத்த பிக்ஷுவின் கடூர முகத்தில் தோன்றிய புன்னகை அந்த முகத்தின் விகாரத்தை அதிகமாக்கிற்று.

ஆயனர் சிரித்துக்கொண்டே, "இல்லை சுவாமி! அவள் என் பெண் சிவகாமி...! குழந்தாய்! இதோ நாகநந்தி அடிகள் வந்திருக்கிறார், பார்! பிக்ஷுவுக்கு வந்தனம் செய்!'' என்றார்.

சிவகாமி அச்சமயம், நாகநந்திக்குப் பின்னால் வந்த இளைஞனைக் கடைக்

**அமரர் கல்கி**

கண்ணால் பார்த்துக்கொண்டிருந் தாள். ஆயனர் கூறியதைக் கேட்டதும் பிக்ஷுவின் பக்கம் திரும்பி நமஸ்கரித் தாள்.

பிக்ஷுவுடன் உள்ளே பிரவேசித்த பரஞ்சோதி அந்தச் சிற்ப மண்டபத்தில் நாலாபுறமும் காணப்பட்ட அதிசயங்களைப் பார்த்தவண்ணம் வாசற்படிக்கு அருகிலேயே பிரமித்துப் போய் நின்றான். அம்மாதிரியான அபூர்வ வேலைப்பாடமைந்த சிற்பங்களையும் சித்திரங்களையும் அவன் அதற்கு முன்னால் பார்த்ததே இல்லை.

இடையிடையே அவன் ஆயனர், சிவகாமி இவர்களையும் கவனித்தான். அன்று பல்லக்கில் அமர்ந்திருந்தவர்கள் - மதயானையின் கோபத்திலிருந்து தன்னால் காப்பாற்றப்பட்டவர்கள் - அவர்கள்தான் என்பதைத் தெரிந்து கொண்டான்.

புத்த பிக்ஷுவை ஆர்வத்துடன் வரவேற்று அவருடன் பேசிக்கொண்டே சென்ற ஆயனர் பரஞ்சோதியைக் கவனிக்கவே இல்லை; அவனைத் திரும்பிப் பார்க்கக்கூட இல்லை.

ஆனால், தூணருகில் நின்ற அவருடைய மகள் அவ்வப்போது தன்னைக் கடைக்கண்ணால் கவனிப்பதைப் பரஞ்சோதி தெரிந்துகொண்டான். நடனத்துக்குரிய ஆடை ஆபரணங்களை அணிந்து நின்ற சிவகாமியின் நவயௌவன சௌந்தர்யத்தின் ஒளி பரஞ்சோதியின் கண்களைக் கூசச் செய்தது.

கிராமாந்திரத்தில் பிறந்து வளர்ந்தவனும், இயற்கையில் சங்கோசமுடையவனும், தாயைத் தவிர வேறு பெண்களுடன் பழகி அறியாதவனுமான பரஞ்சோதியினால் சிவகாமியின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அதிலும், சிவகாமி தன்னைக் கவனிக்கிறாள் என்பதை அவன் அறிந்த பின்னர், அவர்கள் இருந்த பக்கமே திரும்பாமல் எதிர்ப்புறக் கூடத்தில் காணப்பட்ட சிலைகளைப் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். அந்தச் சிலைகளின் தோற்றத்திலும், முக பாவத்திலும் ஏதோ ஓர் அதிசயம் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அந்த அதிசயம் இன்னதென்பது மின் வெட்டைப் போல் அவன் உள்ளத்தில் உதித்தது. ஆ! இந்தச் சிலைகள் எல்லாம் தூணருகில் நின்று தன்னைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கும் பெண்ணின் பல்வேறு தோற்றங்கள் தாம்! இந்த உண்மையை அவன் உள்ளம் கண்டதும், சிவகாமியிடம் அவனுக்குத் தெய்வங்களிடம் உண்டாவது போன்ற பயபக்தி உண்டாயிற்று.

சிவகாமி புத்த பிக்ஷுவை நமஸ்கரித்தபோது அவர் ஆர்வம் ததும்பிய விழிகளால் அவளை விழுங்குபவர் போல் பார்த்துவிட்டு "புத்ததேவர் அருளால் உன் கோரிக்கை நிறைவேறட்டும், அம்மா! புத்த பிக்ஷுணி ஆக விரும்புவதாகச் சற்று முன்னால் நீதானே சொல்லிக் கொண்டிருந்தாய்?" என்றார்.

இந்த ஆசி மொழியானது சிவகாமிக்கு அருவருப்பை உண்டாக்கியது என்று அவள் முகபாவத்தில் தெரிந்தது. ஆயனருக்கும் அது பிடிக்கவில்லையென்பது அவருடைய வார்த்தைகளில் வெளியாயிற்று.

"அடிகளே! குழந்தை ஏதோ வேடிக்கையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். நாலு நாளைக்கு முன்னால் காஞ்சியில் சிவகாமியின் அரங்கேற்றம் நடந்தது. ஆகா! தாங்கள் அதற்கு இல்லாமல் போய்விட்டீர்களே!" என்றார் ஆயனர்.

"எல்லாம் கேள்விப்பட்டேன். அரங்கேற்றம், அதற்குப் பின்னால் நடந்தவை எல்லாம் அறிந்துகொண்டேன். உங்களுக்குப் பெரிய ஆபத்து வந்ததாமே? மதயானையின் கோபத்துக்குத்

தப்பினீர்களாமே!'' என்றார் பிக்ஷு.

''ஆம், சுவாமி! ஏதோ தெய்வத்தின் அருள் இருந்த படியால் தப்பிப் பிழைத்தோம்... தங்களுக்குச் சாவகாசம்தானே? இன்று பிக்ஷை இங்கேயே வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று



கூறி, ஆயனர், பிக்ஷுவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

"ஆகா! எனக்குச் சாவகாசந்தான். இன்றைக்குத் தங்கள் கிருஹத்திலே பிக்ஷை என்று எண்ணிக்கொண்டுதான் வந்தேன். தங்களுக்கு அதிகச் சிரமம் இல்லாவிட்டால்...?'' என்று பிக்ஷு கூறுவதற்குள் "சிரமமா? என்னுடைய பாக்கியம்!'' என்றார் ஆயனர்.

முற்றத்தில் கிடந்த இரண்டு பெரிய கற்களில் இருவரும் எதிர் எதிராக அமர்ந்தார்கள்.

''அம்மா, சிவகாமி! நீயும் உட்காரலாமே? அடிகளுக்குக் கலைகளில் அபார பிரேமை, தெரியுமோ, இல்லையோ?'' என்று ஆயனர் கூறிவிட்டு, பிக்ஷுவைப் பார்த்துச் சற்று மெதுவான குரலில், "அடிகளே! அஜந்தா சித்திரங்களைப் பற்றி ஏதாவது தகவல் வந்ததா?'' என்று கேட்டார். அப்போது அவருடைய முகத்தில் அளவிடக் கூடாத ஆர்வம் தோன்றியது.

ஆயனர் உட்காரச் சொல்லியும் சிவகாமி உட்காரவில்லை. தூணைப் பிடித்துக்கொண்டே நின்றாள். அவளுடைய கவனம் இவர்களுடைய பேச்சில் இருந்தபோதிலும், இடையிடையே கண்கள் பரஞ்சோதியையும் கவனித்தன.

புத்த பிக்ஷு ஆயனரின் கேள்விகளுக்கு மறுமொழி சொல்லாமல், "ஆயனரே! தெய்வத்தின் சிருஷ்டியைக் காட்டிலும் தங்களுடைய சிருஷ்டியே மேல் என்று எனக்குத் தோன்றுகிறது!'' என்றார்.

''சுவாமி...'' என்று ஆயனர் மறுமொழி சொல்ல ஆரம்பித்தபோது, பிக்ஷு அதற்கு இடங்கொடாமல் தொடர்ந்து சொன்னார்: "நான் முகஸ்துதி செய்யவில்லை ஆயனரே! உண்மையைச் சொல்லுகிறேன். தெய்வத்தின் சிருஷ்டி அழிந்து போகக் கூடியது. இந்த மனித உடம்புக்கு நூறு வயதுக்கு மேல் கிடையாது. நரை, திரை, மூப்புத் துன்பங்கள் மனித தேகத்துக்கு உண்டு. ஆனால், நீர் அமைத்திருக்கிறீரே, இந்த அற்புதச் சிலைகள், இவற்றுக்கு அழிவே இல்லையல்லவா? நரை, திரை, மூப்புத் துன்பம் இந்தச் சிலைகளை அணுகாதல்லவா? கல்லால் அமைந்த இந்தச் சிலைகளில் விளங்கும் ஜீவகளை ஆயிரம் ஆயிரம் வருஷங்கள் ஆன போதிலும் மங்காமல் பிரகாசிக்குமல்லவா? உம்முடைய சிருஷ்டி, தெய்வ சிருஷ்டியைக் காட்டிலும் மேல் என்பதில் சந்தேகம் என்ன?''

இதையெல்லாம் கேட்ட ஆயன சிற்பியின் முகத்தில் கலைஞானத்தின் கர்வம் தாண்டவமாடியது.

''அடிகளே! தாங்கள் சொல்லும் பெருமையெல்லாம் சிவகாமிக்கே சேரும். நடனக் கலையில் அவள் இவ்வளவு அற்புதத் தேர்ச்சி அடைந்திராவிட்டால், இந்தச் சிலை வடிவங்களை நான் எப்படி அமைத்திருக்க முடியும்...? ஆஹா! குழந்தையின் அரங்கேற்றத்துக்கு நீங்கள் இல்லாமல் போய் விட்டீர்களே! ருத்ராச்சாரியார் பிரமித்து ஸ்தம்பித்து நின்று விட்டார். அன்றைக்கு இரண்டு பேர் இல்லாமல் போனதாலேதான் எனக்கு வருத்தம். தாங்களும் இல்லை; நாவுக்கரசர் பெருமானும் இல்லை...''

''ஆமாம், ஆமாம்! ஆயனரே! நாவுக்கரசர் சிவகாமியின் அரங்கேற்றத்தின்போது இருந்திருந்தால் ரொம்பவும் குதூகலமடைந்திருப்பார். முக்கியமாக, சக்கரவர்த்தியின் 'மத்த விலாச'த்திலிருந்து எடுத்து அபிநயம் செய்த கட்டத்தை ரொம்பவும் ரஸித்திருப்பார் நாவுக்கரசர். மதுபானம் செய்த புத்த பிக்ஷுவும் காபாலிகனும் சண்டையிட்ட இடம் வெகு ரஸமாக இருந்திருக்குமே?''

ஆயனரின் முகம் சிறிது சுருங்கிற்று. "சுவாமி! ஹாஸ்ய ரஸத்தைக் காட்டுவதற்காக அந்த விஷயத்தைச் சிவகாமி எடுத்துக்கொண்டாள். மற்றபடி அவ

ளுக்கு மகான்களாகிய புத்த பிக்ஷுக்களைப் பரிகசிக்கும் எண்ணம் கொஞ்சமும் இல்லை!'' என்றார்.

மகா ரஸிகரும் சகல கலைகளிலும் வல்லவருமான மகேந்திர வர்ம சக்கரவர்த்தி ஜைனராயிருந்தபோது, 'மத்த விலாஸம்' என்னும் ஹாஸ்ய நாடகத்தை இயற்றியிருந்தார். அதில் காபாலிகர்களும் புத்த பிக்ஷுக்களும் பெருங் கேலிக்கு உள்ளாக்கப்பட்டிருந்தார்கள். அந்த நாடகத்தின் ஒரு பகுதியைச் சிவகாமி அபிநயத்துக்கு விஷயமாக எடுத்துக் கொண்டிருந்தாள். அதைக் குறித்துத்தான் மேற்கண்ட பேச்சு நடந்தது. பின்னர் பிக்ஷு சொன்னார்:

''வாஸ்தவந்தான்: ஹாஸ்ய ரஸத்தை அபிநயித்துக் காட்ட மிகவும் பொருத்தமான சம்பவம். காபாலிகன் புத்த பிக்ஷுவின்



தலைக் குடுமியைப் பிடிக்கப் பார்த்து, மொட்டைத் தலையைத் தடவி விட்டுக் கீழே விழும் கட்டத்தில் ஹாஸ்ய ரஸம் ததும்பியிருக்கும்! ஆனால், சபையோர் சிரித்து முடிவதற்குள்ளே ஏதோ யுத்தத்தைப் பற்றிய செய்தி வந்து, சக்கரவர்த்தி எழுந்து போய் விட்டாராமே? சபையும் கலைந்து விட்டதாமே...?"

"ஆமாம், ஆமாம்! அதுதான் சற்று மனக்கிலேசத்தை அளித்தது. அதனாலேயே சிவகாமிகூட நாலு நாளாக உற்சாகமில்லாமல் இருந்தாள். அரங்கேற்றத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் மறுபடியும் காலில் சதங்கை கட்டிக் கொண்டாள். அடிகளே, யுத்தம் எதற்காக வருகிறது? எதற்காக ஜனங்கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாக வேண்டும்?" என்றார் ஆயனர்.

"ஆயனரே! அந்தக் கேள்வியை ஏழை பிக்ஷுவாகிய என்னிடம் கேட்டு என்ன பிரயோஜனம்? உலகத்திலுள்ள திரிபுவன சக்கரவர்த்திகளையும், குமார சக்கரவர்த்திகளையும், மகாராஜாக்களையும் யுவராஜாக்களையும், சிற்றரசர்களையும் படைத் தலைவர்களையும் கேட்க வேண்டும். கொலையும் கொடூரமும் நிறைந்த இந்த உலகத்தில் புத்த பகவான் அவதரித்து அன்பு மதத்தைப் பரப்பினார். அதற்காகப் பிக்ஷுக்களின் சங்கத்தையும் ஸ்தாபித்தார். அந்தப் புத்த பிக்ஷுக்களை ராஜ சபைகளில் பரிகசித்துச் சிரிக்கும் காலம் இது! யுத்தம் ஏன் வருகிறது என்று என்னைக் கேட்டு என்ன பயன்?"

அந்தப் பொல்லாத புத்த பிக்ஷுவிடம், பேச்சு யுத்தத்தில் அகப்பட்டுக் கொண்டு தன் தந்தை திணறுவதைச் சிவகாமி அறிந்தாள். அவளுடைய கண்களில் கோபக் கனல் வீசிற்று. அவள், "அப்பா! புத்த பகவான் அன்பு மதத்தையும் அஹிம்சா தர்மத்தையும் உபதேசித்தது உண்மைதான். ஆனால் இந்தக் காலத்தில் அந்தப் புத்த பகவானுடைய பெயரைச் சொல்லிக் கொண்டு போலி பிக்ஷுக்கள் தோன்றி, மக்களை வஞ்சித்து ஏமாற்றி வருகிறார்கள். அதனால்தான் யுத்தம் முதலிய விபரீதங்கள் வருகின்றன!" என்றாள்.

ஆயனருக்கு, 'இதேதடா வம்பு?' என்று தோன்றியது. அங்கிருந்து சிவகாமியை எப்படியாவது அனுப்பி விட எண்ணி, அவளை இரக்கம் தோன்றப் பார்த்து, "குழந்தாய், சிவகாமி! நீ வேணுமானால் உள்ளே அத்தையிடம் போய்..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

அதற்குள் நாகநந்தி, "ஆயனரே! நான் தோற்றேன். சிவகாமி மிகவும் புத்திசாலி! அவள் சொல்லியதில் ரொம்பவும் உண்மை இருக்கிறது!" என்றார். அவருடைய கடூர முகத்தில் மறுபடியும் ஒருகண நேரம் விசித்திரமான புன்னகை காணப்பட்டது.

பேச்சை வேறு வழியில் திருப்பியாக வேண்டுமென்று ஆயனர் கருதிச் சுற்று முற்றும் பார்த்தார். அப்போது அவருடைய பார்வை அம்மண்டபத்தின் இன்னொரு பக்கத்தில் சிலைகளையும் சித்திரங்களையும் பார்த்துக்கொண்டு நின்ற பரஞ்சோதியின் மேல் விழுந்தது.

"சுவாமி! அந்தப் பிள்ளை யார்? உங்களுடைய சீடனா?" என்று கேட்டார் ஆயனர்.

## பதினாலாம் அத்தியாயம்

## தாமரைக்குளம்

தன்னைப் பற்றிப் பேசுகிறார்கள் என்பது காதில் விழுந்ததும் பரஞ்சோதி அவர்கள் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்தான்.

அதேசமயத்தில் புத்த பிக்ஷு, "என்னுடைய சீடன் இல்லை, ஆயனரே! தங்களுடைய சீடனாகப் போகிறவன். பரஞ்சோதி! இங்கே வா!" என்றார்.

பரஞ்சோதி அவர்களருகில் நெருங்கி

வந்தான்.

அப்போதுதான் அவனை நன்றாகக் கவனித்த ஆயனர் வியப்புடன், "யார் இந்தப் பிள்ளை? எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறது?" என்றார்.

"அப்பா! உங்களுக்குத் தெரியவில்லையா? அன்றைய தினம் மத யானையின் மேல் வேலை எறிந்தாரே, அவர்தான்!" என்று உற்சாகத்துடன் கூறினாள் சிவகாமி.

பரஞ்சோதி நன்றியறிதலுடன் சிவகாமியை ஒருகணம் ஏறிட்டுப் பார்த்தான்.

ஆயனரின் முகத்தில் ஆச்சரியமும் ஆர்வமும் பொங்கின.

"என்ன? என்ன? அந்த வீர வாலிபனா இவன்? என்ன லாவகமாய் வேலை எறிந்தான் – மாமல்லர்கூட அதிசயிக்கும்படி! இவனுக்கு எந்த ஊர்? இத்தனை நாளும் எங்கே இருந்தான்? தங்களை எப்போது சந்தித்தான்...?" என்று சரமாரியாக ஆயனர் கேள்விகளை அடுக்கினார். சாதாரணமாக, ஆயனர் தாம் ஈடுபட்டுள்ள கலைகளின் விஷயத்திலே தவிர, வேறெதிலும் இவ்வளவு ஆர்வம் காட்டிப் பேசுவதில்லை.

"சித்தர்வாச மலைக்குப் போய் விட்டுத் திரும்பும்போது இந்தப் பிள்ளையை வழியில் பார்த்தேன்..." என்று பிக்ஷு ஆரம்பிப்பதற்குள்ளே ஆயனர் பரஞ்சோதியை மறந்துவிட்டார்.

"ஆஹா, அடிகள் சித்தர் மலைக்கா போயிருந்தீர்கள்? அங்கேயுள்ள சித்தர் அதிசயங்களைப் பார்த்தீர்களா?" என்றார்.

"பார்த்தேன், ஆயனரே! அதைப் பற்றி அப்புறம் சொல்லுகிறேன். நான் வரும் வழியில் சாலை ஓரத்தில் இந்தப் பிள்ளை படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். இவனை ஒரு பெரிய நாக சர்ப்பம் கடிக்க இருந்தது. என்னுடைய கொல்லா விரதத்தைக்கூடக் கைவிட்டு அந்த நாகத்தைக் கொன்று இவனைக் காப்பாற்றினேன்..."

"இது நல்ல வேடிக்கை! தங்கள் திருநாமம் நாகநந்தி! இவனை நாகம் தீண்டாமல் தாங்கள் காப்பாற்றினீர்கள்! இவன் எங்களை நாகம் கொல்லாமல் காப்பாற்றினான்! ஆஹா! ஆஹா!" என்று ஆயனர் சிரித்தார். நாகம் என்பது சர்ப்பத்துக்கும் யானைக்கும் பெயரானபடியால் ஆயனருக்கு மேற்படி சிலேடைப் பொருத்தம் மிக்க விநோதத்தையளித்தது.

புத்த பிக்ஷு, "இவனை நான் காப்பாற்றியதால் பல காரியங்களுக்குச் சாதகமாயிற்று. தங்களுக்கு இவன் ஓலை கொண்டு வந்திருக்கிறான்!" என்றார். "ஓலையா? யாரிடமிருந்து?"

"திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து. அவருடைய மருமகன் இவன்!"

ஆயனர் ஆர்வத்துடன் எழுந்து, "என் அருமைச் சிநேகிதரின் மருமகனா நீ? உன் பெயர் என்ன தம்பி!" என்று கேட்டுக்கொண்டே பரஞ்சோதியைத் தழுவிக்கொண்டார். பிறகு, "ஓலை எங்கே?" என்று கேட்டார்.

பரஞ்சோதி நாகநந்தியை நோக்கினான். அவர், "ஆயனரே ஓலை காணாமல் போய் விட்டபடியால் வாலிபன் இங்கு வருவதற்கே தயங்கினான். அதற்காகவே இவனை நான் அழைத்துக் கொண்டு வந்தேன். இவனுடைய மாமன் தங்களுக்கும் நாவுக்கரசருக்கும் ஓலைகள் கொடுத்திருந்தாராம். அந்த ஓலைகளை மூட்டைக்குள் கட்டி வைத்திருந்தான். அன்றிரவு யானை மேல் வேல் எறிந்த இடத்தில் மூட்டை காணாமற் போய் விட்டது..." என்று நிறுத்தினார்.

அப்போது ஆயனர், "ஆமாம், ஆமாம்! யானை நின்ற இடத்தில் ஒரு மூட்டை கிடந்தது. அதை நான் எடுத்து வந்தேன். ஆனால், மறுநாள் கோட்டைக் காவல் தலைவர் ஆள் அனுப்பி அதை வாங்கிக்கொண்டு போய்விட்டார். போனால் போகட்டும், என் அருமை நண்பரின் மருமகன் என்று சொன்னால் போதாதா! ஓலை வேறு வேணுமா...?

சிவகாமி, நம்மைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றிய வீரப்பிள்ளை இவன்தான். இவனுக்கு உன்னுடைய நன்றியைத் தெரியப்படுத்து!" என்றார்.

சிவகாமி பரஞ்சோதியைப் பார்த்த வண்ணம், "இவருக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை. இவரை யார் விதிக்குக் குறுக்கே வந்து வேலை ஏறியச் சொன்னது? இவர் பாட்டுக்கு இவர் காரியத்தைப் பார்த்துக்கொண்டு போவதுதானே?" என்றாள்.

சிவகாமியின் இந்தக் கடுஞ்சொல், கேட்டுக்கொண்டிருந்த மூன்று பேரையும் சிறிது திடுக்கிடச் செய்தது.

நாகநந்தி ஆயனரைப் பார்த்து, "உங்கள் குமாரிக்கு என்ன ஏதாவது உடம்பு குணமில்லையா?" என்று கேட்டார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, சுவாமி! அன்று அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டதிலிருந்து அவளுக்கு உற்சாகக் குறைவு ஏற்பட்டிருக்கிறது. அது ஏதோ அபசகுனம் என்று நினைக்கிறாள்... சிவகாமி! நீ உன் அத்தையிடம் போய், அதிதிகள் வந்திருக்கிறார்கள் என்று சொல்லு, அம்மா!" என்றார்.

"ஆகட்டும், அப்பா!" என்று சொல்லிவிட்டுச் சிவகாமி அந்த வீட்டின் பின் கட்டை நோக்கிச் சென்றாள். மண்டபத்தின் பின் வாசற்படியை அவள் தாண்டிக்கொண்டிருந்தபோது, புத்த பிக்ஷு பின்வருமாறு பரிகாசக் குரலில் சொன்னது அவள் காதில் இலேசாக விழுந்தது: "உம்முடைய குமாரியைத் தாங்கள் நன்றாகக் கவனிக்க வேண்டும், ஆயனரே! சாதாரணமாக, இளம் பெண்கள் உயிரின் மேல் வெறுப்புக் கொண்டார்கள் என்றால், அதற்குக் காரணம் காமதேவனுடைய புஷ்ப பாணங்களாகத்தான் இருக்கும் என்பது உமக்குத் தெரியாதா?"

சிவகாமி தனக்குள், "இந்தப் புத்த பிக்ஷு பொல்லாதவர்; நெஞ்சிலும் நாவிலும் நஞ்சு உடையவர்; இவருடன் அப்பாவுக்கு என்ன சிநேகம் வேண்டிக் கிடக்கிறது?" என்று சொல்லிக் கொண்டாள்.

இரண்டாங் கட்டுக்குள் சிவகாமி நுழைந்ததும் அங்கே 'கலகல'வென்றும் 'சடசட'வென்றும், பலவிதமான சப்தங்கள் ஏக காலத்தில் உண்டாயின.

பச்சைக் கிளிகளும் பஞ்சவர்ணக் கிளிகளும், "அக்கா! அக்கா! என்று கூவின. நாகணவாய்ப் புட்கள் 'கிக்கி!' என்றன. புறாக்கள் 'சடசட'வென்று, சிறகுகளை அடித்துக்கொண்டன. முற்றத்துக் கூரை மேல் உட்கார்ந்திருந்த மயில் 'ஜிவ்'வென்று பறந்து தரைக்கு வந்தது. அங்கிருந்த மான் குட்டி மட்டும் சப்தம் ஒன்றும் செய்யாமல், சிவகாமியின் முகத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டு அவள் அருகில் வந்து நின்றது.

இந்தப் பட்சிகள், மிருகங்கள் எல்லாம் சிவகாமி விளையாடிப் பொழுதுபோக்குவதற்காகவும், ஆயனரின் சிற்ப – சித்திர வேலைகளுக்காகவும் இரண்டாவது கட்டில் வளர்க்கப்பட்டு வந்தன.

சிவகாமி பிரவேசித்ததும் அவை போட்ட சப்தத்தைக் கேட்டு, "சீ! பேசாமலிருங்கள்! தலைவேதனை!" என்று அதட்டினாள்.

உடனே அங்கு அதிசயமான நிசப்தம் உண்டாயிற்று.

சிவகாமி சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு "இன்றைக்கு ரதியைத்தான் அழைத்துப் போக வேண்டும். ரதிதான் சப்தம் போடாமல் வருவாள்! ரதி, வா!" என்று கூறிவிட்டு மேலே சென்றபோது, மான்குட்டி மட்டும் அவளைத் தொடர்ந்து சென்றது.

மற்றப் பட்சிகள் மௌனமாயிருந்தபோதிலும், தலையைச் சாய்த்துக் கொண்டும் மற்றும் பலவிதக் கோணல்கள் செய்துகொண்டும் ரதியைப் பொறாமை ததும்பிய கண்களால் நோக்கின.

இரண்டாவது கட்டைத் தாண்டியதும், மூன்றாவது கட்டு ஒன்று இருந்தது. அது சமையல் கட்டு என்பது, அங்கு வந்த புகையினாலும், அடுப்பிலிருந்து பலவகை உணவுப் பதார்த்தங்

களின் நறுமணங்களினாலும் தெரிய வந்தது.

தாழ்வாரத்தில் நின்றபடி, "அத்தை!" என்று கூப்பிட்டாள் சிவகாமி.

"ஏன், குழந்தாய்?" என்று கேட்டுக் கொண்டு ஒரு மூதாட்டி சமையல் அறை வாசலில் தோன்றினாள்.

"அதிதிகள் இரண்டு பேர் வந்திருக்கிறார்கள். முன்னொரு தடவை வந்தாரே கடுவன்பூனை போன்ற முகத்துடனே ஒரு புத்த பிக்ஷு அவர் வந்திருக்கிறார்" என்றாள் சிவகாமி.

"பெரியவர்களைப் பற்றி இப்படியெல்லாம் சொல்லாதே, கண்ணே – நீ எங்கே கிளம்புகிறாய், ரதியையும் அழைத்துக் கொண்டு?" என்று மூதாட்டி கேட்டாள்.

"அப்பாவும் அந்தப் புத்த பிக்ஷுவும் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருக்கிறார்கள். அது முடிகிறவரையில் நான் தாமரைக்குளத்துக்குப் போய் வருகிறேன்!" என்று சொல்லி விட்டுச் சிவகாமி சமையற்கட்டைத் தாண்டிச் சென்று வீட்டின் கொல்லைப்புறத்தை அடைந்தாள்.

கொல்லைப்புறத்தில் வீட்டைச் சேர்ந்தாற் போல் மல்லிகை, முல்லை, அலரி, பாரிஜாதம், சம்பங்கி முதலிய பூஞ்செடிகளும் கொடிகளும் காணப்பட்டன. அவற்றையெல்லாம் தாண்டி மரங்களடர்ந்த வனப் பிரதேசத்துக்குள்ளே சிவகாமி பிரவேசித்தாள். அந்தக் காட்டில் நடக்கும்போது அவள் ரதியிடம் பின் வருமாறு சொல்லிக் கொண்டு போனாள்.

"என்ன; ரதி! அப்பாவுக்கு என் அரங்கேற்றத்தின்போது இரண்டே இரண்டு பேர் வரவில்லை என்றுதான் வருத்தமாம்! இந்தப் புத்த பிக்ஷு வந்து என் அரங்கேற்றத்தைப் பார்க்கவில்லையென்று வருத்தம் என்ன வந்தது...? யாருடைய பாராட்டுதலைப் பெறுவதற்காக நான் இரவு பகலாய்ப் படாதபாடுபட்டு இந்த நிருத்தியக் கலையைப் பயின்றேனோ, அவர் அன்றைக்கு வரவில்லை; இந்தப் பெரிய பல்லவ ராஜ்யத்துக்குள்ளே யார் மகாரஸிகரோ, அப்பேர்ப்பட்டவர் வரவில்லை. ஏழு வருஷங்களுக்கு முந்தி, நான் உன்னைப் போல் சிறு குழந்தையாயிருந்த காலத்தில், எவர் என்னுடன் கைகோத்து நின்று தாமும் நடனம் ஆடுவேன் என்று பிடிவாதம் பிடித்தாரோ – தமக்கும் நடனக் கலை சொல்லிக் கொடுக்கும்படி எவர் என் மோவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினாரோ – அவர் வரவில்லை. ரதி நீயே சொல்லு! ஆண் பிள்ளைகளைப் போல் பொல்லாதவர்கள் இந்த உலகத்தில் உண்டா...?"

ரதி பாவம், சிவகாமி தன்னிடம் சொல்லிக்கொண்டு வந்த விஷயங்களின் முக்கியத்துவத்தைக் கொஞ்சமும் அறிந்து கொள்ளாமல் ஆங்காங்குத் தரையில் காணப்பட்ட அருகம் புல்லின் நுனியைக் கடித்து மென்று கொண்டு வந்தது.

அரை நாழிகை நேரம் அவர்கள் காட்டுக்குள் நடந்து வந்த பிறகு, கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அந்த இடைவெளியில் ஓர் அழகிய தடாகம் இருந்தது. அதில் தாமரை, செங்கழுநீர், நீலோத்பலம் முதலிய மலர்கள் செழித்து வளர்ந்திருந்தன.

சிவகாமி அந்தக் குளத்தில் இறங்கி நீர்க்கரையோரமாய் நின்று தண்ணீரில் தன்னுடைய நிழலைப் பார்த்த வண்ணம் பேசினாள்:

"ரதி! இதைப் பார்! அவர் மட்டும் இனிமேல் எப்போதாவது வரட்டும்; நான் முகங் கொடுத்துப் பேசப் போவதே இல்லை! 'போதும், உம்முடைய சிநேகிதம்! போய் விட்டு வாரும்!' என்று கண்டிப்பாய்ச் சொல்லுகிறேனா, இல்லையா, பார்!" என்று சொல்லியவண்ணம், அதற்கேற்ப அபிநயம் பிடித்தாள்.

சிவகாமி குளக்கரையில் வந்து நின்ற சிறிது நேரத்துக்கெல்லாம் காட்டில் சற்றுத் தூரத்தில் ஓர் உயர்ந்த ஜாதிக் குதிரை வந்து நின்றது. அதன் மேல் வீற்றிருந்த வீரன் சப்தம் செய்யாமல் குதிரை மேலிருந்து இறங்கித் தடாகத்தை நோக்கி வந்தான்.

(தொடரும்)



# வெற்றியை விரட்டிப் பிடித்தேன்!

**பொ**ருளாதார கல்வியில், நாட்டிலேயே மிகச் சிறப்பான இடத்தைப் பெற்ற கல்வி நிறுவனம், தில்லி பொருளாதாரப் பள்ளி. அந்தப் பள்ளியில் டாக்டர் பட்டம் பெறுவதற்காக ஆராய்ச்சியைத் துவங்க இருந்தார் அந்த இளைஞர். கிட்டத்தட்ட தேர்வு பெற்றாகி விட்டது. கடைசியாக ஒரு நேர்முகத் தேர்வுதான் பாக்கி. பிரதமர் நேருவின் பொருளாதார ஆலோசகராக இருந்த கேஎன். ராஜ் போன்ற அறிவு ஜீவிகள் மாணவர்களைக் குடைந்து எடுத்துக் கொண்டிருந்தனர். அந்த இளைஞன் தேர்வு கமிட்டியின் முன் நின்றார். டாக்டர் ராஜ் அந்த இளைஞனைப் பார்த்து "நேருவின் விவசாயக் கொள்கையைப் பற்றிய உன் பார்வை என்ன?" என்று கேட்டார். ஒரு விவசாயியின் மகனான அந்த இளைஞன் சற்றும் தயங்காமல் "இந்தியாவுக்கு அது ஏற்றதல்ல" என்று வெளிப்படையாகச் சொல்லி விட்டார். ராஜுவுக்கு ஷாக். விவசாயக் கொள்கையை வகுத்ததில் அவருக்கும் பெரிய பங்கு இருந்தது. பின்னர் என்ன காரணத்தினாலோ தில்லி பொருளாதாரப் பள்ளியில் ஆராய்ச்சி மேற்கொள்ள அந்த இளைஞருக்கு இடம் கிடைக்கவில்லை. ஆனால் இளைஞன் மனம் தளரவில்லை.

அமெரிக்கா சென்று பொருளாதாரத்தில் டாக்



டர் பட்டம் பெற்று, மேரிலாந்து பல்கலைக் கழகத்தில் பொருளாதார துறையில் மிக உயர் நிலையை அடைந்து லட்சக் கணக்கான டாலர்கள் சம்பாதித்தார். தான் மட்டும் உயர்ந் தால் போதாது, தமது நாட்டு மக்களுக்கும் ஏதாவது நல்லது செய்ய வேண்டும் என்ற லட்சிய நோக்கில் பல வருடங்கள் கழித்து தமிழ்நாட்டிற்கு வந்து தொழிற்சாலைகள், கல்வி நிலையங்கள் ஆகியவற்றை உருவாக்கி னார் அந்த இளைஞர். தமிழக தொழில் வர லாற்றில் சிறப்பானதொரு இடத்தை இன்று பெற்றுள்ள பி.ஜி.பி. குழுமத்தின் தலைவர் பழனி ஜி. பெரியசாமி தான் அந்த இளைஞர். இந்த வெற்றி எப்படி சாத்தியமாயிற்று? பழனி ஜி.பெரியசாமி (பி.ஜி.பி)யிடம் கேட்டோம்.

நாமக்கல் அருகில் கொல்லிமலை அடி வாரத்தில் உள்ளது முத்துகாபட்டி கிராமம். அப்பா பழனி கவுண்டர். விவசாயி. பி.ஜி.பியுடன் பிறந்தவர்கள் ஆறுபேர். ஒரு சகோதரி, ஐந்து சகோதரர்கள். கிராமத்து துவக்கப்பள்ளியில் கல்வியைத் துவங்கி, பொருளாதாரத்தில் பட்ட மேற்படிப்பை முடித்தார் பி.ஜி.பி.

"என்னுடைய கனவு மாவட்ட ஆட்சி யாளராக வருவதுதான். ஆனால் கிராமத்துப் பள்ளியில் வயதை அதிகமாகச் சொல்லி விட்டதால், பட்டமேற்படிப்பு முடிக்கும் போது எனக்கு சிவில் சர்வீஸ் எழுதும் வயது வரம்பு தாண்டிய நிலை. கனவு கை கூட வில்லை. மாநிலக் கல்லூரியில் எனக்கு ஆசிரியராக இருந்த வேலாயுதம் 'கவலைப் படாதே. பொருளாதாரத்தில் இன்னமும் படித்து டாக்டர் பட்டம் வாங்கு என்று என்னை ஊக்குவித்தார்" என்கிறார் பி.ஜி.பி.

காமராஜ், அண்ணா, ஆபிரகாம் லிங்கன், கென்னடி என்று பல தலைவர்களின் வாழ்க்கையைப் பாடமாக எடுத்துக் கொண்டார் பி.ஜி.பி. தெரு விளக்கில் படித்து, நீதிபதியாக உயர்ந்த முத்துசாமி ஐயரின் வாழ்க்கை பி.ஜி.பியை நெகிழ வைத்திருக்கிறது.

மாநிலக் கல்லூரியின் பெருமை மிகு மாணவர்களில் பி.ஜி.பியும் ஒருவர். படிப்பில் தங்க மெடல்! மாணவர் தலைவரும் கூட.

"பல கூட்டங்களில் மிகவும் முற்போக்கான கருத்துக்களைக் கூறி மாணவர்களின் சிந்தனையைக் கிளறி விடுவேன். கலப்பு மணத்தைப் பெரிதும் ஆதரித்துப் பேசுவேன். ஆனால் என் சொந்த வாழ்க்கையில் கலப்பு மணம் புரிந்து கொள்ள முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டேன்" என்று மலரும் நினைவுகளில் மூழ்கினார் பி.ஜி.பி. பி.ஜி.பியின் படிப்புக்காக அப்பா பழனி கவுண்டர் தன்னிடமிருந்த நிலங்களைக் கொஞ்ச கொஞ்சமாக விற்று வந்தார். ஒரு நிலத்தை விற்பது தொடர்பாக பத்திரப்பதிவுக்குச் சேந்தமங்கலம் ரிஜிஸ்டர் அலுவலகத்துக்கு அப்பாவுடன் சென்றிருந்தார் பி.ஜி.பி. பத்திரத்தில் கையெழுத்து போட்டவுடன் அப்பா கண்ணில் குற்றாலம். பதறிப் போய் விட்டார் பி.ஜி.பி "என்னப்பா என்ன ஆச்சு?" என்றார். "உன் படிப்புக்காக எல்லாவற்றையும் விற்கிறேன். உனது சகோதரிகள் திருமணத்திற்குக் கூட என்னிடம் பணமில்லை. உன்னை நம்பி நாங்கள் இருக்கிறோம், இனி நீதான் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்று மகனின் கைகளைப் பற்றிக் கொண்டார் பழனி கவுண்டர். "நான் கலப்பு மணம் புரிந்து கொண்டிருந்தால் நாற்பது வருடங்களுக்கு முன்பு நிலவி வந்த சமூக கட்டுப்பாட்டில் என் சகோதரிகளுக்குத் திருமணம் செய்வது என்பது சிரமமான ஒன்றாக இருந்திருக்கும். இது தவிர கலப்பு மணம் என்பது ஏதோ பெரிய குற்றம் என்பது போன்று பேசியிருப்பார்கள். இதனால் பல கிராமத்துப் பெற்றோர்கள் பயந்து பையன்களை நகர்ப்புறத்துக்கு அனுப்பி படிக்க வைப்பதை நிறுத்தியிருப்பார்கள். இந்த இரண்டு காரணங்களின் அடிப்படையில் என் காதலுக்கு மனத்தில் மட்டும் தாஜ்மகால் கட்ட வேண்டியதாகி விட்டது" என்று சொல்கிறார் பி.ஜி.பி.

அமெரிக்காவில் கை நிறைந்து வழியும் அளவுக்குச் சம்பாதித்துக் கொண்டிருந்த பி.ஜி.பிக்கு மனத்தில் நெருப்பாக இருந்த ஒரே குறிக்கோள், தமிழ்நாட்டு தொழில் முன்னேற்றத்துக்குத் தனது பங்களிப்பாக ஏதாவது செய்ய வேண்டுமென்ற வெறிதான். அது செயலாகக் கனிந்து வரும் கால கட்டத்தில்தான், அவருக்குக் கிடைத்தது எம்.ஜி.ஆரின் நட்பு. எம்.ஜி.ஆருடன் நெருக்கமாக இருந்த அந்தக் காலத்தைப் பற்றி சொல்லி, சொல்லி பெருமிதம் கொள்கிறார் பி.ஜி.பி.

"எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கும் ஒரு சம்பவத்தைச் சொல்கிறேன். சத்துணவை அறிமுகப்படுத்திய காலம் அது. சத்துணவு குழந்தைகளுக்குச் செல்வதற்கு முன்னர் பலர் "சாப்பிட" வாய்ப்பிருக்கும் திட்டம். "இது போன்று இலவசமாகச் சோறு போடுவதைத் தவிர்த்து, தொழிற்சாலைகள் கட்டினால் தமிழ்நாட்டில் நிரந்தரமாக வளர்ச்சி ஏற்படுமல்லவா?" என்று ஒருமுறை கேட்டேன். "நீங்கள் பெரிய பொருளாதார பேராசிரியர், உங்களுக்குத் தெரியாததல்ல... என்று கூறி தொடர்ந்தார் எம்.ஜி.ஆர். "இந்த சத்துணவு திட்டத்தில் இடையில் சிலர் சமையல் பொருட்களைக் கொள்ளையடித்தாலும், அந்த பொருட்கள் யாராவது சாப்பிடத்தான் பயன்படப் போகின்றன. இது தவிர சோறு போடுவதால் கிராமத்து குழந்தைகள் இதுவரை இல்லாத அளவுக்குப் பள்ளிக்கு வரத் துவங்கியிருக்கிறார்கள். சத்துணவு கொடுப்பதன் மூலம் அந்தக் குழந்தைகளுக்கு நோய் எதிர்ப்பு தன்மை வளர்கிறது. இந்தத் திட்டம் எதிர் காலத்தில் நல்ல உறுதியான மக்களை நாட்டுக்காகத் தயார் செய்யும்" என்று நம்பிக்கையான குரலில் சொல்லிமுடித்தார் எம்.ஜி.ஆர். அவரின் தொலைநோக்குச் சிந்தனை என்னைப் பிரமிக்க வைத்தது."

> "மெட்டுக்குப் பாட்டு எழுதறது கலபமா? இல்ல பாட்டுக்கு மெட்டு போடுறது கலபமா?"
> "எதுவானாலும் துட்டுக்குனா தான் கலபம்!"
> — அம்பை தேவா

எம்.ஜி.ஆரின் உற்சாகமான ஆதரவோடு தனது இந்திய நண்பர்களின் முதலீடுகளைப் பெற்று தமிழகத்திற்குப் பெரிய உத்வேகத்தோடு வந்து சேர்ந்தார் பி.ஜி.பி.

அரியலூரில் ஒரு சிமெண்ட் தொழிற்சாலை கட்டுவதற்கான வேலைகளில் இறங்கினார். அதிர்ஷ்டக் காற்று வீசத் துவங்கியது. சிமெண்ட் தொழிற்சாலையை அடுத்து, சர்க்கரை ஆலை, நாமக்கல்லைச் சுற்றி கல்வி நிறுவனங்கள் என்று ஆலமரமாக விழுதுகளை பரப்பியது பி.ஜி.பி. குழுமம். பதினைந்து வருட காலத்தில் ரூ. 200 கோடிக்குப் பற்று வரவு உள்ள, தமிழ் நாட்டின் முன்னணி தொழில் குழுமமாக உருவாகி விட்டது.

"இந்தியாவில் தொழிலதிபர்களை மக்கள் பார்க்கும் பார்வையே வித்தியாசமாக

இருக்கிறது. பொது மக்கள் பணத்தை அப கரித்து, தொழில் நடத்தி பெரும் பணக்காரர் களாக தொழில் அதிபர்கள் இருப்பதாக தவ றான கண்ணோட்டம் இருக்கிறது. ரத்தம் வியர்வையாக மாறியதால்தான் இந்த அளவுக்கு எங்களுக்கு வெற்றி வந்து சேர்ந் திருக்கிறது. எனது கடைசி வேலையாள் வரை இந்த வெற்றிக்குச் சொந்தம் கொண்டாட முடியும். பணத்துடன் எங்கள் உழைப்பும் இல்லாவிடில் இது சாத்தியமல்ல; நாங்கள் ஒன்றும் புத்தர்கள் அல்ல, இந்தியாவில் தொழில் முனைவோர் நேர்ப் பாதையில் செல்வது என்பது சற்று கடினமான காரியம் தான். மிகக் குறைந்த அளவு சேதாரத்துடன் சில காரியங்களைச் சாதித்துக் கொள்ள வளைவான பாதைகளில் செல்ல வேண்டிய தாக இருக்கிறது'' என்று கனமான நெஞ்சுடன் சொல்கிறார் பி.ஜி.பி.



அது போன்ற பல சோதனையான சமயங் களில் மீண்டும் அவரை உற்சாகப்படுத்தி காரி யம் ஆற்ற வைக்கும் சக்தி எது?

"எதற்கு இங்கு வந்து அவஸ்தைப் பட வேண்டும். மனைவி, குழந்தைகளுடன் மகிழ்ச்சியாக அமெரிக்காவிலேயே இருந்தி ருக்கலாமே" என்று பல சமயங்களில் தோன்று வதுண்டு. ஓரிரு சமயங்களில் கிட்டத்தட்ட போய்விட வேண்டுமென்று முடிவும் கூட எடுத்து விட்டேன். ஆனால் அது போன்ற சம யங்களில் எங்கள் தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் தொழிலாளர்களின் முகத்தைப் பார்த்தவுடன் என் சோர்வும், சலிப்பும் பறந்து போய்விடும். ஏறக்குறைய 2000 தொழிலாளர் களின் வீட்டில் அடுப்பு எரிவதற்கும், அவர் களின் குழந்தைகள் தரமான கல்வி பயிலவும் உடை உடுக்கவும், காரணமாக நாம் இருக் கிறோமே என்ற சமூக நோக்கமும், என் சலிப்பை போக்கிவிடும். இவர்களுக்காக நான் ஒருவன் மட்டும் கஷ்டங்களைத் தாங்கி கொள் வதில் எந்த தவறும் இல்லை; என்ற தியாக மனப்பான்மை ஆட்கொள்ள, மீண்டும் என்னை சார்ஜ் செய்து கொண்டு புத்து ணர்ச்சியோடு செயல்படத் துவங்குவேன்'' என்கிறார் பி.ஜி.பி.

**பி**.ஜி.பியின் பெட் பிராஜெக்ட் மெரிடியன் ஓட்டல். ஒவ்வொரு அங்குலமும் அவர் பார்த்து, பார்த்துக் கட்டியது. பிரமிக்க வைக்கும் 'கலைக் கோயிலாக அதை உருவாக்கி இருக்கிறார். "இன்று பல வெளிநாட்டுக்காரர் களும், இந்தியாவில் இந்த அளவு சர்வதேச தரத்துடன் ஒரு ஓட்டலா என்று வியந்து பாராட்டுகிறார்கள்" என்கிறார் பி.ஜி.பி.

சமீபத்தில் ஹாலிவுட் நடிகரான மார்ட்டின் கோபன் சென்னைக்கு வந்திருந் தார். "இந்தியா என்றாலே, அசுத்தமான நாடு, பாம்புகளும், வெறி நாய்களும் உலவிக் கொண் டிருக்கும் பூமி" என்ற தவறான தகவல் அவருக் குக் கொடுக்கப்பட்டிருந்தது. ஏர்போர்ட்டில் இருந்து வெளியே வரவே பயந்தார். அதன் பின் மெரிடியன் ஓட்டலுக்குத் தயக்கத்துடனே வந்து சேர்ந்தார். ஓட்டலைப் பார்த்து அசந்து விட்டாராம். "மிக, மிக வளர்ச்சியடைந்த நாட்டில் கூட இந்த அளவு வசதியுடன் ஓட்டல் கிடையாது" என்று சொன்னாராம் கோபன்.

**வா**ழ்க்கையில் வெற்றியடையத் துடிக் கும் இன்றைய இளைஞர்களுக்குப் பி.ஜி.பி. கொடுக்கும் டிப்ஸ் ஏதேனும் உண்டா?

"உங்களது சாதனைகள் மட்டுமே, உங் களைச் சிகரத்துக்கு இட்டுச் செல்லும், அப் போது தான் அங்கு நிரந்தரமாகத் தங்க முடியும். அதிகாரத்தின் மூலமாக உச்சாணிக் கொம்புக் குச் சென்று நிலைத்து நிற்க ஆசைப்படாதீர் கள். அதிகாரம் நீர்க்குமிழி போன்றது. அதி காரம் மூலம் கிடைக்கும் புகழ், வருமானம் எதுவும் நிலையானதல்ல. இதைப் புரிந்து கொள்ளுங்கள். அடுத்தாக நான் சொல்ல விரும்புவது எதையும் ஆக்கபூர்வமான கண் ணோட்டத்தில் பாருங்கள். ஒரு அமெரிக்கனை "ஹவ் ஆர் யூ?" என்று கேட்டால், "ஐ ஆம் ஃபைன்" என்று வாய் நிறைய சிரிப்புடன் சொல்வான். இங்கு யாரையாவது அது போலக் கேளுங்கள், "ஏதோ ஓடுது" என்று சலிப்புடன் கூடிய பதில்தான் வரும். எதிர் மறையான கண்ணோட்டம். இது மாற வேண் டும். கடைசியாக வெற்றி, கண்டு மமதை கொள்ளாதே, ஆட்டம் போடாதே! நீ நீயாக இரு. முகமூடி வேண்டாம் என் வெற்றி என் தோலைத் தாண்டி உடலுக்குள் ஊடுருவ அனுமதிக்கவே மாட்டேன்'' என்கிறார் பி.ஜி.பி.

சந்திப்பு: **ப்ரியன்**
படங்கள்: **ராஜன்**



# பாதை மாறும்

அண்மையில் ஓர் ஆய்வு முடிவு வெளியானது. ஒரு காலத்தில் வட தமிழ்நாட்டில் காவிரி நதி பாய்ந்து மண்ணுக்குள் மறைந்திருக்கிறது என்பதுதான் அந்த பாரதிதாசன் பல்கலையின் ரிமோட் ஸென்ஸிங் மைய இயக்குநர் டாக்டர் எஸ்.எம். இராமசாமி தெரிவித்துள்ளபடி, பூமியைச் சுற்றி வருகிற செயற்கைக் கோள் ஆய்வுகள் வாயிலாக, ஹொகனேக்கல்லிலிருந்து, புலிக்கட் வரை காவிரியாறு பாய்ந்திருப்பதற்கான தடயங்கள் கிடைத்துள்ளன.

விண்வெளி அறிவியலில் கிடைத்த வரப் பிரசாதம் இந்த ரிமோட் ஸென்ஸிங் ஆய்வு முறை. செயற்கைக் கோள்களில் உள்ள நுட்பமான கருவிகள் பூமிக்கு அடியில் புதைந்து கிடக்கும் கனிம வளங்களைக் கண்டறிந்து சொல்லிவிடுகின்றன.

காவிரியைப் போலவே, பாலாறு நதியும் வாலாஜாபேட்டைக்குப் பிறகு வடக்கே பாய்ந்து இப்போதைய கேசவரம் அணைக்கட்டு, சத்தியமூர்த்தி சாகர், தாமரைப்பாக்கம், மீஞ்சூர் வழியே பயணித்துக் கடலை அடைந்திருக்கிறது என்று செய்தி வெளியாகியுள்ளது.

இந்த இடங்களைக் கண்டறிவதன் மூலம் நிலத்தடி நீரோட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். எப்படியாவது தாகம் தீர்த்தாக வேண்டுமே.

காவிரியும் பாலாறும் மட்டுமில்லை; நம் நாட்டிலேயே வடமாநிலங்களில் இதுபோல் நதிகள் தடம் மாறியுள்ளன.

இப்போதைய ராஜஸ்தான் மாநிலத்தைக் கூட 'நதிகளின் புதை குழி' என்று சொல்வதுண்டு. பல நதிகள் அங்கே மண்ணுக்குள் மறைந்து போய்விட்டன. பத்துக் கிலோ மீட்டர் அகலத்துக்கு ஓடிய நாகோர் மாவட்டத்தில் இப்போது ஒரு சிறிய நீரூற்றைக் கூடக் காண முடியவில்லை என்கிறார்கள். கடந்த ஒரு லட்சம் முதல் பத்து லட்சம்

# நதிகள்!

ஆண்டுகளுக்கிடையில் ராஜஸ்தானத்தின் ஆற்று வளம் படிப்படியாகக் குறைந்து காணாமல் போய்விட்டதாய் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

'கங்கா யமுனா சரஸ்வதி?' - தொலைக்காட்சியின் புண்ணியத்தில் எல்லோருக்கும் தெரிந்திருக்கும் ஒரு தொடர். இவை மூன்றும் நதிகளின் பெயர்கள். வேதகாலத்தில் ஓடிய சரஸ்வதி நதிக்கரையில் முனிவர்கள் தவமிருந்திருக்கிறார்கள். மகா பாரதத்திலும் சரஸ்வதி நதியைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. இப்போது அந்த சரஸ்வதி ஓடிய சுவடே இல்லை. கௌரவர்களின் தலைநகரமான ஹஸ்தினாபுரம் அழிந்ததும் கங்கை நதி தன்னுடைய பாதையை மாற்றிக் கொண்டதால் தான் என்கிறார்கள். யமுனையும் இப்படித் தடம் மாறியிருக்கிறது.

> **நிலத்தடிப் பாறைத் தகடுகள் இலேசாக இடம் பெயர்ந்தாலும் நதியோட்டம் மாறுபடும். சரஸ்வதியின் விஷயத்தில், அதன் கிளை நதிகள் இப்படி பாதிக்கப்பட்டு, அதற்கு நீர் வரத்துத் தடைப் பட்டிருக்கலாம்.**

நதிகளின் ஓட்டம் நேர்கோடாக இருப்பதில்லை. பாம்பு போல் வளைந்து வளைந்தே அவை நல்கின்றன. இதனால் பல இடங்களில் அவை வளைந்து திரும்பவும் வந்த வழியை நோக்கியே பாய்வதுண்டு. இப்படி வளைவது ஆங்கில 'சி' எழுத்து வடிவில் ஏற்படும். இந்தப் பகுதியே ஓர் ஏரியாகிவிடும். இதை Ox-bow lake என்கிறார்கள்.

இப்போது சொல்லப்படுகிற ரிமோட் ஸென்ஸிங் முறையில் சரஸ்வதி நதியின் சுவடையும் ஆய்வாளர்கள் கண்டறிந்திருக்கிறார்கள். யமுனைக்கும் சட்லெஜ் நதிக்கும் இடைப்பட்ட பாதையில் சரஸ்வதி பாய்ந்திருக்கிறது.

நதிகள் இடம் மாறுவது எதனால்? பூமி அதிர்வுகளால் அதன் கட்டுமானக் குலைவு ஏற்படக் கூடும். நிலத்தடிப் பாறைத் தகடுகள் இலேசாக இடம் பெயர்ந்தாலும் நதியோட்டம் மாறுபடும். சரஸ்வதியின் விஷயத்தில், அதன் கிளை நதிகள் இப்படிப் பாதிக்கப்பட்டு, அதற்கு நீர் வரத்துத் தடைப்பட்டிருக்கலாம் என்பது ஒரு கருத்து.

இந்தியாவில் சில பகுதிகளில் பூமியின் 110 - 100 மீட்டர் ஆழத்தில் ஏரிகளும் நிலத்தடி நீரோட்டமும் இருப்பதைக் கண்டறிந்துள்ளனர். கொஞ்சம் ஆழம் தோண்டியவுடனேயே ஈர மண் தட்டுப்படும். ஒரு கிண்ணத்தில் நீரை ஊற்றி அதில் மண்ணையும் நிரப்பியது போலத்தான் இவை காணப்படும். இந்தப் பகுதியில் தோண்டினால் தண்ணீர் கிடைக்கும். கடற்கரை மணலில், குழி தோண்டி நீர் எடுப்பதுபோல, அதிக ஆழம் தோண்டினால் பாறை வந்துவிடும். நம்முடைய நாட்டின் பாதியளவுப் பரப்புக்கு மேல் மண் தரை அதிகக் கனமுடையதாய் இல்லை. சீக்கிரமே பாறை வந்துவிடும்.

வரலாற்று ஆசிரியர்கள் காளியங்கன் என்று ஒரு நதியைப் பற்றியும் சொல்வார்கள். அதுவும் சரஸ்வதியைப் போலவே புதையுண்டு போனதுதான். ஹரப்பா நாகரிகம் அழிந்தது, இந்த நதிகளின் மாயங்களால்தான் என்கிறார்கள்.

நதிகள் இடம் மாறுவது, மண்ணுக்குள் மறைவது எல்லாம் வெகு அரிதாக நிகழ்ந்தவை. மண்ணின்மீது பொழியும் மழை நீரில் முக்கால் பங்கு பூமியிலும், கால் பங்கு கடலிலும் போய் விழும் என்பது ஒரு கணக்கீடு. இப்போது இயல்பான மழை வளம் குன்றிவிட்டதால் நதிகள் இடம் பெயர்கிற வாய்ப்பே இல்லை.

முன்பு இடம் பெயர்ந்த நதிகளைத் தேடுவதாவது பலன் தருமா என்று பார்க்கலாம். தேடுதல் ஒரு புறம் இருந்தாலும் வரலாறுகள்தான் எத்தனை சுவையானவை!

- சுப்ர.பாலன்



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில், இந்த ஆண்டு பரிசு பெற்றவர்களை அறிமுகப் படுத்துவதில் பெருமிதம் கொள்கிறோம்!**

# 15 வருட முயற்சிக்குப் பலன்!

**மு**தல் பரிசாக ரூ 5000 பெறும் 'ஊர்ச்சோறு' சிறுகதை எழுதியவர் அபிமானி.

இயற்பெயர் மணி. தூத்துக்குடி துறைமுகத்தில் எழுத்தர் பணி. அநேகச் சிறுகதைகள் 'கல்கி'யில் பிரசுரமாகியுள்ளன. அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற வேண்டுமென, பதினைந்து வருடங்களாக செய்த முயற்சிக்கு, இந்த வருடம்தான் பலன் கிடைத்தது என்று மகிழ்கிறார்.

'பாரம் சுமப்பவர்கள்' என்ற கவிதைத் தொகுதியும், 'நோக்காடு', 'புனைமுனி' என்ற தலித் சிறுகதைத் தொகுதிகளும் வெளியாகியுள்ளன. ஏராளமான இலக்கியப் பரிசுகள் பெற்றிருக்கிறார்.

இவரது எழுத்தின் உந்து சக்தியாக மாவோயிஸ அம்பேத்காரிய சிந்தனையைக் கொண்டுள்ளார். இலக்கிய கர்த்தாக்கள் ஜெயகாந்தன், பா. செயப்பிரகாசம் எழுத்துக்கள் இவரது ஆதர்ஸம்.

**இ**ரண்டாவது பரிசாக ரூ 3000 பெறும் 'மாறுதல்' சிறுகதை எழுதியவர் சாம்பவி. இயற்பெயர்: பிரபாகர். 'சத்தியப் பிரியன்' என்ற புனைபெயரும் உண்டு. பன்னிரண்டு வருடங்களாக எழுதி வரும் இவர், சேலத்தில் வங்கிப் பணியாளர். இலக்கியப் போட்டிகளில் பலமுறை பரிசு பெற்றிருக்கிறார். இரண்டு சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன.

''ஆதர்ஸம் – 'அசோகமித்திரனைத்' தவிர யாருமில்லை'' என்கிறார் சாம்பவி.



• அபிமானி



• சாம்பவி



• வி. மணி



• வே. குருநாதன்



• சுகுமாரன்

**மூ**ன்றாவது பரிசாக ரூ.2000/- பெறும் 'சென்ற நேரத்தில்' சிறுகதை எழுதியவர்: வி.மணி, சொந்த ஊர் திருவண்ணாமலை அருகில் உள்ள எறையூர். இப்போது செகந்திராபாதில் கன்சல்டிங் இன்ஜினியராக சொந்தத் தொழில் புரிகின்றார். தமிழ், ஆங்கில இலக்கியங்களில் ஈடுபாடு அமரர் கல்கியின் பரம ரசிகர். கம்பனும், பாரதியும் ஆதர் ஸம். எழுத்தாளர் சுப்ரபாரதிமணியனுடன் சேர்ந்து 'கனவு' என்ற குறும்பத்திரிகை நடத்திய அனுபவம் உள்ளவர்.

**ஆ**றுதல் பரிசாக ரூ.1000/- பெறும் சிறுகதை 'இராப்பாடம்' – எழுதியவர் வே. குருநாதன்.

''என்னை எழுத்தாளனாக அறிமுகம் செய்ததே 'கல்கி'தான் என்று பூரிக்கிறார். 1993-ம் ஆண்டு கல்கி சிறுகதைப் போட்டியில் முதல் பரிசும் 1994-ம் ஆண்டு இரண்டாம் பரிசும் பெற்றவர்.

'மனித நேயத்தை வலியுறுத்தும் படைப்புகளைத் தருவதே என் லட்சியம்' என்கிறார் வே. குருநாதன்.

**ஆ**றுதல் பரிசாக ரூ. 1000/- பெறும் சிறுகதை 'கிராமத்தில் சில மாஞ்செடிகள்' எழுதியவர் படுதலம் சுகுமாரன்.

திருவள்ளூர் மாவட்டம், பள்ளிப்பட்டு வட்டம் படுதலம் கிராமத்தில் பிறந்தவர். பி.ஏ பட்டதாரி. துணுக்கு எழுத்தாளராக எழுத்துலகப் பிரவேசம். கடந்த பன்னிரண்டு ஆண்டாக சிறுகதைகள், நாவல்கள் எழுதுகிறார். ஏழு தொகுப்புகள் வெளிவந்துள்ளன. ''ஆர்வத்தினால் எழுதத் துவங்கினேன். இப்போது எழுதுவது அவசியமாகி விட்டது. சிறப்பாக எழுத முயற்சிப்பதுதான் எனது லட்சியம், கனவு, ஆசை எல்லாம்'' என்கிறார்.

அது ஒரு விநோதமான சூழ்நிலை. பரஸ்பரம் இணக்கமான நண்பர்கள், ஒருவரையொருவர் மனதுக்குள் 'இவன் எங்கடா இங்க வந்தான்?' என்று கடுப்புடன் யோசித்தபடி பார்த்துக் கொண்டனர்.

சரவணன் மனத்தில் பெரியதொரு ஆச்சர்யமிருந்தது. 'பூவரசம் வீடு தன்னுடையது. அதற்குக் குடி வந்திருக்கிற குடும்பத்துடன் தனக்கு மட்டும்தான் நெருக்கம். அந்த வீட்டின் கனவுக்கன்னி தனது வீடு தேடி வந்து சாவி கேட்டுப் போனாள். அவளை நண்பர்கள் யாவரும் தூர இருந்து பார்த்திருக்க, பேசிப் பழகுகிற பொன்னான வாய்ப்புத் தனக்கு மட்டுமே என்று மனசுக்குள் பெருமிதம் கொண்டிருந்தான். இப்போது இங்கு அவன் வந்ததற்கும் முக்கியக் காரணம் உண்டு. கிருஷ்ணவேணியைப் பார்த்து, 'இப்படிக்கிப்படி, அந்த உள் ரூமின் சாவி தொலைந்து விட்டது. ஒரு முறை பூட்டைப் பார்த்து விட்டு மாற்றுச் சாவி ஏற்பாடு செய்து தருகிறேன்', என்று சும்மா வேணும் சொல்லி சிறிது நேரம் கதையடித்து விட்டுப் போகலாம் என்றெண்ணித்தான் கிளம்பினான். கிளம்புகையில் மனத்தின் ஓரத்தில் மணியையோ, சுந்தரையோ உடன் அழைத்துக் கொள்ளலாம் எனத் தோன்றியது. கூடவே சடாரென மனத்தின் சில பகுதிகளிலிருந்து இதெல்லாம் வேண்டாம்' என்று பாதுகாப்புக் கட்டளைகள் கிளம்பின. களவுக்கும் 'இன்னொரு காரியத்துக்கும்' கூட்டு ஆகாதென்று பெருமாயிப் பாட்டி சொல்லும் உபதேச வசனங்கள் அவனது நினைவுக்கு வந்து போயின.

தவிரவும் இன்னொரு இன்பந்தரும் சாத்தியத்தையும் சரவணனின் மனது யோசித்தது. கிருஷ்ணவேணி வீடு தேடி வந்து தன்னிடம் பேசிவிட்டாள். தானும் அவள் வீட்டுக்குச் சென்று பேசி விட்டுத் திரும்பினால் வெறுமனே எட்ட இருந்து பார்த்து பெருமூச்சு விடுகின்ற சகாக்களிடையே, தான் ஒரு ஹீரோ அல்லவா? அவ்வளவு சுலபத்தில் இப்படி ஒரு வாய்ப்பு அமைந்து விடுமா என்ன?

சரவணன் மனத்தில் அந்தக் காட்சிக்கு ஒத்திகை நடந்தது. மிகவும் அலட்சிய பாவத்துடன் சரவணன் அமர்ந்திருக்கிறான். சுற்றிலும் மணி, சுந்தர், பாலா ஆகியோர் எச்சியிலைத் தொட்டி நாய் போன்று முகத்தை வைத்துக் கொண்டு சரவணனின் வாய் வார்த்தைக்குக் காத்திருக்கின்றனர். சரவணன் இப்படிப்பட்ட சந்தர்ப்பம் தரும் கிறக்கத்தை முழுதும்

# பூவரசம் 7



அனுபவித்து விட எண்ணியவனாக ஒவ்வொரு வார்த்தையையும் இடைவெளி விட்டு தாமதித்தே பேசுகிறான். அவ்வப்போது வேண்டுமென்றே கிறக்கமாகக் கண்களை மூடிக் கொள்கிறான். நண்பர்களின் முகம் விரிகிறது.

'மேல என்னாச்சு சொல்றா சொல்றா' என்கிறார்கள். 'கிருஷ்ணவேணிக்கு முதல் பார்வையிலேயே தன்னைப் பிடித்துப் போயிருக்க வேண்டும்' என்கிற தமது அபிப்ராயத்தை மிகவும் நம்பிக்கையான குரலில் போதுமான ஆதாரங்களுடன் சரவணன் விளக்க அவர்கள் யாவரும் உள்ளுக்குள் கசிகிற வேதனையை ஒரு கையால் துடைத்த



பாஸ்கர் சக்தி

படி 'அப்புறம், அப்புறம்' என்கிறார்கள். பாவமாக இருக்கிறது. சுந்தர், "அந்த மத்த ரெண்டு பொண்ணுங்க எப்படிடா? எங்களை அதுகளுக்கு அறிமுகப்படுத்தி விடுறியா?" என்கிறான் மிகவும் பரிதாபமாக.

ஆனால்....? ஒத்திகை போலில்லை நிஜம். தனது ஹீரோ வாய்ப்பைத் தகர்த்துவிட்டு சுந்தரும், மணியும் சட்டமாக உள்ளே வந்து அமர்ந்திருக்கிறார்கள். எப்படி? எப்படி இது? என்று கேள்விகள் சூழுற மணியையும், சுந்தரையும் பார்த்தான் சரவணன்.

மணிக்கும், சுந்தருக்கும் இப்படிப்பட்ட பிரச்னைகள் இல்லை. அவர்களுக்கு இருந்ததெல்லாம் ஒரேயொரு எரிச்சல் தான். இந்த வீரையன்... புளுகுணி வீரையன். நம்மளை 'அசிஸ்டெண்டுப் பயக' என்று சொல்லி விட்டானே என்று மனசுக்குள் குமைந்தபடியிருந்தார்கள்.



வீரையனுக்கு இந்தச் சிறுவர்களின் அற்பமான கவலைகள் எதுவும் ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. அவன் கிருஷ்ணவேணியின் கண் கண்டான், கூந்தல் கண்டான், தோள் கண்டான்... என்று கண்டபடியிருந்தான்.

உள்ளே நுழைந்த சரவணனைப் பார்த்ததும் ஒரு கீற்றுப் புன்னகை கிருஷ்ணவேணியின் முகத்தில் தெறித்தது. லீலா அவனைப் பார்த்து "யாரு தம்பி?" என்றாள்.

சரவணன் பேன்ட் அணிந்திருந்தான். அதனை 'இன்' செய்து பெல்ட் கட்டியிருந்தான். கிருஷ்ணவேணியின் வீட்டிற்கு வருவதற்கான சிரத்தை அவனது தலைவாரலில் தெரிந்தது. இடது கையின் பெருவிரலில் மட்டும் நகச்சாயம் பூசியிருந்தான். ஒரு இனிய வாசனை அவனிடமிருந்து கமழ்ந்தது.

லீலாவின் குரலில் அங்கிருந்த அமைதி கலைந்தது. வீரையன் 'சட்'டென்று திரும்பி சுதாரித்தவனாக உரத்த குரலில் சரவணனை உற்சாகமாக வரவேற்றான்.

''வாங்க...வாங்க... மொதலாளி... இவருதாங்க உங்க வீட்டுக்குச் சொந்தக்காரரோட மகன்... சின்ன ஹவுஸ் ஓனரு... வாடா சரவணா...''



சரவணன் தர்மசங்கடமாக உள்ளே வந்தான். சன்னமான குரலில் சுந்தரைப் பார்த்து இககிகத்தான்.

"நீங்க எப்படா வந்தீங்க இங்க?"

"அண்ணன்தான் கூட்டியாந்தாரு."

"வீரையனின் மீதான வெறுப்புக்காரணப் பட்டியலில் இதனையும் சரவணன் சேர்த்துக் கொண்டான். அதனை வீரையன் மேலும் அதிகரிப்பது போல் கிண்டலான உரத்த குரலில் பேசினான்.

"என்ன சரவணா ஜம்முனு பேன்ட் போட்டு, 'இன்' பண்ணி பொண்ணு பாக்கப் போறவன் மாதிரி கௌம்பிட்ட... எங்கே?"

சரவணன் மனது புகைந்தது. அடக்கிக் கொண்டான். "டவுனுக்குப் போலாம்னு ஒரு ஐடியா. கிளம்பி வந்தேன். அப்படியே போற வழியில..." தான் பேன்ட் அணிந்து வந்ததற்கான காரணத்தை விளக்க வேண்டிய நிர்ப்பந்தத்தோடு பேசினான் சரவணன்.

"உக்காருங்க தம்பி... சாவி கேட்டு வேணி வந்தா.."

கிருஷ்ணவேணி இடையில் புகுந்தாள், "சாவி கெடைச்சுதா?"

சரவணன் தயங்கியபடி பேசினான், "ஸாரிங்க... வீடு முழுசாத் தேடிட்டோம். சாவியை எங்க போட்டாங்கன்னு தெரியலை. அந்தக் கௌவிதான் எங்கயாச்சும் தொலைச்சிருக்குப் போலிருக்கு... அதான் ஒங்ககிட்ட சொல்லலாம்னு வந்தேன்."

"அய்யய்ய... சாவி இல்லிங்களா?'

"தேடிரலாங்க... ஒரு ரெண்டு நாள் பொறுத்துக்கங்க; எப்படியாச்சும் தெறந்து விட்டுரலாம்."

வீரையன் இடைமறித்தான், "எந்தச் சாவி பத்தி பேசறீங்க?"

"இதோ உள்ள ஒரு ரூமிருக்கே அந்த சாவிப்பா... எடுத்து ஒதுங்க வச்சது போக மிச்சம் நிறைய சாமான் அப்படியப்படியே கிடக்கு. அந்த ரூமைத் திறந்து குடுத்தாங்கன்னா உள்ள வச்சுக்கலாம்னு பாக்குறோம்."

"அந்த ரூமா?" யோசித்தான் வீரையன். "இந்த வீட்டை மராமத்து பண்ணவன் நானு... அந்த ரூமை நானே திறந்து பாக்கலை..."

சரவணன் ஆச்சர்யத்துடன் பார்த்தான். "நெசமாவாண்ணே!"

"ஆமடா... அந்த ரூமையும் வெள்ளை அடிச்சு க்ளீன் பண்ணிரலாம்னு உங்கப்பா கிட்ட சாவி கேட்டேன். மாட்டேன்னுட்டாரு."

**"இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு இப்படி அடிக்க வர்றீங்க?"**

"ஏன்?"

"அந்த ரூம்ல உங்க 'குல சாமி' இருக்காம். அதுல வேற குடும்பத்து ஆளுக நுழையக் கூடாதாம். வருசத்துக்கு ஒரு தடவை அந்த ரூமை நான் தனி ஆளாவே ரிப்பேர் பண்ணி, கழுவி, வெள்ளையடிச்சு வச்சிருவேன். இந்த வீட்ல அந்த ரூமுக்கு எந்த மராமத்து வேலையும் தேவையில்லைன்னுட்டாரு..."

சரவணன் தனக்குள் யோசித்தபடி "அப்படியா?" என்று தலையை ஆட்டினான். இது வரையிலும் இப்படி ஒரு 'குலசாமி' எனும் தகவலை அவனிடம் யாருமே வீட்டில் சொன்னது கிடையாது. வீட்டில் சும்மா கிடந்து கொண்டு, எங்கெங்கோ இருக்கிற எல்லாச் சாமிகளையும் கூப்பிட்டு தன்னுடைய உடல் உபாதைகள், மோட்சம், மறு பிறவி பற்றியெல்லாம் பேசி முறையிடுகிற பெருமாயிப்பாட்டி ஒருமுறை கூட இந்த 'குலசாமி' பற்றி சொல்லாதது உறுத்தலாக இருந்தது. சுத்துவட்டார சாமிகள் பற்றியெல்லாம் ஓயாது பேசுகிற கிழவி சொந்த சாமி பற்றி பேசாது இருப்பாளா? இருந்திருந்தால் நிச்சயம் பேசியிருப்பாள் அவள். பேசாதபட்சத்தில் இது பொய்யாகத்தானிருக்க வேண்டும். எதற்காக அப்பா ஒரு

பொய் சொல்ல வேண்டும்? தமது குடும்பமே அந்த ரூமைத் திறக்கக் கூடாது என்பதில் ஏன் மிகவும் கவனத்துடனிருக்கிறது? சரவணனின் மனசுக்குள் ஒருவித சங்கடம் பரவியது. கிருஷ்ணவேணியின் இருப்பையும் மீறி ஒரு சங்கடம் பரவுகிறது எனில் அது வீரியமானதுதான். சரவணன் எச்சில் விழுங்கிக் கொண்டான்.

லீலா சற்று ஏமாற்றத்துடன் தலையை ஆட்டினாள். "எங்கிட்ட இதைப்பத்தி ஒண்ணும் சொல்லலை...ம்ம்...சரி என்ன பண்றது. நாலஞ்சு சாக்கு வாங்கி எல்லாத்தியும் கட்டி மூலையில போட வேண்டியதுதான்" என்றாள்.

சரவணன் யோசனையுடன் எழுந்தான்... "உள்ள போயி அந்த ரூமைப் பாத்துட்டு வர்றேன்" என்று கிளம்பி உள் சென்றான்.

, வீட்டின் ஹால்... ஹால் தாண்டி ஒரு நடை சமையலறைக்குச் செல்கிறது. இடது புறம் ஒரு சிறிய கதவில்லாத அறை. அந்த அறைக்குள் நுழைந்தால் வலது புறம் சரவணனின் இடுப்பு உயரத்துக்கு, மிகச் சிறிய நிலைவாசல் படியும் கதவும் கொண்டு அந்த அறை இருந்தது. மிகப் பழைய வீடுகளில் தான் இந்த மாதிரி ரொம்பவும் சின்னதாக நிலைப்படியும் கதவும் வைத்துக் கட்டியிருப்பார்கள்.

சரவணன் அந்தக் கதவின் முன்பு மண்டியிட்டு அமர்ந்தான். அமர்ந்தவனின் நெற்றி உயரத்துக்குத்தான் மொத்தக் கதவே இருந்தது. அதிக பட்சமாக மூன்று மூன்றரையடி உயரமிருக்கும். சரவணனுக்குச் சுரங்கப் பாதை ஞாபகம் வந்தது. அந்தக் கதவை உற்றுப் பார்த்தான். ஒற்றைக் கதவு. ஆனால் மிகவும் தடிமனான கதவு. கதவின் குறுக்கே மூன்று மரத்துண்டுகள் நுண்ணிய வேலைப்பாடுகளுடன் குறுக்காகப் பொருத்தப்பட்டு இருந்தன. ஒவ்வொரு மரத்துண்டிலும் மூன்று கனமான பித்தளைக் குமிழ்கள். கதவைத் தட்டிப் பார்த்தான் சரவணன். மிக உறுதியான கதவு. ரொம்பநாள் முன்பு வார்னீஷ் அடித்திருந்திருக்க வேண்டும். அதற்கும் மேலே பிசுக்கேறியிருந்தது. சுரண்டினான். கறுப்புக் கறுப்பாக 'க்ரீஸ்' போல வந்தது. கதவின் நிஜமான நிறத்தை அனுமானிக்க முடியவில்லை.

அந்த அறை மட்டும் பராமரிக்கப்பட்டு வந்திருப்பதன் அடையாளமாக அந்தக் கதவின் உறுதியும், அந்தச் சுவரின் வெள்ளையும் தென்பட்டன. வீடு முழுவதும் வீரையன் அடித்திருந்த வெள்ளையிலிருந்து இந்தச் சுவர் மாறுபட்டிருந்தது. சாவி பொருத்துகிற இரும்புப் பகுதியைப் பார்த்தான் சரவணன். அது துருவேறாமல் ஆரோக்கியமாக இருந்தது. சாவித் துவாரத்தில் கண்ணை வைத்துப் பார்த்தான். உள்ளே ஒரே இருட்டு...

''சட்'டென்று ஒரு கை சரவணனின் தோளில் விழுந்தது. 'துணுக்'குற்றுத் திரும்பினான் சரவணன்.

அழகு சிரித்தான். மண்டிபோட்டு அமர்ந்திருந்த சரவணனின் முகத்துக்கு நேராக அவனது முகமிருந்தது.

"எப்ப வந்தீங்க?"

சரவணனும் சிரித்தான்., "நான் உள்ள வந்தப்ப உங்களைக் காணமே."

"வெளில போயிருந்தேன், இப்பதான் வந்தேன். என்ன பாக்குறிங்க இங்கே?"

சரவணன் தொண்டையைச் செருமினான். "ஒண்ணுமில்லை. இந்த ரூம் சாவி அம்மா கேட்டாங்க... சாவி கெடைக்கலை."

"அப்படியா?"

"இதுல எங்க குலதெய்வம் இருக்குன்னு அப்பா சொன்னாராம்... வீரையண்ணன் சொல்றாரு."

"அட... குல

"பின்ன... ஒரு நாளைக்கு ஆறு முதல் எட்டு டம்ளர் தண்ணீர் குடிக்கணும்னு சுலபமா சொல்லிடறீங்க..."

- ஆர். ரத்தினசாமி





"தலைவர் இப்படித்தான்... கோபம் வந்துட்டுன்னா உச்சாணிக் கொம்புல போய் உட்கார்ந்துடுவாரு!"

- அப்பு

தெய்வம் உள்ள இருக்கா... சாமியை உள்ள போட்டு பூட்டி வச்சிட்டு சாவியைத் தொலைச்சிட்டீங்களாக்கும்" என்று சிரித்தான் அழகு.

"இந்த ரூமை மட்டும் வீரையனை சுத்தப்படுத்த விடலையாம்" என்று வீரையன் சொன்ன விவரங்களைச் சரவணன் சொன்னான்.

அழகு ஆச்சர்யமாக..."ம் அப்படியா?" என்று அந்தக் கதவைத் தடவினான். அவனது புலன்கள் கூர்ந்ததைப் போன்றதொரு முகபாவம் முகத்தில் தோன்ற, கதவைத் திரும்பத் திரும்பத் தடவினான். சாவித் துவாரத்தில் கண்ணைப் பொருத்தினான். வெகு நேரம் பார்த்துக் கொண்டே இருந்தான்.

"இந்தக் கதவு கரெக்டா என் உயரம் இருக்கில்ல?"

"ஆமா அழகு."

சாவித்துவாரத்தில் தனது மூக்கைப் பொருத்தி மூச்சை இழுத்து வாசனை பார்த்தான் அழகு.

"இந்த ரூம்ல வெள்ளை அடிச்சு வேலை பாத்திருக்காங்க... நாள்பட்ட வாசனை வரலை..."

"இந்த ரூமுக்கு நிச்சயமா ஜன்னல் கெடையாது புழுங்கல் நெடி."

சரவணன் அவனைச் சற்று ஆச்சர்யமாகப் பார்த்தான்.

"உள்ளிருந்து சந்தன வாசனை வேற அடிக்குது."

"அப்படியா? சாமி கும்பிட்டிருப்பாங்கன்னு நெனைக்கிறேன்."

"இருக்கும்" என்றான் அழகு... அவனது கண்களில் சந்தேகம் மின்னியது. "உங்க குலசாமி பேரு என்ன?"

சரவணன் முழித்தான், "ஏதோ... சிலைக் காரியோ என்னவோ... சரியாத் தெரியலை."

"உங்கப்பாகிட்ட கேளுங்க... இந்த ரூம்ல என்ன இருக்குன்னு?"

சரவணன் 'சரி' என்று தலையாட்டினான்.

அந்தக் கதவையே மீண்டும் உற்றுப் பார்த்தான் அழகு. மனசுக்குள் சொல்லிக் கொண்டான், "இந்த ரூம்ல ஏதோ ஒரு பிரச்னை இருக்கு. நிச்சயமா இருக்கு."

தனக்குள்ளே ஏதோ முனகித் தலையாட்டும் அழகுவைப் பார்த்து யோசித்தபடியிருந்தான் சரவணன்.

(தொடரும்)

சிக்கல் - 65



# புலப்படாத அழகு!

ஸ்பெயின் நாட்டில் ஒரு பெரிய கலா ரசிகர் இருந்தார். நல்ல ஓவியங்கள் உலகின் எந்த மூலையில் இருந்தாலும் அங்கே போய் அவற்றின் முன், நேரம் போவது தெரியாமல் நின்று ரசிப்பது வழக்கம். ஒருமுறை ஏதோ ஒரு மலையின் மேல் உள்ள கலைக்கூடத்தில் மிக அபூர்வமான ஓவியங்கள் இருப்பதாக அவருக்குத் தகவல் வந்தது. மிகுந்த எதிர்பார்ப்போடு அந்த இடத்தை நோக்கிப் புறப்பட்டார். மிகவும் கஷ்டப்பட்டு மலைப் பாதையில் கழுதை மேல் பயணித்து அந்தக் கலைக் கூடத்தை அடைந்தார்.

ஆனால் அங்கிருந்த ஓவியங்களைப் பார்த்ததும் 'சே' என்று ஆகிவிட்டது. இந்த மிகச் சாதாரண ஓவியங்களைக் காணவா இவ்வளவு கஷ்டப்பட்டோம்? என்று மனம் நொந்து போனார் அந்த ரசிகர். அப்போது ஒரு வயதான வழிகாட்டி அவர் முகபாவத்தை வைத்து அவர் எண்ணங்களை அறிந்து கொண்டான்.

"என்ன ஏமாற்றமாக இருக்கிறதா?"

"ஆமாம். இந்த மாதிரி சாதாரண ஓவியங்களுக்காக நான் நான்கடி கூட நடக்க மாட்டேன். இவற்றிற்காக பல மைல்கள் மலைப்பாதையில் சிரமப்பட்டு வந்ததற்காக வெட்கம் அடைகிறேன்."

"சரி இப்போது பாருங்கள்" என்றபடி அந்த வழிகாட்டி ஓவியங்களுக்கு முன்னால் பக்கவாட்டில் இருந்த குறிப்பிட்ட சில ஜன்னல் கதவுகளைத் திறந்துவிட்டான். அவ்வளவுதான். அந்த கலைக்கூடமே புத்தொளியில் குளித்தது போல் தோன்றியது. மிகச் சாதாரணமாகத் தென்பட்ட அந்த ஓவியங்களின் மேல் சூரிய ஒளிக் கிரணங்கள் பட்டு அவற்றின் வண்ணங்களை ஆழப்படுத்தின. ஓவியங்களில் இருந்த வண்ண - வேறுபாடுகள் பளிச் என்று தென்பட்டபோது சற்று முன் கிறுக்கல்களாகத் தென்பட்ட அந்த ஓவியங்கள் இப்போது அமர காவியங்களாகத் தெரிந்தன.

இதுவரை அவர் கண்களுக்குப் புலப்படாதிருந்த அழகு இப்போது தெரிந்தவுடன் அவர் சிலிர்த்துப் போய்ச் சிலையாக நின்றார். கண்களில் நீர் மல்க காலம் போவது தெரியாமல் அந்த ஓவியங்களை ரசித்துக்கொண்டிருந்தார் அந்த கலா ரசிகர்.



வாழ்வில் மகிழ்ச்சி கிடைக்க நம் வாழ்வின் அன்றாட நிகழ்ச்சிகளை முற்றிலும் மாற்ற வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் மாற்றப்பட வேண்டியது நிகழ்ச்சிகள் இல்லை. அவற்றை பார்க்கும் நம் பார்வைதான்!

வரலொட்டி ரெங்கசாமி

இன்னும் அம்பது வருஷத்துல ஒரு பெரிய ஆன்மிகப் புரட்சி நடந்து முடிஞ்சுடும்... இங்க இல்லே... அமெரிக்காவிலே!

'சும்மா கதை கட்டாதே சுமி!'ன்னு நீங்க என்னைத் திட்டினா அக்னி சர்மா முதலான அத்தனை ஜோதிட திலகங்களும் வரிஞ்சு கட்டிக்கிட்டுச் சண்டைக்கு வருவாங்க! ஏனென்றால் அமெரிக்கா பற்றிய இந்த அதிரடி ஜோதிடத்தைச் சொன்னவர் உலகப் புகழ் ஜோதிடரான உல்லால் சக்ரபாணி! (உல்லாக்கட்டி சக்ரபாணி இல்லைங்க; நிஜம்மாவே உல்லால் சக்ரபாணி)

அமெரிக்காவோட ஜாதகத்தை அலசினதும் இப்போதைய ஐ.டி. புரட்சி, 2008 வரையிலும் தொடரும்னும் அதுக்குப் பிறகு ஏழு வருஷத்துக்கு ஜெனடிக் இஞ்சினியரிங், பயோ டெக்னாலஜி துறைகள் கொடி கட்டிப் பறந்து மனித ஆயுளை அதிகமாக்கும்னும் பிரெடிக்ட் பண்ணியிருக்கார். 2015ல அமெரிக்காவுக்கு ராகு தசை ஆரம்பிக்குதாம். அதனாலே ஆரோக்கியம் அதிகமாகுமாம்.

அப்புறம் 2033லேருந்து பதினாறு வருஷத்துக்கு அங்க ஆன்மிகப் புரட்சி நடக்குமாம். அமைதியை நோக்கி உலகமே திரும்பறதுக்கு அமெரிக்கா வழி காட்டுமாம்.

இப்போ தயானந்தாவும் இன்னும் பலரும் அமெரிக்கால போய் ஆசிரமம் ஆரம்பிக்கற மாதிரி, இந்த செஞ்சுரியோட செகன்ட் ஹாஃப்ல ஆன்டுருவானந்தாவும் மாதாஜி மார்கரெட்டும் இங்கே வந்து ஆசிரமம் நடத்தி யோகா, கீதா கிளாஸஸ் எடுப்பாங்களோ!

- இந்த நியூஸ் 'ஹிந்துயிஸம் டுடே'ன்ற அமெரிக்க பத்திரிகைல வந்தது..!

அமெரிக்காவுக்கு எப்படி ஜாதகம் கணிச்சாங்கன்னு என்னைக் கேக்காதீங்க!

# ஏற்படுது ஆன்மிகப் புரட்சி!

சுமியோட ஜாதகத்தை ஸ்டடி பண்ணி வைச்சிருக்கற மன்ற உறுப்பினர் ஹரி என் பெயருக்கு அர்த்தம் கண்டு பிடிச்சு எழுதிருக்கார்.

'சுமி' என்றால் சுத்தம். 'சௌசம்' என்பது சுமியிலிருந்து வந்தது. வெளியிலே சுத்தமாக, தூய்மையாக, ஆசாரமாக இருந்தால் அதுவே உள்தூய்மைக்கு உபகாரம் செய்யும். நீராடுவது; மற்ற பல ஆசாரங்கள் சௌசத்தின் கீழ் வரும்..!

- இது ஆசார்ய சுவாமிகள் கொடுத்த விளக்கமாம்.

'சுத்தம்!'னு நீங்க பல்லை நரநரக்கறது இங்கே ஈக்காடு தாங்கல் வரைக்கும் கேக்கறதால இதோட சுத்தமா நிறுத்திக்கறேன்.

நித்யஸ்ரீ மகாதேவனுக்கு 'இசைப் பேரொளி' பட்டம் கொடுக்கப் போகறதா பேப்பர்ல படிச்சுருப்பீங்க. ஒலியைக் கொஞ்சம் குறைச்சுக்கிட்டு, ஒளியைக் கூட்டிப் பாடினாங்க கிருஷ்ணகான சபாவிலே... ஹிந்தோளத்துல பல்லவி பிரமிக்கும்படி இருந்தது. நித்யஸ்ரீ மியூசிக்ல



எக்கச்சக்கமா சரக்கு... நூறு, உஸ்மான் சாலை நல்லி கடை மாதிரி! 'சர் சர்னு' கெட்டி ஜரிகை புடைவைங்களை சேல்ஸ்மென் எடுத்து ஒண்ணு மாத்தி ஒண்ணு உதறி விரிப்பாங்களே... அப்படியொரு கிளாமரஸ் டிஸ்ப்ளே இருக்கு அவங்க மியூசிக்ல.

லாஸ்ட் இயர், நித்யஸ்ரீ ஒரு நல்ல காரியம் பண்ணினாங்க. கோவைல இருக்கற



## சுமி சூப்பர் மார்க்கெட்

வஸந்தா மெமோரியல் டிரஸ்டுக்காக ஒரு பெனிஃபிட் பர்பார்மன்ஸ் கொடுத்தாங்க. அந்த கச்சேரியோட ஒலிப்பதிவு வசந்த நினைவுன்ற காஸெட்டா வெளிவந்திருக்கு. இந்த காஸெட் விற்பனை பணமும் டிரஸ்டுக்குத்தான். கான்ஸர் நோயாளிகளுக்குச் சிகிச்சையும் பாதுகாப்பும் தரதுக்காக ஏற்படுத்தின அறக்கட்டளை வஸந்தா மெமோரியல் டிரஸ்ட். கான்ஸரைப் பத்தி விழிப்புணர்வு ஏற்படுத்துறது, ஏழைகளுக்கு இலவச பரிசோதனை, சிகிச்சைன்னு நல்ல நோக்கங்களோட செயல்படுது. *(காஸெட் விலை 100 ரூபாய், ஜி4, அனுக்ரஹா அப்பார்ட்மெண்ட்ஸ், பீளமேடு, கோவை - 4)*







இன்னொரு இன்ட்ரஸ்டிங் காசெட் 'அதோ பார் தம்பி!' - வரப்போற வி.சேகர் பட டைட்டில் இல்லை. குட்டீஸுக்கான ஸாங்ஸ் (எல்லாமே தமிழ்) காஸெட் இது. பிலஹரி, கமாஸ், ஆனந்த பைரவின்னு கிளாஸிகலான மெட்டுகள்ல பெரியவங்க டியூன் பண்ணி, சின்னவங்க பாடியிருக்கறது.

இதே மாதிரி இன்னொரு முயற்சி 'ஆனந்தகானம்' - இதுவும் மழலைப் பட்டாளத்துக்கு - பட் கொஞ்சம் லைட் ஸ்டைல்ல அமைஞ்சிருக்கு...

ஓ.கே. கொஞ்சம் அடல்ட்ஸ் ஒன்லி பேசுவோமா..? பயந்துடாதீங்க! நான் ஏதாவது எல்லை மீறினாலும் கல்கி எடிடர் கட் பண்ணிடுவாங்க. திஸ் இஸ் ஒன்லி அபவுட் மாரேஜ்!

ரீசன்டா என் ஃப்ரெண்ட் ஒருத்தர் கல்யாணத் தரகு வெப் ஸைட்ல வேலைக்குச் சேர்ந்திருக்கார். அவர் தர்ற தகவல்படி பார்த்தா இந்தியன் மிடில் கிளாஸ் ஃபாமிலீஸ்ல இனிமே முப்பதாயிரத்துக்குக் குறைஞ்ச சம்பளம் வாங்கறவனுக்குக் கல்யாணம் ஆகறதே சந்தேகம்!

வர்ற கர்ல்ஸ் எல்லாமே ப்ரொஃபஷனலி குவாலிஃபைட்- எஃப்.ஸி.ஸி. மாப்பிள்ளைதான் வேணும்ங்கறாங்களாம்.

எஃப்.ஸி.ஸின்னா கம்யூனிட்டி அடையாளம் இல்லை. F ஃபார் Flat, C ஃபார் Car, C ஃபார் Cell phone.

'சம்பந்தப்பட்ட மணப்பெண்களே வந்து விளம்பரம் குடுத்துட்டுப் போறாங்க. என்ன வேணும்ன்றதுல ரொம்ப தெளிவா இருக்காங்க. ரொம்ப கறாராவும் இருக்காங்கன்றார்.

இந்தியாவுல காதல் கல்யாணத்துக்கு வரவேற்பும் ஆதரவும் இன்னமும் ஒரு பர்சன்டைக்கூட தாண்டலைன்னு சொல்றார். ஆச்சர்யமில்லை. ஃஎப்.சி.சி. இருக்கான்னு கேட்டுக்கிட்டா ஒரு பையனைக் காதலிக்க முடியும்? இல்லை, எம்.என்.சில வேலை செய்றியான்னு கேட்டுக்கிட்டு ஒரு பொண்ணை லவ் பண்ண முடியுமா...!

காதல் பெண்கள் கடைக்கண் பணியில் காற்றில் ஏறி விண்ணைச் சாடின காலமெல்லாம் போச்சு. காசிருந்தால் மட்டுமே நேசம்!

— சுமி

# கடைசி சிக்ஸர்

ம.வே.சிவகுமார்

ஒற்றையடிப்பாதை நடுவே போகிற பரந்த மைதானம். நூறடிக்கு ஒன்றாய் அலுமினியப் பெயிண்ட் அடித்த ராட்சத மின் கம்பங்கள். தாழ்ந்த கம்பிகளில் அயலூர் செல்லும் அனல் மின்சாரம். கீழே பையன்கள் கிரிக்கெட் ஆடிக் கொண்டிருக்கிறார்கள். காற்று உல்லாசமாய் அடிக்கிறது. கட்டைப் பந்து பேட்டில் வேகமாய் மோதுகிற சப்தம். மாலை வெய்யிலில் பந்து வானில்பறந்து ஒரு புள்ளியாய்த் தெரிகிறது. அகோபிலம் வெங்கடேசன் ஆத்திரமாய் ஓடி வருகிறான். மூச்சைப் பிடித்து அனைவரும் உயரே பார்க்கிறார்கள். பரிசுக்காக காத்திருக்கிற ஏழைத் தமிழ்ப் புலவன் போல வெங்கடேசன் கைகளை ஏந்தி நிற்க, பந்து ஊடாக விழுகிறது. இரண்டு ரன்கள்.

பாலுவுக்கு இன்று அதிர்ஷ்டமான நாள் என்றுதான் சொல்ல வேண்டும். வழக்கமாய் முதல் பந்தில் அவுட் ஆகிறவன். இன்று இது வரை இருபத்தியேழு ரன்கள். நாட் அவுட். மகிழ்ச்சியில் அடுத்த பந்து பவுண்டரிக்குப் போகிறது.

"பாலு, உங்க மாமா வந்திருக்காரு."

பேட்டை சுமந்தபடி சைக்கிள்கள் நின்று கொண்டிருந்த பனை மரத்தடிக்கு வந்தான். லோகு மாமா.

"என்ன மாமா?"

"ஆடினது போதும். வீட்டுக்கு வா."

வார்த்தைகள் இல்லாமல் பாலுவின் பேட் கைமாறுகிறது. மாமா வண்டியை ஸ்டார்ட் செய்கிறார். பாலு பின்னால் ஏறிக் கொள்கிறான். மொபட் புழுதி கிளப்பி ஒற்றையடிப் பாதையில் மேடு ஏறிப் போகிறது.

"மாமா!"

"ம்."

"ஒன்னு கேக்கட்டுமா?"

"என்ன?"

"நான் கிரிக்கெட் பந்துலே விளையாடினேன்னு அப்பா கிட்டே சொல்லிடாதீங்கோ. கவர் பால் மேட்சுதான்னு புளுகியிருக்கேன்."

மாமா வண்டி ஓட்டிக் கொண்டே பாலுவைத் திரும்பிப் பார்க்கிறார்.

"சரி. சொல்லலே."

மொபட் வேகமாய்ப் போகிறது. பின் சீட்டில் பாலு தீவிர யோசனையில் இருக்கிறான். என்ன ஒரு அபாரமான ஆட்டம்? லோகு மாமா நடுவில் கூப்பிடாமல் இருந்திருந்தால் ஒரு வேளை இன்று அவன் லட்சியக் கனவான நூறு ரன்களை அடித்திருப்பான்.

மணிமேகலை தெருவைத் தாண்டி பாலுவின் வீடு இருக்கிற வள்ளுவர் தெருவில் வண்டி திரும்புகிறது. பாதி விளையாட்டில் அப்பா எதற்காகக் கூப்பிட்டிருப்பார்? மொபட்டில் மாமாவின் பின்னாலிருந்து பாலு எட்டிப்பார்க்கிறான். வீட்டின் முன்னால் கும்பலாய் யார் யாரோ நிற்கிறார்கள். மெல்லிய வேட்டிகளில் வைதீகர்கள் நடமாட்டம். எதிரே பைக்கில் இரண்டு பேர் மாலையுடன் இறங்குகிறார்கள். ஐயோ மாமா. யாருக்கு என்ன? எதுவும் புரியாமல் பாலு வண்டியிலிருந்து இறங்குகிறான். தென்னை மரத்தில் வெட்டிய பச்சை ஓலை பெரும் சப்தத்துடன் சரிகிறது.

பாலு நுழைந்ததுமே பெண்கள் ஓவென்று கூச்சலிட்டு அழுகிறார்கள். மாமா பாலுவைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொள்கிறார். சுற்றிலும் அத்தனை பேர் நின்றிருக்க நடுக் கூடத்தில் அப்பா அபத்தமாய் மார்பில் கை வைத்துப் படுத்திருக்கிறார். மூக்கில் பஞ்சு



தெரிகிறது. தலைமாட்டில் பூஜை விளக்கு ஆடுகிறது.

''மாமா, அப்பாவுக்கு என்ன மாமா?''

''ஒன்னும் இல்லேடா, ஒன்னும் இல்லே.''

''நிஜத்தைச் சொல்லுங்கோ மாமா. அப்பாவுக்கு என்ன ஆச்சு?''

''பாலு. வாடா என் கண்ணே. அம்மா கிட்டே போய் நில்லு. உன்னாட்டமே பறி குடுத்துட்டு நூலாட்டம் கிடக்கா பாரு.''

''ஐயோ!''

யாரோ பாலுவைத் தரதரவென்று அம்மா முன் நிறுத்துகிறார்கள்.

''நீயாவது சமத்தாயிரு. உங்கப்பா சொல்ல சொல்ல கேக்கலே. சிகரெட்டா ஊதி ஊதி தள்ளினான். வைகாசி வந்தா முப்பத்தி எட்டு வயசு ஆச்சு. ஃபர்ஸ்ட் அட்டாக்கிலேயே போய்ச் சேர்ந்தாச்சு.''

''அம்மா. அப்பா இல்லையாம்மா?''

அழுது பலவீனப்பட்ட அம்மாவின் வாயில் சப்தமே வரவில்லை. நடந்ததை

## போட்டிக் கதை - 2

யாரோ சப்தமாய்ச் சொல்கிறார்கள். அப்பா வெளியே எங்கேயோ புறப்பட்டிருக்கிறார். ஸ்கூட்டர் ஸ்டார்ட் ஆகவில்லை. அம்மா கர்சீப் கொடுத்துவிட்டுப் பக்கத்திலேயே நின்றிருந்தாள். அப்பா வழக்கம் போல் குறும்பாய் அம்மாவின் பெயரைச் சொல்லி உதைத்திருக்கிறார். வண்டி ஸ்டார்ட் ஆக வில்லை. அப்புறம் பாலுவின் பெயர். மீண்டும் அம்மா. அப்புறம் பாலு. அம்மா, பாலு... அம்மா. பாலு.. சிரித்துக் கொண்டே உதைத்துக் கொண்டிருந்தவர் அப்படியே மட்டை மாதிரி கீழே விழுந்துவிட்டார்.

மூக்கில் மட்டும் ஒரு ரத்தக் கோடு. அவ்வளவுதான். வேறு காயங்கள் கிடையாது.

"வெறும் காசு செலவோட போச்சா? உடம்புக்காகாதுன்னு எல்லோரும் லட்சம் தடவை அடிச்சுண்டோம். சொல்லச் சொல்ல கேக்கலே. கடைசிலே அந்த சிகரெட்டுச் சனியன்தான் மூர்த்திக்கு யமனா வந்துடுத்து."

வித்யா அத்தை மீண்டும் தன் சிகரெட் புலம்பலைத் தொடர்கிறாள். பாலுவுக்கு அவள் வார்த்தைகள் ஒவ்வொன்றும் நாராசமாய் ஒலிக்கிறது.

அப்பா எத்தனை நல்லவர்? தன் குறுகிய வாழ்நாளில் எவ்வளவு சாதித்திருக்கிறார்? செய்தி கேட்டு எத்தனை பேர் போட்டது போட்டபடி வந்திருக்கிறார்கள்? அவர் நண்பர்களின் முகத்தில் எவ்வளவு சோகம்? வந்திருந்த தொழிலாளர்கள் அவரைப் பாராட்டிப் பேசுகிறார்கள். வெரி காம் மேன். அவர் வர்றதும் தெரியாது. போறதும் தெரியாது. அப்படி ஒரு நல்ல ஆத்மா. காலனி செகரட்டரி சொல்லியதுமே அனைவரும் தலையசைத்து அங்கீகரிக்கிறார்கள். இந்த வீடு அவர் கட்டியது. அவர் இருந்தவரை அம்மா கண் கலங்கியதில்லை. கம்பெனியின் நிர்வாகமே அவரை நம்பித்தான் இருந்தது. அப்படிப்பட்டவர்கள் ஓரிரு பாக்கெட் சிகரெட் பிடிப்பதுதான் அத்தைக்கு பெரியதாகத் தெரிகிறது.

மயானத்திலிருந்து திரும்பும்போது வீடு அலம்பியிருக்கிறது.

"அப்பாவைக் கரையேத்திட்டியாடா என் கண்ணே."

வித்யா அத்தை பாலுவின் மோவாயை நோக்கி கையை நீட்டுகிறாள். அவள் கையில் பட்டுவிடாமல் பாலு தலையைப் பின்னால் இழுத்துக் கொள்கிறான். எதிர் வீட்டு வாட்ச்மேன் எண்பது வயதில் பீடி வலித்து ஒட்டிய கன்னத்தில் ஆரோக்யமாய் இருக்கிறான். அப்பாவை யாரும் திட்டக் கூடாது. சிறிய வயதில் அவனைத் தூக்கி அப்பா கொஞ்சும்போதே சிகரெட் வாசனை அறிமுகமாகிவிட்டது. இன்னமும் சரியாய்ச் சொன்னால் சிகரெட் வாசனை வந்தாலே அப்பா ஞாபகம் வரும்.

அப்பா ஒரு போதும் வீட்டிற்குள் சிகரெட் பிடிக்க மாட்டார். தோட்டத்தில் கொய்யா மரத்தின் பக்கத்தில் நின்று கொள்வார். புகையை உள்ளிழுத்து ஆகாயத்தை வெறித்து அப்பா நிற்கிறபோது தான் அவருடைய சிந்தனைகளின் தீவிரம் புரியும். அவ்வமயம் தோட்டத்திலிருந்து மெல்லிய சாக்லேட் வாசனை வீடு பூராவும் பரவும். இரவு தூங்கும் முன் கொய்யா மரத்தடியில் கடைசியாய் ஒரு முறை நெருப்பு கங்கு பிரகாசித்து அப்பாவின் முகம் தெரியும். இனிமேல் அந்த முகத்தைப் பார்க்க முடியாதேயென்ற வேதனையில் பாலு ஓவென்று அழுகிறான். லாகு மாமா தண்ணீர் குடுத்து அவனை மடியில் போட்டுக் கொள்கிறார். தூக்கம் கலைந்ததில் முனகி அவரவர்களும் தொடர்ந்து தூங்கிப் போகிறார்கள்.

"பாரு. சாகறப்போ போட்டுண்ட சட்டை பாக்கெட்லே நாலு சிகரெட் இருக்கு; இதுதானா ஃபில்டர் வில்ஸ்?ம். நேக்குத் தெரியாது. நான் இப்பத்தான் பாக்கறேன். பாவம். ஆசையா வாங்கியிருப்பான். பகவான் அரிசிலே பேர் எழுதற மாதிரி சிகரெட் மேலேயும் அதை யார் பிடிக்கணும்னு எழுதியிருப்பான் போலருக்கு. டேய் லோகு. இதை யாராவது சிகரெட் பிடிக்கிறவான் கிட்டே குடுத்துடு."

"அத்தை."

வித்யா அத்தை நிமிர்ந்து பார்க்கிறாள்.

"என்னடா?"

"அதைக் குடு."

"இது எதுக்குடா உனக்கு?"

"குடேன்."

வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு பாலு அப்பாவின் புகைப்படம் முன் நிற்கிறான். அப்பாவின் வாட்ச், மணி பர்ஸ், மூக்குக் கண்ணாடி, ஸ்கூட்டர் சாவி பக்கத்தில் சிகரெட் பாக்கெட்டை வைக்கிறான்.

---

**"உங்க மனைவி முழு சுதந்திரம் குடுத்திருக்காங்களாமே... நிஜமாவா?"**

**"ஆமா... சமைக்கிறது, துவைக்கிறதுன்னு வீட்டு வேலை எதுலயுமே அவ துளிகூட தலையிடறதே இல்லை... எல்லாத்துக்கும் நான்தான் பொறுப்பு!"**

***- எஸ். வைஷ்ணவி***



"அதை ஏண்டா கன்றாவி அங்கே வைக்கிறே?"

அத்தை சிகரெட் பாக்கெட்டை மடக்கி ஜன்னல் வழியாக வீசப் போகிறாள்.

"அத்தை சனியனே. அதை எங்கிட்டே குடு."

கோபமாய்க் கத்திவிட்டு பிடுங்கும்போது மேலும் கசங்கிய பாக்கெட்டைப்பார்த்து பாலு ஓவென்று அழுகிறான். அப்பா செத்த துக்கத்தில் எல்லாமே அடித்துக் கொண்டு போகிறது. வைதீகர்கள் வருகிறார்கள். தலைமை வைதீகர் நரைத்த தாடியில் தேஜஸ் கூடியவராய் கம்பீரமாய் இருக்கிறார். கண்மூடி தலை சாய்த்து கனத்த குரலில் அவர் சொல்கிற மந்திரங்களை அர்த்தம் புரியாமல் பாலு அக்கறையாய்ச் சொல்லுகிறான்.

"பேஷ். இந்த சிரத்தை தான் முக்கியம் குழந்தை. உங்கப்பாவோட ஆத்மா இந்த பதிமூணு நாளைக்கு இந்த வீட்டைத்தான் சுத்திண்டிருக்கும். உங்களையெல்லாம் பார்த்துப் பார்த்து அழும். எல்லாமே அவாவா கர்மாவைப் பொறுத்துத்தான். ஆனா உன் சிரத்தை அவாளுக்கு ஒரு கவசமா, ஒரு ஆறுதலாயிருக்கும். எப்படி ஒரு கும்பல் பசுமாடு நிக்கறச்சே கன்னுக்குட்டி கரெக்டா தன் தாயாரைக் கண்டு பிடிக்கிறதோ அதே மாதிரி நீ சிரத்தையா பண்ற கர்மாவோட பலன் உங்கப்பாகிட்டே கண்டிப்பா போய்ச் சேரும். தானே, தர்மம் பண்றது பெரிசில்லே. சிரத்தைதான் வேணும்."

அப்பா. சாஸ்திரிகள் சொல்வது போல் நீங்கள் இங்குதான் இருக்கிறீர்களா? ஆமாம் என்றால் அதை நான் எப்படித் தெரிந்து கொள்வது? வைதீகர்கள் அப்பாவின் பெயர் சொல்லி கல் ஊன்றியிருக்கிறார்கள். அதன் மேலே அரை கீற்றில் ஒரு சிறிய பந்தல். அதில் அப்பாவின் கழுத்தில் கடைசியாய் போட்டிருந்த பாட்டியின் ருத்திராட்ச மாலை. அப்பா. நீங்கள் இங்கிருப்பது உண்மையானால் எனக்குச் சூசகமாய்ச் சொல்ல வேண்டும். பந்தலில் ருத்திராட்சம் தானாய் அசைய வேண்டும். அது தான் அடையாளம். நான் பார்த்துக் கொண்டே இருப்பேன். பாலு ஆவலாய்ப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

உண்மையிலே இருக்கிறாரோ. காற்று தான் வீசியதோ. பந்தலில் ருத்திராட்சம் தானாகவே அசைகிறது.

கல்கி 60

# கல்கி-

# B. M. SILK SAREES

BMSS

இணைந்து வழங்கும்

## பட்டுப் புடைவை பரிசுப் போட்டி – 7

## எழுதாத வரி எது?

*தென்றல் வந்து தீண்டினால்*
*சேலை தீண்டும் ஞாபகம்*

*சின்ன இடை பேசினால்*
*சொன்ன வார்த்தை ஞாபகம்*

*வசந்தம் என்றாலே உன்*
*வருகை ஞாபகமே*

இந்தக் கவிதை வரிகளில் கவிஞர் வைரமுத்து எழுதாத வரி ஒன்று இருக்கிறது அது எது என்பதைக் கண்டுபிடித்து சரியான விடை எழுதும் ஒரு நபருக்கு குலுக்கல் முறையில் ரூ.**2500/-** மதிப்புள்ள பட்டுப் புடைவை பரிசு. கூப்பன்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி **23.9.01** உறையின் மேல் 'பட்டுப்புடைவை பரிசுப் போட்டி - 7' என்று குறிப்பிடவும். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**பட்டுப் புடைவை பரிசுப் போட்டி – 7**

வைரமுத்து எழுதாத வரி : ......................

..............................................................

..............................................................

என் பெயர் : ..............................................

முகவரி : ..................................................

..............................................................

..............................................................

..............................................................

அப்பா. நீங்கள் இங்குதான் இருக்கிறீர்களா?

ருத்திராட்சம் அசைகிறது. அப்பா உங்களிடம் ஒரு கேள்வி நான் கேட்க வேண்டும். உண்மையிலேயே சிகரெட் பிடித்ததால்தான் நீங்கள் செத்துப் போனீர்களா?

ருத்திராட்சம் அசையாமல் அப்படியே இருக்கிறது.

மரணத்துக்கு ஒரு காரணம் வேண்டும். அப்பாவுக்கு யமன் ஸ்கூட்டர் கிக் ஸ்டார்ட்டரில் காத்திருந்தான். ஒருவேளை யாருக்கும் தெரியாமல் அவருக்கு ஏதேனும் இருதய பலவீனம் இருந்திருக்கும். பாலுவைச் சுற்றிய உலகத்தில் எத்தனையோ வயோதிகர்கள் சிகரெட் புகைத்துத் தள்ளி ஆரோக்கியமாய்த்தான் இருக்கிறார்கள். சந்தேகத்தின் பலனை அப்பாவுக்குத் தரலாம். ஆனால் சந்தேகம் சந்தேகம்தான். பாலு ஒரு போதும் சிகரெட் பிடிக்க மாட்டான். யாராவது அவனருகே ஒன்றைப் பற்ற வைக்கும் போதெல்லாம் அப்பாவின் ஞாபகம் அவனுக்கு வரும்.



கட்அவுட் இல்லைய்யா... தலைவர்தான். அரசைக் கண்டிச்சு வித்தியாசமா போராட்டம் பண்றாராம்.
- அப்பு

ஊன்றிய கற்களைக் காட்டி வைதிகர் விளக்கம் சொல்கிறார்.

"இது ஸ்ரீ விஷ்ணு பிரதமை. இது பிரும்மா பிரதமை. இது ருத்திரனது. அது எமனுக்கானது. நடுவுலே உங்கப்பா. நியாயமா தங்கத்துலியும், வெள்ளிலேயும், தாமிரத்திலேயும், இரும்புலேயும் பண்ணணும். இப்பவும் சில பேர் பண்றா. எல்லாமே அவாவா வசதியைப் பொறுத்தது. கும்பத்துலே நவரத்தினம்னா அதிகபட்சம் ஒம்பது ஒரு ரூபா. சிரத்தையா சிரார்த்தம் செஞ்சு பிண்டம் வைக்கணும். அதுதான் முக்கியம். உசிர் போன உடனே ஆத்மாவுக்குச் சரீரம் இருக்காது. முதல் நாள் போடற பிண்டத்துலே தலை உண்டாகும். இரண்டாம் நாள் கழுத்து. மூணாம் நாள் மார்புன்னு பத்து நாள்லே கொஞ்சம் கொஞ்சமா ஜீவனுக்குப் பிண்டத்தாலான சரீரம் உண்டாகும். நீ சின்னப் பையன். இதுக்கு மேலே சொன்னா பயப்படுவே. ஆனா கர்மா பண்றவனுக்கு இதெல்லாம் சொல்லணும்னு சாஸ்திரம். எல்லாமே மனசு, பண வசதி ரெண்டையும் பொறுத்தது. தானம்னா நிஜம் பசுமாடு வாங்கித் தர்ரேன். எல்லாரும் அப்படி செய்ய மாட்டா. அடையாளமா மாட்டுக் கழுத்துலே கெடக்கிற கயிறை கைமாத்திப்பா. அதுக்கு ஒரு தட்சணை. முடிஞ்சுது விஷயம்."

எதிரேயிருக்கிற சோற்று உருண்டைகளைப் பாலு வெறித்துப் பார்க்கிறான். மேலே எள் தூவி மூன்று தலைமுறைகள் தர்ப்பையால் இணைந்திருக்கிறது. துண்டு ஒன்றில் சாஸ்திரிகள் பிண்டங்களை அடுக்கச் செய்கிறார். லோகு மாமா நண்பரின் காரில் சித்திர குளம் வந்தாகிவிட்டது.

"அப்படியே திரும்பிப் பார்க்காமே பின் பக்கமா போட்டுடு."

வைதீகர் ஆதரவாய் கனிந்த குரலில் சொல்கிறார். பாலு பிண்டத்தைப் போட்டு விட்டு அவசரமாய் எங்கோ ஓடுகிறான்.

"டேய். எங்கே போறே?"

மூச்சிரைக்க பாலு பெட்டிக்கடைக்கு ஓடுகிறான்.

"நாடார். ஒரு ஃபில்டர் வில்ஸ் குடுங்க."

பாலு கையில் இருந்த ஃபில்டர்வில்ஸ் சிகரெட்டை சித்திரகுளத்தில் திரும்பிப் பார்க்காமல் போடுகிறான்.

"என்னடா பண்றே?"

"அப்பாவுக்குச் சாப்பிட்ட உடனே சிகரெட் பிடிக்கணும்."

"அசடு. அதுக்காக சிகரெட்டைப் போடுவியா? இல்லே நீ போட்டாப்லே அதுதான் போயிடுமா?"

"சாஸ்திரிகளே. நீங்க சொன்னதுதான் நெஜம். சிரத்தையும், நம்பிக்கையும் தான் முக்கியம். உங்க பிண்டம் போகும்னா இதுவும் நிச்சயம் போகும்."

# நோ அப்பில்!

'பொன்னியின் செல்வன்' கல்கியில் முதன்முதலாக வந்த நேரம். அப்போது எனக்குத் திருமணமாகவில்லை. தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தேன். அந்த நாவலின் ஒவ்வொரு கேரக்டரும் என்னை ஈர்த்த விஷயங்கள். சில வருடங்கள் கழித்து திருமணமானதும் குழந்தை பிறந்தவுடன் பொ.செ. கேரக்டர்களில் ஒரு பெயரைச் சூட்ட வேண்டுமென்ற ஆசையை என் கணவரிடம் சொன்னேன். அவரும் ஒத்துக் கொண்டார். ஆண் குழந்தை பிறந்தது. சேந்தன் அமுதன் என்று பெயர் வைத்தோம்" என்கிறார் சூளைமேடைச் சேர்ந்த இந்திரா. முப்பத்தாறு வயதான சேந்தன் அமுதன் தனியார் நிறுவனமொன்றில் வேலை பார்த்து வருகிறார்.



• பூங்குழலி



• மனைவி குழந்தையுடன் சேந்தன் அமுதன்

**மூன்று கதாபாத்திரங்கள்!**

"எங்களுக்குத் திருமணமானதும் ஆண் குழந்தை பிறந்தால் 'வந்தியத்தேவன்' என்றும், பெண் குழந்தை பிறந்தால் 'பூங்குழலி' என்றும் பெயர் சூட்டுவதென தீர்மானித்தோம். முதலில் பெண் குழந்தை பிறந்தது. எங்கள் பாட்டியின் பெயர் செண்பகத்தையும் சேர்த்து செண்பக பூங்குழலி என்று பெயர் வைத்தோம்.

என் கணவரின் சகோதரியின் மகனுக்கு 'அருள்மொழிவர்மன்' என்று பெயரிட்டோம். கணவரின் தம்பி மகனுக்கு 'வந்தியத்தேவன்' என்று பெயரிட்டுள்ளோம். ஆக, எங்கள் குடும்பத்தில் கல்கியின் மூன்று கதாபாத்திரங்கள் வாழ்கின்றது" என்கிறார் கோவையைச் சேர்ந்த இரா. கற்பகம்.



• தாரிணி

**உ.பி.யில் தாரிணி!**

"என் மகன் பத்மநாபனுக்கு கடந்தாண்டு மத்திய பிரதேசத்தில் பெண் குழந்தை பிறந்ததும் குடும்பத்தினர் பெயர் சூட்டுவதில் போட்டி போட்டனர். எனக்கு 'அலை ஓசை' நாவலின் தாரிணி கண் முன்னே தோன்றினாள். அந்தக் கேரக்டர் எப்போதும் என் மனத்தில் நிற்கும் ஒன்று. இதை என் மகனிடம் சொன்னேன். நோ அப்பில். குடும்பத்தாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இப்போது தாரிணிக்கு ஒன்றரை வயதாகிறது" என்கிறார் சைதாப்பேட்டையைச் சேர்ந்த வித்வான் எஸ். கிருஷ்ணசாமி.

வாழும் கல்கி கதாபாத்திரங்கள்!

• திலீப் சப்ரியா



# ஆடேஜாவால் இந்த களேபரம்!

**போ**கிற போக்கிலும் சிலரால் நல்லது செய்து விட்டுப் போக முடியும்; 'லால்பாக் கா ராஜா' என்ற பதினெட்டு அடி கணபதியை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் சௌபாத்திக்கு, விஸர்ஜனுக்குச் செல்லும் வழியில் பைகுல்லாவில் ஒரு மஸ்ஜித் இருக்கிறது. இதன் வாயிலுக்கு ஊர்வலம் வந்ததும், ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு பிரசாதம் விநியோகித்து, அமர்க்களமாகக் கொண்டாடுவார்கள். தப்பித் தவறி 'நமாஸ்' நேரமாக இருந்துவிட்டால், தொழுகை முடியும் வரை ஊர்வலம் வெயிட்டிங்! இருபத்திஆறு வருடங்களாக, இதே ரூட்டில், இதே முறையில் தான் ஊர்வலம் செல்கிறதாம்.

மும்பையில் பல்லாயிரக் கணக்கில் கணபதிகளிருக்க, இவருக்கு மட்டும் 'ராஜா' பட்டம் ஏன் என்று இப்போதல்லவா புரிகிறது?



• ராஜா

**ரா**ஜாக்கள் எவ்வளவு தான் நல்லவர்களாக இருந்தாலும், கூஜாக்கள் அடிக்கும் கூத்தைத் தடுக்க முடியவில்லை என்றால் என்ன பயன்? சிங்கானியா ஹாஸ்பிடலில் கொலுவீற்றிருந்த பிள்ளையாரைப் பாருங்கள். அவரை மட்டும் விட்டுவிட்டு, சுற்றிலும் ஒரே களேபரக் காடாய் சிவசேனைக்காரர்கள் ஆஸ்பத்திரியைத் துவம்ஸித்து வைத்திருக்கிறார்கள். நிறுவனர் விஜய்பத் சிங்கானியா (ரேமண்ட் க்ரூப்பின் தலைவர்) அழுதே விட்டார். உலக 'ஏர்ரேஸ்' வெற்றியாளரான இவர், இரண்டாம் உலகப் போரில் கலந்து கொண்ட ஒரு DC-3, "டகோடா" விமானத்தை, 1970ல் தில்லியிலிருந்து வாங்கி வந்து, இந்த ஆஸ்பத்திரியில் ஒரு காட்சிப் பொருளாக நிறுத்தி வைத்திருந்தார். ஆனந்த் திகேவின் மரணத்துக்குப்பின் நடந்த வெறியாட்டத்தில், இந்த விமானத்தையும் எரியூட்டி, ஒரு பகுதியை நாசமாக்கிவிட்டனர்.

"என் குழந்தை இது" என்று வாஞ்சையுடன் அதனைத் தழுவிக் கொள்ளும் சிங்கானியா, நடந்த அராஜகத்துக்குப் பால் தாக்கரே மன்னிப்பு கேட்டாக வேண்டும் என்றிருக்கிறார் தைரியமாக!

சிவசேனையால் இதைத் தாங்க முடியுமா? உடனே ஆனந்த் திகே மறைவுக்கு டாக்டர்களின் கவனமின்மைதான் காரணம் என்று ஆஸ்பத்திரி மேல் கேஸ் போடப் போவதாக அறிவித்து விட்டார்கள்!

**சி**ல அறிவிப்புகள் இப்படித் தான்... கேட்டாலே கொதிக்க வைக்கும்; அமீஷா பட்டேலிடம் "உங்களுக்குத் திருமணம என்று அறிவிப்பு வந்ததே" என்று கேட்டுப் பாருங்களேன். "ஆமாம்... சன்னி(டியோல்)யுடன் நிச்சயதார்த்தம் நடந்திருக்கிறது; ஹ்ர்த்திக்குடன் சுற்றிக் கொண்டிருக்கிறேன்; அஃப்தாபைக் கல்

யாணம் செய்து கொள்ளப் போகிறேன்... போதுமா?'' என்று சிறி விழுவார். கோவிந்தாவிடம், ''நீங்கள் ஷியாம் பெனகல் படத்தில், லாலுபிரசாத் யாதவாக நடிக்கப் போகிறீர்களாமே?'' என்று சொல்லிப் பாருங்களேன். 'சிச்சி' என்று கடுப்படிப்பார் (சிசி-கோவிந்தாவின் செல்லப் பெயர்.)

சீச்சி என்று சாதாரணமாக நாம் முகம் சுளிக்கும் விஷயம் தான். ஆனால் 'வாவ்' என்று வாய் பிளக்க வைத்துவிட்டாரே திலீப் சப்ரியா? இவரது சி.டி.-கெமிகல் டாய்லட்டைத்தான் சொல்கிறோம். ஒரு நூறு கார்களில் இதை வடிவமைத்துப் பொருத்தியுள்ளார். பால்தாக்கரே, அபிஷேக் பச்சன், ஜுஹி சாவ்லா... அந்தப் பேறு பெற்ற நூறில் சிலர். இந்த டாய்லட்டில், ஒவ்வொரு முறை ஃப்ளஷ் செய்யும் போதும், ஒரு வித கெமிகல் வெளியாகி, 'சிச்சி' விஷயத்தைக் காய்ந்த மணல் போல் ஆக்கி விடுமாம். இருபத்தி ஏழு முறை ஃப்ளஷ் செய்த பிறகு, ஒரு குப்பைக் கூடையில் இந்த மண்ணை வாரிக் கொட்டிவிடலாம். எண்பதாயிரம் ரூபாயிலிருந்து இரண்டு லட்சத்துக்குள் செலவாகுமாம். தவிர, வண்டிக்குள்ளேயே கான்ஃப்பரன்ஸ் ரூம், 'பார்', 'ஃபாக்ஸ்', டீ.வி... எல்லா வசதிகளையும் பொருத்தித் தருகிறார்.

எட்டு வருடங்களாக 'கார் டிசைனிங்' பண்ணிக் கொண்டிருக்கும் இவருக்குத் தினமும் குறைந்தது நாநூறு 'ஃபேன் மெயில்கள்' வருமாம். பிஇஎஸ்டி பஸ்களில் சி.டி.-பொருத்துவதைப் பற்றிக் கூட யோசித்துக் கொண்டிருக்கிறார். அம்மா காதில் விழுந்தால், நம் போக்குவரத்துக் கழகங்களில் புதிய வசதிகளை அறிமுகப்படுத்தலாமே?

* அமீஷா



* திலீப் சப்ரியா



சில அறிமுகங்கள் 'ஓஹோ' என்று பேசப்படும், சில, ''ஓநோ...'' என்ற அலறலை எழுப்பும். ஏக்தா கபூரின் ''க்யூன்கி... ஸாஸ்...'' ஸீரியலில் (கேளுங்க மாமியாரே...) புது அறிமுகமான ரக்ஷா சாச்சி, தன் செல்ல நாய்க்குட்டிக்கு 'ஜாலங்சிங் ஜடேஜா' என்று பெயரிடப் போய், சௌராஷ்ட்ரா பகுதியே அல்லோலகல்லோலப்படுகிறது. ஜடேஜா பெரிய ராஜ்புத் வீரராம். அவரை தெய்வமாகவே ராஜ்புதானியர் வழிபடுவார்களாம். ராஜ்கோட், சுரேந்த்திர நகர், பாவ்நகர், போர்பந்தர், கட்ச் போன்ற பகுதிகளில் ஆயிரக்கணக்கானவர்கள் கலெக்டராபீசுக்குப் படை எடுத்து, ''உடனடியாக தயாரிப்பாளர் மன்னிப்புக் கேட்காவிட்டால் ஸ்டார் டீ.வியே இங்கு வர முடியாமல் செய்து விடுவோம்'' என கூக்குரலிட்டு, கேபிள்காரர்களின் கடைகள், ஸ்டார் விநியோகஸ்தர்கள் கடைகள் எல்லாவற்றையும் அடித்து உடைத்து நாசமாக்கிவிட்டார்கள். 'ஸ்டார் டீ.வியும் ஏக்தா கபூரும் விழுந்தடித்துக் கொண்டு, மும்பையிலிருந்து மன்னிப்புக் கோரி (ஃபோன் மூலம்தான்), மன்னிப்பு ஸ்லைடும் ஸீரியலில் போடத் தயாராகி விட்டார்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# 29

பூர்விகம், நவீனம் இரண்டும் உலகில் இருந்து கொண்டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் நாள் சென்றால், பூர்விகம் போய் நவீனமே இருக்கும் போலிருக்கிறது. காரணம் என்ன...?

பூர்வே பவாய- அவன் பூர்விகனாகவும் இருக்கிறான்- வைகுண்டத்திலே இருக்கும் படியான எம்பெருமானாக இருக்கிறான்.

அவனே என்ன பண்ணிவிட்டான்... 'இங்கேயே உட்கார்ந்திருந்தால் நம்மை யார் வந்து பார்ப்பார்கள், நாம் பிரசாரம் ஆக வேண்டாமா? நமது பிரசாரம் நாலு பேருக்குத் தெரிய வேண்டாமா...? இங்கேயே உட்கார்ந்திருந்தால் நாலு பேருக்கு எப்படித் தெரியும்? இங்கேயே உட்கார்ந்திருப்பது பிரயோஜனமில்லை. இதை விட்டுக் கீழே இறங்கலாம்...' என்று ஒரு படி இறங்கி விட்டான்.

அவ்வளவு ஏற்றமுடைய எம்பெருமான் எல்லாவற்றையும் குறைத்துக் கொண்டு விட்டான். குறைத்துக் கொண்டு, பூவுலகத்திலே எல்லோரும் பார்க்கும்படியாக அவதாரம் பண்ணுகிறான்.

பிறப்பற்றவன் அவன் – பல படியாகவும் பிறக்கிறான். 'பிறப்பில் பல்பிறவி பெருமானை' என்கிறார் நம்மாழ்வார்.

இயற்கையில் பிறப்பில்லாதவன் எதற்காக வந்து பிறக்க வேண்டும். நம்மையெல்லாம் கரையேற்றுவதற்காகத்தான்!

பாகவதர்களெல்லாம் அப்படிப் பிரார்த்திக்கிறார்கள். மகான்கள் வேண்டிக் கொள்கிறார்கள்-நீ வரவேண்டும். பூலோகத்திலே வந்து பிறக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறார்கள்!

வித்யாரண்யர் எழுதுகிறார்:

'நந்ருசிம்ஹ, ராமகிருஷ்ண விவகாரங்களினாலே அத்யந்தம் நூதனமான வேஷத்தைப் போட்டுக் கொண்டு வந்து விடுகிறான்' என்று. நரசிம்ஹ அவதாரத்திலேயும் நவீனமான வேஷம்தான்!

விஷ்ணுவைப் பற்றி பூமியிலே கதை கேட்டவர்களும் சரி, தேவலோகத்திலே இருக்கிறவர்களும் சரி, எப்போது பார்த்தாலும் சக்கரத்தைக் கையிலே எடுத்துக் கொண்டு வருவாரே, அவர்தானே..?' என்று கேட்கிறார்கள். சக்கரத்தை அடையாளமிட்டு அவனைச் சொல்கிறார்கள்.

லௌகிகத்திலே நாம் சொல்கிறோம் அல்லவா... 'கையிலே எப்போதும் பை வைத்துக் கொண்டிருப்பாரே, அவர்தானே! குடையோடு வருவாரே, அவர்தானே! வெயில் காலமாயிருந்தாலும் மழைக்காலமாயிருந்தாலும் குடை வைத்திருப்பாரே அவர்தானே?' என்றெல்லாம் கேட்கிறோமல்லவா! அந்த மாதிரி, பகவானைப் பார்த்து, 'கையிலே சக்கரம் கொண்டு வருவாரே அந்த சக்கிரிதானே?' என்று பேச்சு வழக்கு வந்துவிட்டது.

பகவான் பார்த்தார்... சக்கரத்தைக் கையில் கொண்டு வருவதனாலேதானே இவ்வளவு பேச்சு! சக்கரத்தை இனிமேல் எடுத்துக் கொண்டு போகக் கூடாது என்று தீர்மானம் பண்ணிவிட்டார்!

# குறையொன்றுமில்லை

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

திருக்கண்ணபுரம் சுவாமியினிடத்திலே பகவத் கீதை கேட்டவர்கள் எல்லோருக்கும் தெரியும். காலட்சேபத்தின்போது ஒரு கட்டத்திலே கதை ஒன்று சொல்லுவார்...

இரண்டு பேர் மார்க்கெட்டுக்குப் போவார்கள். அதிலே ஒருத்தர் நித்யம் புடலங்காயே வாங்குவார் என்று கையை நீளமாக வைத்துக் கொண்டு காண்பித்துச் சொல்லுவார்.

ஒரு நாள் இந்தக் கதையைச் சொல்கிறபோது சபையிலிருந்த எல்லோரும் அதைக் கேட்டுக் கேட்டுப் பழக்கப் பட்டவர்கள்... அவ

ரைப் போலவே கையைத் தூக்கி அபினய மாகப் புடலங்காயைக் காண்பித்தார்கள்!

ஆனால் அன்றைய தினம் இவர் கதை யிலே புடலங்காயைப் பாகற்காயாக மாற்றி விட்டார்! புடலங்காயை அபினயம் பிடித்த வர்கள் எதிர்பார்த்தார்களா!

அதே மாதிரிதான் பகவானும் 'சக்கிரி தானே!' என்ற சொல்லைக்கேட்டுச் சக்கரத் தையே மாற்றிவிட்டான்.

கைகளைவிட்டு உதறினாலும் போக முடியாத நகங்களை மாற்றிப் பொருத்திக் கொண்டுவிட்டான் ஆயுதமாக! கட்டை விரலில் இருக்கிற நகம் இருக்கிறது பாருங் கள்... அதுதான் சக்ராயுதம்! அந்த நகத்தையே ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள் எல்லோரும்.

புதுமையிலே அப்படியொரு வியா மோகம் பகவானுக்கு!

பகவானுக்கே புதுமையிலே வியாமோகம் இருக்கிறபோது நமக்கு இருக்காதா...?

நவீயதே என்கிறது வேதம்!

பிராசீனமான பரமாத்மா!

நவீனமான பரமாத்மா!

நவீனன் யார் என்றால், நரசிம்ஹன்-ராம-கிருஷ்ண அவதாரங்கள்.

மங்களத்தையே என்றென்றும் கொடுக்கக் கூடியவையான மாங்கல்ய தேவதைகள்.

மாங்கல்ய ஸ்தவம் என்று அழகான ஒரு ஸ்தவம் விஷ்ணு தர்மத்திலே. ஸ்த்ரீகளெல் லாம் நித்யம் சொல்ல வேண்டும் அந்த ஸ்தோத்திரத்தை. புருஷர்களும் சொல்ல வேண்டும். ஸ்த்ரீகள் மட்டும் அல்ல... புருஷர்களும் சொல்ல வேண்டும். மங் களத்தை விருத்தி பண்ணக்கூடிய ஸ்தோத்தி ரம் அது. ஸ்த்ரீ புருஷ பேதமின்றிச் சொல் லக் கூடியது.

விடாமல் நித்யம் சொல்லக் கூடியவர்கள் பலனை அனுபவிப்பார்கள். அனுபவிப்பவர் களுக்குத்தான் தெரியும், புரியும் அந்தப் பலன் என்னவென்பது. ஆதலால், அதைச் சொல்லாமலேயே என்ன கிடைக்கும் என்று கேட்கக் கூடாது.

மங்களத்தைக் கொடுக்கும்படியான மஹாலக்ஷ்மியுடன் கூட, என்றென்றும் பூமன்னு மாது பொருந்திய மார்பனாக அவன் இருக்கிறான். எத்தனை இடத்தில் பார்த்தாலும் லக்ஷ்மியோடுதான் சமன்வி யோகம் அவனுக்கு!

உபநிஷத் சொல்கிறது, 'ச்ரத்தா என்று பெயர் மஹாலக்ஷ்மிக்கு. தெய்வத்தன் மையை பகவான் அடைவது எப்போது என்றால், லக்ஷ்மியோடு சேர்ந்து இருக்கிற

## அருள்வாக்கு

இந்தக் காலத்தில் டின்னர், ஃபீஸ்ட் என்று நடத்துகிறார்கள். வெள்ளைக்கார நாகரிகப்படி நடத்தினால் அதில் இன்னொ ருத்தனின் ஸௌக்யத்துக்காகச் சாப்பிடுவ தாகச் சொல்லிக் கொண்டு டோஸ்ட் ப்ரபோஸ் (toast propose) பண்ணுகிறார்கள். சாப்பிடுவது இவர்கள்; அதன் பலன் இன் னொருவனுக்கு என்கிறார்கள்! ஒருத்தன் சாப்பிட்டால் அது அவனுக்குத்தானே புஷ்டி தரும்? இன்னொருத்தனைப் பார்த்து, 'உன் புஷ்டிக்காக நான் சாப்பிடுகிறேன்' என்று இவன் டோஸ்ட் சொன்னால், எப்படி அது

போதுதான் அடைகிறான்.

லக்ஷ்மியை அவன் விட்டுவிடுவானா னால் அவனுக்கு தேவத்வம் சித்திக்காது. தேவத்வம் வருவதே லக்ஷ்மியினால்தான். அதனால்தான் ஆசார்யர்களெல்லாம் உபன் யாஸத்தை ஆரம்பிக்கும்போதே 'ஸ்ரீயஃப் பதியாய்' என்று சொல்லி ஆரம்பிக் கிறார்கள்.

ஸ்ரீ சூக்தத்தைப் பார்த்தோமானால், 'ஹிரண்ய வர்ணாம் ஹரிணீம்' என்று ஆரம் பித்து, ஜாதவேதா! என்று பகவானைத் தான் அழைக்கிறது.

'ஜாதவேதனே! பிரபு நாராயணா! ரமணீயத்வம் பொருந்தியவன், சர்வ பாபமும் ஹரிக்கக் கூடியவன், அப்படிப் பட்டவளான உன் பட்டமஹிஷியை, என்னை விட்டு விலகாமல் இருக்கும் படியாக நீ அனுக்கிரஹம் பண்ணுவாயாக!' என்று நாராயணனிடத்திலேதான் பிரார்த் தனை.

திருவேங்கட யாத்திரை போகிறவர்களும் அப்படித்தான். முதலில் எங்கே போக வேண்டும்...? திருச்சானூருக்குத்தான் போக வேண்டும். தாயாரைப் பார்த்து சேவிக்க வேண்டும். ஆனால் தாயாரின் எதிரிலே தாயார் ஸ்தோத்திரத்தைச் சொல்லக் கூடாது. திருவேங்கடமுடையானுடைய ஸ்தோத்திரத்தைச் சொல்லவேண்டும். அவள் அதைக் கேட்டு ஆனந்தித்து, 'அடடா! நம் பிரபுவினுடைய பெருமையை இவ்வளவு அழகாகச் சொல்கிறார்களே..' என்று உடனே அவனைக் கூப்பிட்டுச் சொல்லிவிடுவாள். அவள் திருமுகக் குறிப்பைக் கொண்டுதான் பகவானே வேலை செய்கிறான். அவள் புருவத்தைக் கொஞ்சம் நெரித்தால்கூட திரும்பியே பார்க்க மாட்டான் அவன்.

அங்கே, அவன் சன்னிதிக்குப் போனால்,

அந்த இன்னொரு ஆசாமிக்குப் போய்ச் சேரும்? இந்த மாதிரி கேட்பது தப்பு. இதெல்லாம் ஒருவகையான நல்ல மனோபாவம். மனஸார இப்படி நினைத்து நல்லதைப் பண்ணினாலே, எண்ணத்தின் சக்தியால் (thought-power-ஆல்) மற்றவனுக்கு அது க்ஷேமம் தரும் என்றுதான் இப்படிப் பண்ணுகிறார்கள்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



இவள் பெருமையைச் சொல்ல வேண்டும்.

இங்கேயிருக்கும் பெருமையை அங்கே சொல்லி, அங்கேயிருக்கும் பெருமையை இங்கே சொல்லவேண்டும். இதை யார் செய்து உயர்ந்தார்கள் என்று கேட்டால், ஆஞ்சனேயனுக்கு அந்த ஏற்றம் ஏற்பட்டிருக்கிறது.

பகவான் ஸ்ரீ ராமன் அவனை அப்படியே சேர்த்து அணைத்துக் கொண்டு, ஆனந்த பாஷ்பத்தினாலே மஞ்சனம் ஆட்டினான்! அவ்வளவு பெருமை ஆஞ்சனேயனுக்கு எங்கேயிருந்து கிடைத்தது...? இங்கேயிருப்பதை அங்கே சொன்னான்; அங்கேயிருப்பதை இங்கே சொன்னான்!

ஆகையினாலே லக்ஷ்மியும் எம்பெருமான் நாராயணனும் எப்போதும் சேர்ந்தே சொல்லப்படக் கூடியவர்கள்.

அவதார காலத்திலேகூட லக்ஷ்மியை விடவில்லை அந்த பகவான். எத்தனை அவதாரங்கள் எடுத்தாலும் அவள் கூட வருகிறாள்.

பிரும்மசாரியாய், வாமனனாய் மூன்றடி மண்வேண்டி ஸேவிக்கிறான். பலிச்சக்ரவர்த்தியினிடத்திலே பார்த்தால் வக்ஷஸ்தலத்திலே அவள் உட்கார்ந்திருக்கிறாள்!

பார்த்தான் பகவான்... இந்தக் காட்சியை யாராவது பார்த்தால் சிரிக்க மாட்டார்களா? பிரும்மசாரியின் வக்ஷஸ்தலத்திலே அவள் ஆடிக் கொண்டிருப்பதைக் கண்டு ஏளனமாகிவிடாதா!

இவள் கடாக்ஷம் அந்த பலி சக்ரவர்த்தியின் மீது விழுந்ததானால் என்ன கதியாவது? அப்புறம் அவனிடத்தில் உள்ளதையெல்லாம் எவ்வாறு வாங்க முடியும்...? அப்புறம் இப்படி வேஷம்போட்டுக் கொண்டு வந்ததற்குப் பிரயோஜனம் என்ன இருக்கும்?...

பார்த்தான் பரமாத்மா. பிரும்மசாரிகள் உடலைச் சுற்றிப் போர்த்திக் கொள்ள வேண்டிய கிருஷ்ணாஜினத்தை (புள்ளி மான்தோல்) உடம்பைச் சுற்றிப் போர்த்திக் கொண்டு விட்டான். அந்த மான் தோலால் அவளை நன்றாக மறைத்துக் கொண்டு விட்டான்!

ஆக, பிரும்மசாரி நிலையிலேயும் அவன் அவளை விடவில்லை. அதைத்தான் வேதம் சொல்கிறது– லக்ஷ்மியுடன் எப்போதும் இருப்பவன் என்று.

ஸ்ரீமத் நாராயணாய நம: ஸ்ரீமதே!

அப்படியென்றால், தினையளவும் திருமகளைப் பிரியாதவன் என்று பொருள். தினை என்பது எவ்வளவு சூக்ஷ்மமானது? அந்த அளவுக்கும் கூட லக்ஷ்மியை விட்டுப் பிரியாதவன் அவன்– 'ஸ்ரீமத்' சப்தத்துக்கு இதுவே அர்த்தம்.

அவதார காலத்தில் எப்படி இருக்கிறானோ அப்படியேதான் அர்ச்சா ரூபத்திலும் அவன் இருக்கிறான்.

பஞ்சலோகங்களால் ஒரு விக்ரஹத்தை நாம் உண்டாக்குகிறோம்.

அந்த விக்ரஹத்திலே எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகிறான் என்கிறது உபநிஷத்.

உலோகங்களையெல்லாம் நன்றாகக் காய்ச்சி, ரூபங்களை முதலில் தயார்ப் பண்ணிக் கொண்டு அந்த வடிவிலே, அச்சிலே வார்த்து எடுக்கிறோம். நரசிம்ஹனோ திருவேங்கடமுடையானோ, வேறு ரூபமோ உண்டாகிறது. அப்படிப்பட்ட ரூபத்திலும் எம்பெருமான் காட்சி அளிக்கிறான். நித்ய வாஸம் பண்ணுகிறான்– ஆகம சாஸ்திரப்படி பிரதிஷ்டை பண்ணினால்.

வேறு சில இடங்களில் பகவான் சுயம்புவாக இருக்கிறான். மட்டபல்லி க்ஷேத்திரத்தில், யாரும் பிரார்த்திக்காமல் தானே வந்தான். அதனால் சுயம்பு என்று பெயர் அவனுக்கு. அதிலிருந்தே அந்த க்ஷேத்திரத்தினுடைய பிரபாவம் நமக்குத் தெரிகிறது பாருங்கள்... மட்டபல்லியை பகவான் வரிக்கிறான். அந்த கிருஷ்ணா நதி தீரம்– அந்த மூலை... அதற்கு அப்பால் எங்கேயும் போக முடியாது. பெரிய பள்ளத்தாக்கு, மலை, ஒரே காடு... அப்படிப்பட்ட இடத்தைத் தேர்ந்தெடுத்து அவன் க்ஷேத்ரமாக்கியிருக்கிறான்!

(வளரும்)

# 'தினக் தின்' நாகி

மியூசிக் அகாடமியில் ஒரு 'தினக் தின்' ஃப்யூஷன் இசை நிகழ்ச்சி. தவில், வயலின், டிரம்ஸ் என்று கலந்து கட்டின ஜுகல்பந்தி, வந்திருந்த மொத்த ரசிகர்களையும் கட்டிப் போட்டது. அன்றைய நிகழ்ச்சியின் ஹீரோ 'நாகி' என்று சினிமா வட்டாரத்தில் அழைக்கப்படும் நாகராஜ். இன்று தமிழ்த் திரையுலகில், முன்னணி டிரம்ஸ் கலைஞர் மற்றும் ரிதமிஸ்ட்.



சங்கீதராஜன், இளையராஜா, சிற்பி, ரமணி பரத்வாஜ், டி. ராஜேந்தர், தேவா, அனுமாலிக் என்று அனைத்து இசையமைப்பாளர்களிடமும் பணியாற்றி விட்டு கடந்த நான்கு வருடங்களாக எஸ்.ஏ. ராஜ்குமாரிடம் இருக்கிறார்.

நாகியின் அப்பா, நாராயணன் தபலா ஆர்டிஸ்ட். கே.வி. மகாதேவனிடம் நாற்பத்தைந்து வருடங்கள் இருந்தவர். ஆகவே, இசை ரத்தத்திலேயே இருக்கிறது. நாகி, தபலா வாசிக்கக் கற்றுக் கொண்டபோது வயது ஆறு. ஒன்பது வயதில் மேடை ஏறிவிட்டாராம். வீரமணி ராஜுவின் பக்தி நிகழ்ச்சிகளில் தான் அதிகமாய் தபலா வாசித்திருக்கிறார்.

"டிரம்ஸ் வாசிப்பதில் எப்படி ஆர்வம் ஏற்பட்டது நாகி?"

"டிரம்ஸ் சிவமணியின் அப்பா ஆனந்தனும், என் அப்பாவும் கே.வி. மகாதேவனிடம் ஒன்றாகப் பணி புரிந்தவர்கள். சிவமணியின் அப்பா டிரம்ஸ் வாசிப்பார். அவரிடமிருந்து சிவமணி, சின்ன வயதிலிருந்தே டிரம்ஸ் கற்றுக் கொண்டார். அதைப் பார்த்து விட்டுத்தான் எனக்கும் டிரம்ஸ் வாசிக்கும் ஆர்வம் ஏற்பட்டது. ஆனந்தன், சிவமணி இருவருமே எனக்கு குரு" என்கிறார் நாகி.



நாகியின் மனைவி வித்யாவும் ஒரு பாடகிதான். ஹிந்துஸ்தானி, கர்நாடிக், பஜன், கஜல் தெரிந்தவர்.

நாகியின் மகள் தனஸ்ரீக்கு அம்மாவைப் போல நல்ல குரல்வளம். மூணரை வயது மகன் சித்தார்த்துக்கு நல்ல கைவளம். நாகி, பிரத்யேகமாய் உருவாக்கிக் கொடுத்துள்ள மினி சைஸ் டிரம்ஸில் தான் கிளப்புகிறான்.

சமீபத்தில் நடந்து முடிந்த 'தினக் தின்' நிகழ்ச்சியின் போது, ஒரு பத்து நிமிட சோலோ வாசித்து பலத்த கைத்தட்டல் பெற்று அசத்திவிட்டானாம் சித்தார்த் எல்.கே.ஜி.

— கௌதம்ராம்

**"ஜெயலலிதா ஆட்சி பற்றி நூறு நாட்களுக்கு அப்புறம்தான் என் கருத்தைச் சொல்வேன்" என்றார் ப. சிதம்பரம். அதற்காக தயார்படுத்திக் கொள்ளும் நிலையில் எதிர்பாராத விதமாக மூப்பனார் மரணமடைய, த.மா.கா. எதிர்காலம் கேள்விக்குறியாகி இருக்கிறது. தமிழக அரசியலில், சிதம்பரம் காய்களை நகர்த்த வேண்டிய கட்டம் வந்து விட்டது. இந்த நிலையில் த.மா.கா. ஜனநாயகப் பேரவை ஒரு அரசியல் கட்சியாக மாறுகிறது. சிதம்பரத்தைச் சந்தித்தோம்.**



# ஜெ. ஆட்சியி

*இப்போது சொல்லுங்கள்... ஜெயலலிதா ஆட்சியைப் பற்றிய உங்கள் விமர்சனம்?*

ஜெயலலிதாவால் நல்லாட்சி தர முடியாது என்று அன்று சொன்னது இன்று நிருபணம் ஆகிவிட்டது. ஆட்சிப் பொறுப்பேற்று இத்தனை நாட்களாகியும், மக்கள் குறைகளைக் கேட்காமல் இருக்கும் ஒரே முதல்வர் ஜெயலலிதாவாகத்தான் இருக்க முடியும். ஆனால் அவருக்கு அதற்கெல்லாம் நேரமில்லை. ஜெயலலிதா முதல்வராக வந்து விட்டால், அவருடைய வழக்குகள், சொந்த விவகாரங்களைக் கவனிக்கவே அவருக்கு நேரம் சரியாக இருக்கும் என்று சொன்னேன். அது சரியாகப் போய் விட்டது. எதிர்க்கட்சிப் பிரமுகர்களைக் கைது செய்ய சட்டம் வளைக்கப்படுகிறது. அச்சுறுத்தி கைது செய்யப்படுகிறார்கள். காவல் துறை ஏவல் துறையாகிவிட்டது. இங்கே யாருக்கும் பாதுகாப்பு இல்லை. சட்டசபை உறுப்பினர்கள் தாக்கப்படுகிறார்கள். பத்திரிகையாளர்கள், தொலைக்காட்சி நிருபர்கள், அவர்களின் காமிராக்கள், தாக்கப்படுகின்றன. போதை மருந்து வைத்திருந்ததாகச் சொல்லப்பட்டு, அச்சுறுத்தல் மூலம் சிலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். இந்தியாவில் வேறெங்கும் இது போன்ற அப்பட்டமான துஷ்பிரயோகம் நடந்திருக்காது.

இந்த காலகட்டத்தில் தமிழகத்தின் தொழில் வளர்ச்சிக்கு என்று ஏதாவது உருப்படியான திட்டத்தை ஜெயலலிதா அறிவித்திருக்கிறாரா என்றால் அதுவும் இல்லை. கூடுதல் மின் உற்பத்திக்கு ஏதேனும் திட்டங்கள் உண்டா? சென்னையில் தண்ணீர்ப் பிரச்னை தீர்க்க சாத்தியப்படக் கூடிய நிரந்தர திட்டம் உண்டா! ஆயிரக்கணக்கான இளைஞர்களுக்கு ஏதேனும் வேலை வாய்ப்புத் திட்டம் தான் அறிவிக்கப்பட்டிருக்கிறதா? தமிழக அரசின் வரவு 20000 கோடி– செலவு 24000 கோடி என்கிறார்கள். ஆனால் பட்ஜெட்டில் நம்பிக்கை தரக் கூடிய திட்டம் ஒன்றும் அறிவிக்கப்படவில்லை. 'இந்த திட்டத்தை நான் அறிவித்திருக்கிறேன்' என்று ஜெயலலிதா சொல்ல முடியுமா? தமிழக அரசின் சமீபத்திய பட்ஜெட் மறக்க வேண்டிய பட்ஜெட். எந்த பட்ஜெட்டுக்கும் ஒரு மையக் கருத்து உண்டு. நான் நிதியமைச்சராக இருந்தபோது போட்ட ஒரு பட்ஜெட்டில் மையக் கருத்து வளர்ச்சி விகிதத்தை உயர்த்த வேண்டும் என்பது. தி.மு.க. ஆட்சியில் கடைசி இரண்டு ஆண்டுகள் போடப்பட்ட பட்ஜெட்டின் மையக்கருத்து கட்டமைப்பு வேலைகள். அதாவது கிராமச் சாலைகள், பள்ளிக் கட்டிடங்கள், பெண்களுக்குக் கழிப்பறை போன்றவை உருவாக்கப் பட்டன. ஜெயலலிதா பட்ஜெட்டின் மையக் கருத்து தான் என்ன? அது ஒரு திக்குத் தெரியாத பயணம். தமிழகத்தின் வளர்ச்சிப் பாதையில் பல மாதங்கள் வீணாகப் போய் விட்டன. ஐந்து வருடமும் வீணாகி விடப் போகிறதே என்பது தான் என் இப்போதையக் கவலை.

**மூப்பனார் இல்லாத நிலையில் த.மா.காவின் எதிர்காலம் எப்படியிருக்க**

**வேண்டும் என்று கருதுகிறீர்கள்?**

அதன் அணுகுமுறைகளை வைத்தே எதிர்காலம் அமையும். 1996ல் ஊழலை எதிர்த்து பிறந்த இயக்கம் த.மா.கா. அன்று ஆட்சி மாற்றத்துக்குக் காரணமாக இருந்தது. 2001ல் தடுமாற்றம். கொள்கைகளை விட்டதன் காரணமாக சரிவு ஏற்பட்டது. ஆனால் அது ஆதரித்த கட்சி ஆட்சிக்கு வந்துவிட்டது. எந்த நிலைப்பாடுகளை ஏற்றுக் கொண்டதோ, எதை மேற்கொண்டதோ, அந்த அடிப்படைக் கொள்கைகளிலிருந்து த.மா.கா. விலகக் கூடாது என்பது தான் என் கருத்து.

**த.மா.காவை கைப் பற்றும் முயற்சி உண்டா?**

கைப்பற்றுவது, கால் பற்றுவது போன்றவை என் அணுகுமுறை அல்ல.

**த.மா.கா,. உங்கள் ஜனநாயகப் பேரவை ஆகியவற்றில் காங்கிரஸ் தாக்கம் அதிகம்! எனவே நீங்கள் அனைவரும் காங்கிரஸில் இணையும் பட்சத்தில் தமிழகத்தில் காங்கிரஸ் பலமாகி, மாற்று அணி அமைக்க வாய்ப்பு ஏற்படுமே!**

காங்கிரஸின் பாதிப்பு த.மா.கா.வில் அதிகம். எங்கள் பேரவையில் அப்படி இல்லை. ஜனநாயகப் பேரவையில் 80 சதவீதம் பேர் அரசியலுக்கே புதியவர்கள். இணைவது பற்றியெல்லாம் கருத்துச் சொல்ல முடியாது. உள்ளாட்சித் தேர்தல்கள் தமிழகத்தில் வர இருக்கின்ற நிலையில் பேரவையின் எதிர்காலம் பற்றி அதில் முடிவெடுக்கப்படும். பேரவை அரசியல் கட்சியாக மாறி தேர்தலில் போட்டியிடுவது பற்றி பொதுக்குழுவில் முடிவெடுப்போம்.

**மூப்பனார் இல்லாத நிலையில், த.மா.கா காங்கிரஸில் இணைந்து விடுவதுதான் சரியாக இருக்குமா?**

இரண்டு கட்சிகளும், அ.தி.மு.கவுடன் சேர்ந்து கூட்டணி அமைத்துச் செயல்படுவது தொடர்கிற வரை, இரண்டுக்கும் வேறுபாடு இருப்பதாக நான் கருதவில்லை. இந்த வகையில், இரண்டு கட்சிகளும், தனித்தனியாக இருப்பதாக கருதமுடியாது.

**தமிழகத்தில் திராவிட இயக்கங்களுக்கு மாற்றாக மூன்றாவது அணி அமையும் வாய்ப்பிருக்கிறதா?**

அகில இந்திய அளவில் பெரிய கட்சி காங்கிரஸ். தி.மு.க.-அ.தி.மு.கவுக்கு மாற்றாக தமிழகத்தில் ஒரு பலமான அணி அமைய வேண்டுமென்று விரும்பினால் அதற்கான முன் முயற்சி எடுக்க வேண்டியது காங்கிரஸ்தான்.

**சுப்ரீம் கோர்ட்டில் தற்போது நடைபெறும் ஜெயலலிதா வழக்குகளின் தாக்கம் தமிழக அரசியலில் எப்படி இருக்கும்?**

# 5 வருடமும் வீண்தான்!

சுப்ரீம் கோர்ட் தீர்ப்புகளுக்குப் பிறகு ஏதோ ஒரு வகையில் பெரிய மாற்றம் ஏற்படும் என்பது நிச்சயம். தீர்ப்பு எப்படி வரும் என்று தெரியாத நிலையில் இதற்கு மேல் எதுவும் சொல்லக் கூடாது.

**உள்ளாட்சித் தேர்தலில் தி.மு.க.வுடன் உங்கள் கூட்டு தொடருமா?**

கடந்த சட்டமன்றத் தேர்தலில் என் நண்பர்கள் இரண்டு பேர் போட்டியிட தி.மு.க. கூட்டணியில் இடம் கொடுக்கப்பட்டது அவ்வளவுதான். மற்றபடி நான் தனியாகத்தான் பிரசாரம் செய்தேன். உள்ளாட்சித் தேர்தலில் ஒத்த கட்சிகளோடு உடன்பாடு வைத்துப் போட்டியிடவே விரும்புகிறோம். எங்கள் அமைப்பின் மீது மக்களுக்கு அன்பு இருந்தது. அதுவே பிறகு நல்லெண்ணமாக மாறியது. வரும் தேர்தலில் அந்த நல்லெண்ணம் நிச்சயம் வோட்டாக மாறும்; மாற வேண்டும்.

**வாஜ்பாய் அரசைப் பற்றி உங்கள் கருத்து?**

2001 பட்ஜெட்டைப் பார்த்தபோது அதன் எண்ணம் நன்றாக இருப்பது தெரிந்தது. பாராட்டினேன். ஆனால் தற்போதைய நிலையில் அது செயலிழந்த அரசு; செயல் மறந்த அரசு.

சந்திப்பு: **ப்ரியன்**

# சர்க்கரை

**கொ**ட்டும் மழையில் குடை பிடித்துக் கொண்டு போய்த் தெரிந்து வரவேண்டிய அளவு அவ்வளவு அவசரமான விஷயம் அல்ல அது! என்றாலும் கோலப்பன் புறப்பட்டான். சிறிச் சிறி அடிக்கும் சாரலில்.

வாசற்படி வரை வந்த மனைவி வத்சலா இயல்புக்கு மாறாக மௌனம் கடைப் பிடித்தாள். திட்டித் தீர்க்கவோ எரிந்து விழுந்து தடுக்கவோ முடியாத அளவு கோபத்தின் உச்சி அது.



'இந்த ஜென்மத்தில் உன்னைத் திருத்த முடியாது' என்ற பார்வை.

'லாப்-ரிஸல்ட்' சாதகமாக இருந்து விட்டால் வத்சலாவின் கோபத்தைக் கரைக்க தான் பஞ்சதந்திரங்களையும் கையாள வேண்டி வரும். கோலப்பனுக்குப் புரிந்தது.

அவன் கவலைப்படவில்லை. உலகின் எந்தக் கோபமும் இப்போது அவனுக்குப் பொருட்டில்லை.

வத்சலா கோபித்துக் கொள்வாள். சாந்தமாகி விடுவாள். மனிதர்கள் கோபித்துக் கொள்வார்கள். சாந்தமாகி விடுவார்கள். ஆனால் இப்போது அவனுடைய உடம்பு ஸிஸ்டம்- கோபித்துக் கொண்டிருக்கிறது. அதைச் சாந்தமாக்க முடி யாது அவ்வளவு இலேசில்.

கோலப்பன் தெருவில்

# வையவன்

இறங்கி இரண்டடி நடக்கும்போதே முழங்கால் வரை 'பேண்ட்' நனைந்து விட்டது. அவன் கையில் விரித்துப் பிடித்திருந்த குடையை வலுக்கட்டாயமாகப் பிடுங்கி எறிந்து அவனை மழையில் குளிப்பாட்ட காற்று முயற்சித்தது. எதிர்க்கிற முயற்சியால் இரண்டு கைகளும் வலித்தன.

'மழை நிற்கிற வரை காத்திருந்து போயிருக்கணுமோ?' என்று நினைக்குமளவு குடைக்கம்பிகள் விறைத்து விரிந்து ஒலி எழுப்பின.

அவனுக்கு லாப் ரிஸல்ட் அதி அவசரம். அதன் பின்பு உலகம் இரண்டாகப் பிரிந்து விடும். சர்க்கரை உள்ளவர்கள் உலகம். சர்க்கரை இல்லாதவர்கள் உலகம்.



சர்க்கரை இல்லாதவர்கள் பாக்கியவான்கள் என்று நினைத்ததும் ஒரு பைபிள் வாக்கியம் போல் அவனுள் ஒரு மாற்று வாக்கியம் உதித்தது. அவர்கள் இந்த உலகத்தைச் சுதந்தரித்துக் கொள்வார்கள். சகல இனிப்புகளையும் சுவைப்பார்கள்.

வேகமாகச் சென்ற ஒரு கார் சளாரென்று மழை வெள்ளத்தில் ஒரு மீட்டர் கிழித்து அவனது பேண்டின் தொடை

வரை நனைத்துவிட்டுப் போயிற்று.

"இவ்வளவு அவசரமாகப் போகிறாயே நீ கூட ஏதாவது லாப் டெஸ்ட் வாங்க வேண்டி இருக்கிறதா?" என்று கோலப்பன் நினைத்தான். தன்னை அந்த கார்க்காரன் நனைத்த கடுப்பில் 'உன் டெஸ்ட் எச்ஐவி பாஸிட்டிவ்வா?' என்று கேட்கத் தோன்றியது.

"ச்சீச்சீ... சாபம் தகாது. அதுவும் தனது நிலை ஊசலாடிக் கொண்டிருக்கிறபோது!" என்று உயர்ந்த வெறுப்பின் மேல் ஓங்கி அடித்தான் உள்ளுக்குள். 'உலகம் சந்தோஷமாக ஆரோக்கியமாக இருக்கட்டும். சர்வே ஜனா சுகினோ பவந்து.'

கடந்த ஒரு வாரமாகத்தான் அந்த 'சர்வே ஜனா'விலிருந்து தான் அப்புறப்படுத்தப் பட்டதாக உலகப்பன் உணர்ந்தான்.

வரம்பு மீறிய நா வறட்சி. தாகம். நீர்ப் போக்கு உடம்பெல்லாம் வலி வலி வலி.

"ஒரு ஷுகர் டெஸ்ட் பண்ணிருங்க" டாக்டர் சாவதானமாகச் சொல்லிவிட்டு ப்ரிஸ்கிருப்ஷன் சீட்டைக் கிழித்துக் கொடுத்தார்.

கோலப்பனுக்குச் சர்க்கரை நோய் வந்து முற்றி காலில் பட்ட காயம் ஆறாததால் பாதம் வரை வெட்டி எடுக்கப்பட்டு சாகும் வரைத் தாங்கு கட்டையோடு நடந்த தன் தந்தை முத்தியாலு செட்டியார் நினைவு வந்தது.

ஒவ்வொரு வேளையும் சாப்பிடுவதற்கு முன் தனக்குத் தானே இன்சுலின் ஊசி போட்டுக் கொள்ளும் சித்தப்பா மாணிக்கம் செட்டியார் நினைவும் வந்தது.

என்னென்ன பத்தியம்... என்னென்ன முன்னெச்சரிக்கை. கீரை, காய், கேப்பைக் களி என்று சிறைக்கைதி போல் ஏற்க வேண்டிய உணவுக்கட்டுப்பாடு எல்லாம் கண்முன் தோன்றிப் பயமுறுத்தின.

கொடுமையிலும் கொடுமையாக கோலப்பனுக்கு மிக மிகப் பிடித்த இனிப்பு வகைகளை ஐஸ்கிரீம்களைக் குளிர்பானங்களைச் சாப்பிடக் கூடாது. அதிகம் நடந்து பழகாதவன் நடநடவென்று நடக்க வேண்டும்.

இத்தனை செய்தாலும் அந்த நோய் தீராது. வாழ்நாள் முழுதும் டயபெடிக் டயபெடிக் தான். மாத்திரையும் கட்டுப்பாடும் ஆயுள் தண்டனை. 'அந்தச் சிகிச்சையில் போய்விடும். இந்தச் சிகிச்சையில் போய் விடும்' என்று ஊட்டப்படும் நம்பிக்கைகளை எல்லாம் அலோபதி வைத்தியம் பரிகாசச் சிரிப்போடு பார்க்கிறது. அந்த பரிகாசச் சிரிப்பைப் பார்த்தால் பயம் வருகிறது.

'அட ஆகிறது ஆகட்டும்; போகப் போகிற உயிர் போகத்தான் போகிறது' என்று எதற்கும் தயாராகித் தின்பதைத் தின்று கொண்டு ஊசியை நம்பி வாழ்பவர்களின் முரட்டுத்துணிச்சலைப் பார்த்தால் பிடிக்கவில்லை.

உயிருக்கு ஒரு மரியாதை காட்ட வேண்டாமா? 'ஊனுடம்பு ஆலயம். உள்ளே ஈசுவரன்' என்று தொழத் தோன்றுகிறது. ஆனால் அதற்குப் பின் சர்க்கரை சர்க்கரை என்று அஞ்சுகிற அச்சத்தில் எடுக்கப்போகும் எச்சரிக்கையில் எதைத் தொழுவது? எப்படித் தொழுவது?

ஒருக்கால் இத்தனை யூகமும் வீண் கற்பனையாகப் போகலாம்! 'லாப் ரிஸல்ட்' நெகடிவ்வாக வந்து விட்டால்! அப்படி வருமா? சந்தேகங்கள் எப்போதுமே மெஜாரிட்டி. நம்பிக்கை மைனாரிட்டிதான்.

> **"பையனைப் பரீட்சையில பாஸ் போடச் சொல்லி ரூ.25 ஆயிரத்துக்குச் செக் கொடுத்தியே என்னாச்சு?"**
>
> **"செக்கும், பாஸாகலை; பையனும் பாஸாகலை!"**
>
> ***- சீர்காழி ரேவதி***

நோயை விட நோயைப் பற்றி அரைகுறையாகப் படிக்கிற அபாய அறிவிப்புகள் படுத்துகிற பாடு தாங்க முடிவதில்லை. எவ்வளவு மெதுவாக நடக்க முடியுமோ அவ்வளவு மெதுவாக நடந்தும் மழையின் உக்கிரத்தைச் சமாளிக்க முடியவில்லை. கையிலிருந்த குடையின் கம்பிகள் மேல் நோக்கிக் குடையை ஆகாயத்தை நோக்கி ஒரு கறுப்புப் பூசணிப்பூ மலர்ந்தது போல் துணி மேலே மடங்கியது.

பேண்ட் இடுப்பு வரை நனைந்து சட்டையின் இரண்டு கைகளும் நனைந்து விட்டன.

ஒதுங்குவது தான் புத்திசாலித்தனம்.

கதவுகள் மூடி டாப் இறக்கி இருந்த ஒரு கடையோரம் கோலப்பன் ஒதுங்கினான்.

பக்கத்து வீட்டு ஜன்னல் வழியே உள்ளே இருந்து ஒரு கனமான குரல் யாரோடோ கோபமாகப் பேசுவது கேட்டது.

"இன்னிக்கு சனிக்கிழமை! மணி அஞ்சாகப் போறது. இனிமே ஒண்ணும் பண்ற துக்கில்லே. நாளைக்கு ஞாயித்துக் கெழமை. லீவு. மைக்கா நாள் திங்கட் கிழமை. பாங்க் பத்து மணிக்குத் தொறப்பான். அப்ப 'வித்ட்ரா' பண்ணிட்டு வந்தாதான் பணம். புரியலே? அதுவரைக்கும் எதுவும் பண்ண

முடியாது."

கோலப்பன் சனிக்கிழமை ஆறு மணிக்கெல்லாம் மூடப்போகும் லாபரட்டரியை நினைத்தான். இன்னும் ஒரு மணி நேரம் மழை விடவில்லை என்றால் அவனது 'ஷுகர் டெஸ்டு' முடிவும் திங்கட் கிழமை காலை ஒன்பது மணி வரை ஒத்திப்போடப் படும்.

"உன் மனசுலே நான் ஒண்ணுக்கும் உதவாத தெருப் புளுதின்னு நினைப்புடீ! பார்த்துகிட்டே இரு. விஜயதசமி அன்னிக்கு ஜாம் ஜாம்னு ஸ்வீட் ஸ்டாலைத் தொறந்தே தீருவேன்."

"இளிச்சிங்க!"



கோலப்பன் வீசி வீசி அடிக்கிற காற்றையும் பாரல் பாரலாகக் கொட்டுகிற மழையையும் வெறுப்போடு பார்த்தான்.

எல்லாமே எதிர்மறையாகப் போய்க் கொண்டிருக்கிறது. விதி அவனுக்கு எதிரே அட்டகாசச் சிரிப்பு சிரிக்கிறது.

ஷுகர் மில்லில் வேலை செய்யும்போது கண்டு பிடிக்கப்படாத சர்க்கரை, ஸ்வீட் ஸ்டால் திறக்கும் போது கண்டுபிடிக்கப் படுமோ?

கோலப்பனின் சிந்தனையைக் குலைப்பது போல பக்கத்து வீட்டு ஜன்னலின் கனத்த குரல் மீண்டும் கத்தியது.

"நான் சொல்றத நீ கேளு! ஒனக்கு சர்க்கரை வியாதி. எனக்கு ப்ளட் பிரஷர். ஒலகத்திலே ஒவ்வொருத்தனுக்கும் ஒவ்வொரு வியாதி இருக்குய்யா. பயந்து பயந்தும் சாவலாம். பயப்படாமயும் சாவலாம். முடிவு ஒண்ணு தான். இருக்கற வரைக்கும் தில்லோட இரு."

கோலப்பனின் செவிப்புலன் கூர்மை அடைந்தது. ஏதோ அவனுக்கென்று பக்கத்து ஜன்னலில் யாரோ அருள்வாக்குச் சொல்வது போல் விழிப்புற்றான்.

கனத்த குரலுக்கு எதிரே பேசிய குரல் அடக்கி வாசித்ததோ என்னவோ, சரிவரக் கேட்கவில்லை.

அதற்குப் பதிலாக கனம் பி.பி.!

இருக்கட்டுமே!

சர்க்கரை வியாதி கண்டுபிடிக்கப்படாத ஒரு சுதந்தரமான ஞாயிற்றுக் கிழமையை அனுபவிக்கலாமே! ஆனால் திரும்பி வெறுங்கையோடு போனால் வத்சலாவின் கோபத்தில் கேலி வேறு கூடிவிடும்.

"இப்படி எக்குத்தப்பா ஏதாவது செஞ்சுட்டு மழையிலே மாட்டிண்டு நச் நச்சுனு தும்மி, ஐயோ குளிர்றது. ஒடம்பெல்லாம் அனத்துதுன்னு எம்பிராணனை வாங்கணும்."

மனசுக்குள் வத்சலாவின் குரல் பொரிந்து தள்ளுகிறது.

வத்சலா... வத்சலா... வத்சலா...

அவள் என்ன சொல்வள். அவள் என்ன மதிப்பாள் என்று எதற்கெடுத்தாலும் ஒரு வத்சலா 'சென்சார்ஷிப்' மனசில் ஏன் வந்து தொலைக்கிறது? சர்க்கரை வியாதி போலவே ஒரு சம்சார வியாதி.

முந்தா நாள் இரவு படுக்கையில் அவள் விட்ட 'டோ'ஸை நினைத்தான் கோலப்பன்.

"இருந்த ஷுகர் மில்' வேலைக்குத் தலை முழுகியாச்சு. சும்மா கெடந்த சங்கை ஊதிக் கெடுத்தானாம் ஆண்டிங்கற கதையா கெடைச்ச பி.எப். பணத்தைப் பாங்கிலே போட்டு வைக்காமே ஸ்வீட் ஸ்டால் ஆரம்பிக்கிறேன்னு தாம்தூம் பண்ணி கடை அட்வான்ஸ், ரேக் அது இதுன்னு கரைச்சுட்டுப் படுத்திட்டீங்க. ஒடம்பெல்லாம் வலி நாக்கெல்லாம் வறட்சின்னு."

கோலப்பன் அவளிடம் தான் விட்ட சவாலை நினைவு கூர்ந்தான்.

"நானா வேலையை விட்டு நின்னேன். அவங்க தானடீ நிறுத்தினாங்க. ஆட்குறைப்புன்னு." காரம் கூடிய தொனியில் முரசறைந்தார்.

"த பாரு... இந்தக் காஞ்சான் மூஞ்சான் கதையெல்லாம் வேணாம். வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டா ஒரு முடிவுக்கு வாரும்."

கேட்டுக் கொண்டிருந்த கோலப்பன் கொட்டுகிற மழையை, காத்திருக்கிற ஷுகர் டெஸ்ட் ரிஸல்ட்டை, வறுத்து எடுக்கப் போகிற வத்சலாவை எல்லாம் மறந்த ஒரு சுவாரஸ்யத்திற்கு ஆளானான்.

ஜன்னலில் சன்னக்குரல் என்னமோ முனகியது. நீளமாகச் சொல்லி இருக்க வேண்டும். கனம் பி.பியின் பதில் கனை

பாய்வதற்குச் சற்று நேரமாயிற்று.

"அதான் சொல்லிட்டனே!"

"அதான் சொன்னனே... இது 'வார்யா வார்'. யுத்தம். நீயா நானான்னு வந்திருக்கிற போர். குஞ்ஞே முஞ்சேன்னு நீரு தத்தளிக்க ஆரமிச்சா ஒம்ம நண்டுவளைக்குள்ளே பதுங்கறீர்னு அர்த்தம். நண்டா இருந்தா அதுந்தலை எளுத்து. அது கூட எங்கே எப்பவும் பதுங்கிட்டிருக்கு? அப்பப்போ ஓடியாடி அலைஞ்சாதான் அதுக்கும் புவ்வா."

கோலப்பன் கூர்ந்து கவனித்தான். சற்று நிசப்தம். மீண்டும் கனம் பி.பி.

"மறுபடியும் ஆரமிச்சுடுங்க! எந்தப் பொம்பள எந்த ஆம்பளய முன்னேற வுட்ருக்கா? சும்மா, புருடா வேணும்னா விடுவானுங்க. எல்லா வெற்றிக்கும் பின்னாடி ஒரு பொம்பள இருக்கான்னு. அதெல்லாம் பொம்பளைங்களுக்குப் போடற சோப்பு. விட்டுத் தள்ளுவீரா... பொண்டாட்டி அத்தைச் சொல்றா இத்தைச் சொல்றான்னு பொலம்பறீரே."

கோலப்பனுக்குள் ஒரு புதுச் சூடு ஏறியது.

"கருணாகரா! ஒண்ணு செய்யும். அல்லது செய்யாம விடும். நடுவாந்திரமா நிக்காதயும். நடுங்கிக்கிட்டே நிக்காதேயும். செஞ்சிக்கிட்டே செய்யாம இருக்கிறது செய்யாமயே செஞ்சுக்கிட்டிருக்கிறது எல்லாம் பகவானோட டெக்னிக். நாம மனுசங்க. புரியறதா?"

எதிரிலிருந்த முகம் தெரியாத அந்தக் கருணாகரனுக்குப் புரிந்ததோ புரியவில்லையோ. கோலப்பனுக்கு எதுவோ புரிந்தது.

அவன் மழை நிற்கிறவரை அங்கேயே நின்றான்.

பக்கத்து ஜன்னலில் அதற்கு மேல் பேச்சுக்குரல் கேட்கவில்லை. இருவரும் போயிருக்கலாம். அல்லது ஜன்னல் ஓரத்தை விட்டு நகர்ந்திருக்கலாம்.

**வி**ஜயதசமியன்று அவன் திட்டமிட்டபடி மாணிக்கம் ஸ்வீட் ஸ்டாலைத் திறந்தான். டவுனில் ஒரே மாதத்திற்குள் அவனது இனிப்புப்பலகாரங்கள் புகழ் பெற்று விட்டன. வியாபாரம் ஏறுமுகமாகவே இருந்தது.

வத்சலாவுக்கே அவன் சற்று வேற்றாள் மாதிரி தோன்றத் தொடங்கினான்.

அங்கே வலிக்கிறது. இங்கே வலிக்கிறது என்ற புகார்கள் ஏதும் அவனிடம் இருந்து வரவில்லை. எந்த ஸ்வீட்டை மாற்றுச் சுவையோடு போடலாம். அதில் என்னென்ன சேர்த்தால் ருசி கூடும் என்று மட்டுமே அவனிடம் யோசனை கேட்டான்.

ஆனால் தனது சொந்தக் கடையில் போட்ட எந்த இனிப்பு வகையிலும் ஒரு துளி கூட அவன் வாயில் போட்டு ருசி பார்க்கவில்லை. போகிற வருகிறவர்களில் எவரையாவது கூப்பிட்டுக் கொஞ்சம் சாம்பிள் கொடுத்து ருசி பார்த்துச் சொல்லச் சொல்வான்.

கோலப்பன் ஒரு வைராக்கியத்தோடு இனிப்புகளின் மேலிருந்த மயக்கத்தைத் தனக்குள் அறுத்தெறிந்து விட்டான்.

அந்தச் சனிக்கிழமை மாலை ஆறு மணிக்கெல்லாம் அவன் வாங்கிப் பார்த்திருக்க வேண்டிய லாப் டெஸ்ட் ரிஸல்ட்டை வாங்கவே இல்லை. அதன் மிரட்டல்கள் என்னென்ன பத்தியத்திற்கு அவனைத் துரத்தி இருக்குமோ அதற்கெல்லாம் அவனே தயாராகிவிட்டான்.

மனசு தயாரானால் எல்லாம் தயார்தான்.

அலோபதி, ஹோமியோபதி, நேச்சுரோபதி, சித்தா, ஆயுர்வேதம் உட்பட எல்லாமே அவனது அசட்டுத் துணிச்சலுக்கு ஆட்சேபம் தெரிவிக்கக் கூடும் என்று அவனுக்குத் திட்டவட்டமாகத் தெரிந்தது. ஓகே குட்பை என்று சொல்லிக் கொண்டான் தனக்குள். ○

## வித்தியாசமா ஒரு தொடர்!

**ச**னிக் கிழமைகளில் இரவு பத்து மணிக்கு 'முடிவு உங்கள் கையில்' என்ற தொடர் சன் டி.வி.யில் ஒளிபரப்பாகிறது. வாரம் ஒரு கதை வரும் இதன் முடிவை வாசகர்கள் ஃபோன்மூலம்



தெரிவிக்க வேண்டுமாம்.

அதிகபட்ச வாசகர்கள் சொல்லும் தீர்வுபடி முடிவு ஒளிபரப்பாகும். அதெப்படி? "ஏற்கெனவே இரண்டு விதமான கிளைமாக்ஸ் காட்சிகளை எடுத்து வைத்திருப்போம். 'இதுவா? அதுவா?' என்று தொகுப்பாளர் ஒருவர் கதையின் இடையில் வந்து கேட்பார். பிறகு பார்வையாளர்கள் முடிவுபடி கிளைமாக்ஸ் வரும்" என்கிறார்கள் நியூ ஏஜ் என்டர்டெய்ன்மெண்ட் நிறுவனத்தினர்.

- செ



* கேம்ப்ரிட்ஜ் பல்கலைக் கழகம்



* பிரகாஷ்

# இந்திய ஆய்வுதான் வெளிநாடுகளில் ஃபேஷன்!

இங்கிலாந்திலுள்ள கேம்ப்ரிட்ஜ், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகங்களில் பயன்படாமல் இருந்த பழந் தமிழ் நூல்களை 'கேட்டலாக்' செய்துவிட்டு வந்திருக்கிறார் ரோஜா முத்தையா நூலகத்தின் உதவி இயக்குனர் ஆர்.பிரகாஷ்.

"ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டியில் ஜி.யு.போப் தமிழ் வகுப்பு எடுத்தவர். அவர் காலத்திய மற்றும் அதற்கு முந்தைய தமிழ் நூல்கள் அங்கு புழக்கத்தில் இருந்தன. ஆனால் கடந்த அறுபது வருடமாக அந்த நூல்கள் பயன்பாட்டுக்கு வராமல் மூலையில் பூட்டி வைக்கப்பட்டிருப்பதாய்த் தகவல் வந்தது. இதையடுத்து பிரிட்டிஷ் கவுன்சிலின் பெல்லோஷிப் உதவியுடன் அங்கு சென்றேன். மிகவும் பழைமையான நூல்களையெல்லாம் 'கேட்டலாக்' செய்துவிட்டு வந்திருக்கிறேன்.'' என்று சொல்லும் பிரகாஷ், இதுவரை கேள்விப்பட்டிராத பல நல்ல நூல்கள் அங்கு இருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

"1872ல் 'ஜாதி சங்கிரக சாரம்' என்ற ஜாதியைப் பற்றிய நூல் வெளிவந்திருக்கிறது. இந்த நூலுக்கு மறுப்பு தெரிவிக்கும் விதமாக 1874ல் 'சான்றோர் மரபு காத்தல்' என்ற சாதி சண்டையைப் பற்றிய நூல் வெளிவந்திருக்கிறது. இந்த அரிய நூல்கள் தமிழகத்தில் வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

"சேலம் மாவட்டத்தில் 1908ம் ஆண்டு வாக்கில் கலெக்டராக இருந்த மேக் ரிகுயின் என்ற வெள்ளையர் கொச்சைத் தமிழோடு சேர்ந்த நாட்டுப்புறப் பாடல்களைத் தனியாக ஒரு பணியாளை நியமித்துச் சேகரித்து வைத்திருக்கிறார். இதில் ஒவ்வொரு ஜாதியினரும் எந்த வழக்காற்றில் பேசியிருக்கின்றனர் என்பது போன்ற சில நாட்டார் வழக்காற்றியல் விஷயங்கள் அதிகமாக இருக்கின்றன. இதே போன்றே மலையாள நாட்டுப்புறப் பாடல்களையும் தொகுத்திருக்கிறார். இதன் கையெழுத்துப் பிரதிகள் கேம்ப்ரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் கிடைத்தன. அவற்றைப் பத்திரமாக கையாண்டு பயன்பாட்டுக்குக் கொண்டு வந்திருக்கிறேன்" என்ற பிரகாஷ், "இந்தப் புத்தகங்களைக் கேட்டலாக் செய்ததன் மூலம் ஆய்வு மாணவர்கள் நூல்களைத் தேடி அலைய வேண்டியதில்லை. விரைவாக பெற்றுக் கொள்ள முடியும். நெட்டில்கூட, www.lib.uchicago.edu/e/sg/southindia/rmrl.html என்ற முகவரியில் சென்று தமிழிலேயே படித்துப்பயன் பெற முடியும்" என்கிறார்.

"இப்போதெல்லாம் மேலை நாடுகளில் இந்திய, திபெத்திய வரலாறு, இலக்கியம் பற்றி ஆராய்வதுதான் ஃபேஷனாகி இருக்கிறது'' என்று கூறும் பிரகாஷுக்குக் கொஞ்சம் கவலையும் இருக்கிறது.

இதே போன்று சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம் உள்ளிட்ட பல மொழி நூல்கள் அங்கு கவனிப்பாரின்றி கிடக்கிறதாம். அதையும் சார்ந்தவர்கள் 'கேட்ட லாக்' செய்து வைத்தால் ஆராய்ச்சியாளர்கள் பயன் பெறுவார்கள் என்கிறார்.

- சலாம்ஜி

# நடக்குமென்பார்,



**மேஷம்:** செவ்வாய் ராசி நாதன் 9-ல் உலவுகிறார் என்ற ஒரு விஷயம் போதுமே, இந்த வாரம் முழுக்க சிறப்பான பலன்களை அள்ளிக் கொடுக்க! குரு பார்வையும் ஜோராக இருப்பது, ஃபலூடா மேல் செருகப்படும் முக்கோண வேஃபர் பிஸ்கேட் போல. வெளிநாட்டுத் தொடர்பு மூலம் அனுகூலம் ஏற்படும். வியாபாரிகள் முன்னேற்றம் காண்பார்கள். மாணவர்கள் ஜொலிப்பார்கள். கணவன் - மனைவி உறவு நிலை அன்புடன் இருக்கும். 2-ல் சனி, 3-ல் குரு உலவுவதால், சிறு சிறு உபாதைகள் வரும். சாது, மஹான் தரிசனம் மன அமைதி தரும்.



**ரிஷபம்:** உங்கள் திறமை, புத்திசாலித்தனம் எல்லாமே, ரயில் கட்டண உயர்வு போல கிடுகிடுவென உயர்ந்திடும். மக்கள் நலம் சீராக இருக்கும். காசை எண்ணி எண்ணி செலவு பண்ண வேண்டிய நிலைமை இருக்காது. தரகர்கள், விற்பனை பிரதிநிதிகள், கமிஷன் ஏஜெண்டுகளுக்கு, செழிப்பான சூழ்நிலை உருவாகும். தம்பதியிடையே பரஸ்பரம் அன்னியோன்யம் பெருகும். உடன்பிறந்தவர்களால் பிரச்னை ஏற்படும். 'திருத்தணி முருகனுக்கு அரோகரா' சொல்லுங்க, வேலும் மயிலும் துணை வரும்.



**மிதுனம்:** சூரியன், புதன், சுக்ரன் மூன்று கிரகங்களுமே ஆரோக்கியப் புன்னகையோடு அழகாக உலா வருவதால், நீங்கள் மண்ணைத் தொட்டாலும், பொன்னாகும் காலமிது. விருந்து, உபசாரம், கேளிக்கை, உல்லாசம்னு ஜாலியா பொழுது போகும். மலை, காடு வனப்பகுதி துறைகளில் பணிபுரிபவர்களுக்கு முன்னேற்றமான சூழ்நிலை இருக்கு. எதிர்ப்புகள் எகிறிப் போகும். பயணத்தால் சங்கடங்கள் நேரிடலாம். பாதுகாப்பா போறது நல்லது.



**கடகம்:** இது துணிச்சலான வாரம். வாரத்தின் முதல் மூன்று நாட்களில் தன்னம்பிக்கைக் கொடி கட்டிப் பறக்கும். சட்டம், காவல், இராணுவத் துறைக்காரர்களுக்கு சுபிட்சம். பலருக்கு வாகன யோகம் அமையும். சிவப்பு நிறம் டேஞ்சர்தான். ஆனால் உங்களுக்கு அது ஏஞ்சல்... நிறைய நன்மைகளைக் கொண்டு வரும். உழைப்பும் திறமையும் என்றைக்கும் வீண் போகாது சாமி... முழு மனசோட பிரார்த்தனை பண்ணுங்க. ஆஞ்சநேயர் தரிசனம் ஆத்மபலம் தரும்.



**சிம்மம்:** ரொம்ப நாளா ஃபேமிலி ஃபோட்டோ ஒண்ணு எடுக்கணும்னு நினைச்சிக்கிட்டிருந்தீங்கன்னா, அதை இந்த வாரம் எடுக்கலாம். ஏன்னா, குடும்பத்துல எல்லாரும் ஒண்ணா, ஒற்றுமையா, சந்தோஷமா இருக்க சந்தர்ப்பம் கனிஞ்சு வந்திருக்கு. பொருளாதார நிலை திருப்திகளும், நண்பர்களும் உதவிகரம், அயல்நாட்டுத் தொடர்பு லாபகரம். 5ல் கேது, செவ்வாய் என்பதால், சின்ன சின்ன பிரச்னைகள் வந்து போகும். ஸ்ரீசத்ய சாயிபாபா அருள் காக்கும்.



**கன்னி:** உங்கள் அறிவாற்றல் அற்புதமாக வெளிப்படும். நண்பர்கள், உறவினர்களிடம் ரொம்ப எதிர்பார்த்துடாதீங்க. வீணா, அப்செட் ஆகி, அல்சர்ல கொண்டு சேர்க்கும். கலைத் துறைக்காரர்களுக்கு கலகலப்பான வாரம். ஏகப்பட்ட அட்வான்ஸ் வாங்குவீங்க. பெண்களுக்கு மெகாப் பரிசு வாரம்னே அறிவிச்சுடலாம். உத்தியோகஸ்தர்கள் வேலையில் கவனமா இருக்கணும். அஜாக்கிரதையா இருந்தா, அதிகாரிங்களோட ஆத்திரத்துக்குப் பாத்திரமாக வேண்டியிருக்கும்.



**துலாம்:** "ஸாரி ஸார்... கொஞ்சம் டைட்டு"னு நழுவிப் போனவங்கக் கூட, தானா வந்து, "உங்களுக்குச் செய்யாமே நான் யாருக்குச் செய்வேன்" என்று வலிய வந்து உதவுவாங்கன்னா, உங்க கிரக சஞ்சாரத்தோட மகிமையை நீங்களே தெரிஞ்சுக்குங்க. நிலம், வீடு, மனை ராசியான நிலைமை கொண்டு வரும். தான, தருமம் பலனளிக்கும். குரு – 9ல் அமர்ந்து காஷியர் வேலை பார்ப்பதால், பணப்பெட்டி வெயிட் கூடும். ஊதிய உயர்வு, விருப்பத்துக்கேற்ற இட மாற்றம், பதவி உயர்வுனு உத்தியோகஸ்தர்கள் பாடு படு ஜாலி!



**விருச்சிகம்:** அப்பாடி! எங்கேயோ தேசாந்திரம் போயிருந்த நல்ல கிரகங்கள் எல்லாம், இப்ப மறுபடி திரும்பி வந்து அனுகூலமான க்ஷேத்திரங்கள்ல செட்டில் ஆகியிருக்கிறதனாலே, உங்களுக்குப் பல விஷயங்கள் பந்தாவா நடக்கும். முக்கியஸ்தர்கள் உதவ

# நடக்கும்!

முன் வருவார்கள். அரசியல்வாதிகள் வளர்ச்சி காண்பார்கள். அரசியல் ஈடுபாடு நன்மை தரும். சிலருக்கு பிதுராஜ்ஜிதச் சொத்து கிடைக்கும். விஷ ஜந்துக்களால் பாதிப்பு ஏற்படலாம் உஷார்!



**தனுசு:** ஒரு பக்கம் பார்த்தால் ராசிநாதன் குரு உட்கார்ந்திருக்கார். இன்னொரு பக்கம் புதன் ப்ளஸ் சுக்ரன் சஞ்சாரம்... சூரியன் வேறே, வாரக் கடைசியிலே பத்துக்கு மாறுகிறார். இவ்வளவும் நடந்தா, உங்க ராசிக்கு என்ன குறையிருக்க முடியும் சொல்லுங்க? உத்தியோகஸ்தர்கள் நிலை உயரும். தெய்வப் பணிகளில் ஈடுபாடு அதிகரிக்கும். நல்ல மாற்றங்கள் நிகழும். ஜென்ம ராசியில் செவ்வாய், கேது உலவுவதால், எதிலும் நிதானமாக போவது நல்லது. பதறிய காரியம் சிதறிப் போகுமில்லையா?

**மீன ராசிக்காரரான ஓவியர் நடனத்துக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரப் போகுதாம்.**





**மகரம்:** ஸாரி டு ஸே, உங்க கிரக சஞ்சாரப்படி, முக்கியமான சில கிரகங்கள், அனுகூலமாக உலவாததால், விசேஷமான பலன்களை எதிர்பார்க்க முடியாது. அதனால, புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடுங்க. குறுக்கு வழிகளில் செல்லக்கூடாது. கைப்பொருள் பத்திரம். மக்கள் நலம் கவனம் தேவை. உடன்பிறந்தவர்களால் பிரச்னை ஏற்படலாம். கொஞ்சம் எட்டியே நில்லுங்க. வார இறுதியில் ஓரளவு பண நிலைமை சீராகும். அதுவரை, பிரார்த்தனைகளில் ஈடுபடுவது க்ஷேமம்.



**கும்பம்:** அரசியல்துறைக்காரங்களுக்கு அதிர்ஷ்டகாலம், மருத்துவத் துறைக்காரர்களுக்கு மகத்தான காலம். உத்தியோகஸ்தர்களுக்கு உயர்வான காலம். பொறியியல் துறையினருக்குப் பொலிவான காலம்... இப்படி சகலருக்கும் ஏற்றம் தரும் வாரமாகவே அமைஞ்சிருக்கு. வாகனம் ராசி தரும். எழுத்தும், பேச்சும் முன்னணிக்கு வரும். குடும்ப நலம் சிறப்பு தரும். 4ல் சனி சுக்ரன் சஞ்சாரிப்பதால், சுக பங்கம் உண்டாகும். அலைச்சல், வீண் குழப்பம் ஏற்படலாம். பக்குவமாகச் சமாளியுங்க...



**மீனம்:** மீன ராசி அன்பர்கள் அரசாங்க உத்தியோகத்தில் இருந்தால், பதவிகள், பொறுப்புகள் வந்து சேரும். ஸ்பெகுலேஷன் சம்பந்தப்பட்ட நபர்களாக இருந்தால், லாபம் கொண்டு வரும். கலைத் துறை நேயர்களாக இருந்தால், முன்னேற்றம் காண்பார்கள். பெண்களாக இருந்தால், எண்ணமெல்லாம் வண்ணமாகும். வாரக் கடைசியில் சூரியன் 7ம் எண்ணுக்கு திடீர் இடமாற்றம் பெறுவதால், தந்தை நலனில் கவனம் தேவை. கோபுர தரிசனம் கோடி புண்ணியம்!

**அக்னிசர்மா**

'ஒன்றோடொன்று மோதாதபடி, தேதிகள் பிரித்து, பாதைகள் வகுத்து, பாதுகாப்புக் கொடுத்து, பிள்ளையார் ஊர்வலங்கள் எத்தனை அமைதியாக நடத்த உதவினோம், பார்த்தீர்களா?' என்று சந்தோஷப்பட்டார் சென்னை போலீஸ் கமிஷனர் முத்துக்கருப்பன். Ever help, never hurt என்றிருக்கும்வரை சந்தோஷம்தான்.

ஆனால் விநாயகர் சிலைகள் மெரினாவில் கரைக்கப்பட்ட(?) காட்சிகளை ராஜ் செய்திகளில் பார்த்த பக்தர்கள் சந்தோஷப்பட்டிருக்க மாட்டார்கள். வேதனைதான் அடைந்திருப்பார்கள். காரணம், தண்ணீரில் போட்டதும் சுலபமாகக் கரையக் கூடியதாகச் சிலைகளைச் செய்யாமல், மரம், பிளாஸ்டிக், இரும்புக்கம்பி, பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ் முதலியவற்றால் செய்து, கடலில் அவை கரைய மறுத்தபோது தடியால் அடி அடியென்று அடித்து, காலால் மிதி மிதியென்று மிதித்து, எத்தனை கண்றாவி செய்ய முடியுமோ அத்தனையும் செய்துவிட்டார்கள் ஊர்வலக்காரர்கள்.

வேறொரு கடவுளாக இருந்தால் கோபத்துடன் சாபம் கொடுத்து அத்தனை பேரையும் சமுத்திரத்தில் தள்ளியிருப்பார். ஆனால் பிள்ளையார் நல்ல நகைச்சுவை உணர்ச்சி உள்ளவர். அவருடைய பதினாறு சிறப்புத் திருநாமங்களில் 'விகடன்' என்பதும் ஒன்று. ஆகையால் எல்லாக் கூத்தையும் ரசித்துச் சிரித்திருப்பார்.

ஒற்றைக் கண்ணுக்குக் கறுப்புத் திரை போட்டுக்கொண்டு நாட்டைக் கலக்கிக் கொண்டிருந்தார் மோஷி தயான் என்ற இஸ்ரேலிய தளபதி. ஒருமுறை அராபிய எதிரிகள் அவருடன் பேச்சுவார்த்தைக்கு வந்தபோது அவர் சொன்னார்: Whenever you accept our views we shall be in full agreement with you.

சட்டமன்றத்தில் நடைபெறும் வாதப் பிரதிவாதங்களை ஜெயா டீ.வியில் பார்க்கும்போது, ஆளும் கட்சி, எதிர்க்கட்சி இரண்டுமே மேற்கண்ட கொள்கையைத்தான் கடைப்பிடிக்கின்றன என்று தோன்றுகிறது. (இந்தக் காட்சிகள் ஒரு தலைப்பட்சமாக இருக்கிறதென்று துரைமுருகன் சொல்வதும் ஓரளவு உண்மையே)

என்றாலும், ஜெயலலிதாவின் பரம விரோதிகள்கூட ஒரு விஷயத்தில் பிரமித்துப் போயிருக்கிறார்கள் என்பதைச் சொல்லத்தான் வேண்டும்.

அது, 'மாண்புமிகு' அடைமொழியை மறக்காமல் போட்டவாறு பளிச் பளிச்சென்று அவர் கொடுக்கிற குறுக்கீடுகள், சரியோ, தவறோ, பழசோ புதிசோ நக நுனியில் வைத்திருக்கிற புள்ளி விவரங்கள். சாத்தியமோ அசாத்தியமோ, வாரிவிடும் வாக்குறுதிகள்.

இவ்வளவும், தலைக்கு மேல் பட்டாக் கத்தி ஆடிக் கொண்டிருக்கும் தருணத்தில்! காட்டாமணிச்செடியின் கிளையைப் பிடித்துக்கொண்டு மலையுச்சியில் தொங்கிக் கொண்டிருக்கும் வேளையில்! தினசரிக் காலண்டரில் தான் தாளாகக் கிழிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில்!

இந்தத் 'தில்' மிக்க தலைவியை நினைக்கையில் பெருமூச்சு எழுகிறது. இவர் மட்டும் ஊழல் குற்றங்களுக்கு ஆளாகாமல் இருந்திருந்தால்...!



• 'தில்' மிக்க தலைவி?

# பிள்ளையாருக்குக் கோபம் வராது!

செப்டெம்பர் ஐந்தாம் தேதியன்று ஆசிரியர்களின் பணியைப் போற்றிப் பேச அவ்வை நடராஜனைக் காட்டிலும் தகுதி படைத்த அறிஞர் யார் இருக்க முடியும்? One good teacher is worth a thousand priests என்பதை அனுபவத்தில் அறிந்த அவர், ஜெயாவில் அளித்த பேட்டி அருமை.

கணினிகளின் வருகையால் ஆசிரியர்களின் மதிப்பு குறைந்து விட்டதா என்று கேட்டபோது, 'அதெப்படிக் குறையும்? கணினிக்கான பாடங்களை அமைப்பதும் ஓர் ஆசிரியர்தானே?' என்று பதிலளித்தார். 'முதிர்ந்த அறிவும் ஆழ்ந்த அனுபவமும் உள்ளவர்கள் மட்டுமே கணினி பாடங்களைத் தர முடியுமாகையால் அதுவும் எதிர்காலத்துக்கு நன்மையானதுதான்' என்றார்.

அவர் சொன்ன ஒரு சுவையான செய்தி:

பிரெஞ்சு அரசில், தலைமை அமைச்சருக்கு அடுத்த பதவியில் இருப்பவர் உள்துறை அமைச்சரோ, நிதியமைச்சரோ, பாதுகாப்பு அமைச்சரோ அல்ல. கல்வி அமைச்சர்!

நம்மவர்கள் நடைமுறைப்படுத்த வேண்டிய நல்ல யோசனை.



• முத்துக்கருப்பன்



• அவ்வை நடராஜன்



• மில்கா சிங்

சேர்ந்தாற்போல் அறுபது மணி நேரத்துக்குத் திகிலும் துயரமும் நிறைந்த ஒரு வேதனைத் தொடர் ஓடியதென்றால், அது சென்னை மண்ணடி ஆடியபாதம் தெருவில்தான். முப்பத்தைஞ்சு அடி ஆழக் குழாய்க் கிணற்றில் விழுந்த குழந்தை பிழைக்க வேண்டுமென்று அந்தத் தெருவின் இரண்டு பக்கமும் உட்கார்ந்திருந்த பெண்கள் மட்டுமல்ல, டி.வியில் அதைப் பார்த்த லட்சக்கணக்கானோரும் பிரார்த்தனை செய்தனர். எல்லாம் வீணாயிற்று.

உயிரோடு மீட்க முடியாவிட்டாலும் குழந்தையின் உடலையாவது முழுசாகக் கொண்டு வருவார்கள் என்று நினைத்தால் அதுவுமில்லை. சிதைந்த தேகத்தைத்தான் கோணியில் சுருட்டி எடுத்து வந்தார்கள். It is not death, but dying, which is terrible என்பது மெய்யாயிற்று.

அவையினர் அனைவரும் கோரஸாகக் குரல் கொடுத்தார்கள் மில்கா சிங்கிடம்! மறுத்துவிட்ட அர்ஜுனா அவார்டை அவர் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று. அந்தத் தடகள வீரர் was in no mood to oblige. அர்ஜுனா அவார்டுகள் அரசியல்வாதிகளால் அசிங்கப்படுத்தப்பட்டு விட்டன என்பது அவர் குற்றச்சாட்டு.

Big Fight என்ற இந்த ஸ்டார் நியூஸ் நிகழ்ச்சியில் உப்பும் மிளகும் தூக்கலாகவே தூவப்பட்டிருப்பது வழக்கம். அன்றும் அப்படித்தான். பில்லியர்ட்ஸ் புகழ் கீத்சேத்தி, 'விளையாட்டு வீரர்களுக்கான விருதுகளை ஏன் மந்திரிகளும், செக்ரட்டரிகளும் தீர்மானிக்க வேண்டும்? காவஸ்கர், பிரகாஷ் படுகோன் போன்றவர்கள் கொண்ட குழுவிடம் ஒப்படைத்தால் என்ன?' என்று கேட்டார்.

நடுவிலே மாட்டிக் கொண்டவர் மாத்தூர் - மத்திய அரசின் விளையாட்டுத் துறை செக்ரட்டரி. பார்க்கிறோம், சொல்கிறோம், கவனிக்கிறோம் என்ற மழுப்பலான பதில்களையே தந்தார். நிர்ப்பந்த ரோல்கள் அவருக்கு, பாவம்.

வினோத்

குறுவை - சம்பா சாகுபடி காலங்களில் மேட்டூரில் நீர் மட்டம் குறைந்தால் போதும், தமிழக காவிரிப் பாசன விவசாயிகளின் விழிகளில் கண்ணீர் மட்டம் உயர்ந்து விடுகிறது.

மேட்டூர் அணையில் சென்ற ஆண்டு இதே தினத்தில் இருந்த நீர் மட்டம் இன்று மிகவும் குறைந்து போயுள்ளது. காவிரி பாசன விவசாயிகளின் அடிப்படைக் கவலை இதுதான்.

காவிரி டெல்டா பகுதிகளில் மட்டும் சுமார் ஒன்ணரை லட்சம் ஏக்கர் குறுவைப் பயிர்கள் கருகிப் போகும் அபாயத்தை எதிர்நோக்கியுள்ளன. மேலும் சம்பா நாற்று நடவுப் பணிகளுக்கும், சாகுபடிக்கும் துணிந்து செயல்பட முடியாத தவிப்புக்குத் தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்ட விவசாயிகள் தள்ளப்பட்டுள்ளனர்.

இந்த ஆண்டு ஜூன் மாதம் நடுவில் மேட்டூர் அணை திறந்து விடப்பட்ட போது அணையின் நீர் மட்டம் 98.5 அடி. இரண்டரை மாதங்கழித்து இப்பொழுது இருப்பது அதில் பாதி அளவே. மேட்டூர் அணைக்கு நீர் வரத்து போதுமான அளவில் இல்லை. காவிரி நீர்ப் பிடிப்புப் பகுதிகளில் சரிவர மழை பெய்யாத நிலையில் இப்பொழுது திறந்து விடுவதுபோல் தண்ணீர் திறந்து விடப்பட்டால் ஓரிரு வாரங்களில் மேட்டூர் அணை வற்றிப் போய்விடும்.

கடந்த பதினைந்து நாட்களுக்கு முன்னர் தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டங்களில் பரவலாக மழை பெய்திருந்தது. இதனை கருத்தில் கொண்டு மேட்டூர் அணை மூடப்பட்டது. ஆனால் மேட்டூர் அணை மூடப்படும் அளவுக்கு மழை பெய்யவில்லை என்பதே நிஜம். இந்நிலையில் மீண்டும் மேட்டூரிலிருந்து தண்ணீர் திறந்து விடப்பட்டது. கடைமடைப் பகுதிகளுக்குத் தண்ணீர் போய்ச் சேர்வதற்கு முன்னரே காய்ந்து போயுள்ள நிலம் தண்ணீரைச் சட்டென உறிஞ்சிக் கொண்டு, ஈரப்பதமற்ற நிலையில் பெரும் பகுதி வயல்கள் காய்ந்து போயுள்ளன.





நமக்கு நீர் வரத்து குறைந்துவிடுகின்ற காலங்களில் எல்லாம், தூசி தட்டிப் பேச எடுத்துக் கொள்கின்ற காவிரி நடுவர் மன்ற இடைக்காலத் தீர்ப்பு நம் நினைவுக்கு வந்துவிடும். அதன்படி நமக்கு ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களுக்கு உரிய ஏறத்தாழ நூறு டிஎம்சி தண்ணீர் இன்னமும் மேட்டூர் அணைக்கு வந்து சேரவில்லை. இதற்கிடையில் கர்நாடகமும் கைவிரித்துவிட்டது.

“காவிரி நடுவர் மன்ற இடைக்காலத் தீர்ப்பின்படி ஒரு ஆண்டுக்குத் தமிழ்நாட்டிற்கு கர்நாட்கா மாத, வார அடிப்படையில் 205 டிஎம்சி தண்ணீர் தர வேண்டும். தமிழகத்தில் குறுவைப் பயிர் முக்கிய பலன் தரும் பயிர் என்பதால் ஜூன் முதல் அக்டோபர் மாதம் வரையிலான குறிப்பிட்ட அளவின்படி கர்நாடகா, காவிரியில் நீர் விட வேண்டுமென நடுவர் மன்றம் ஆணையிட்டது. இந்தத் தீர்ப்பு சரியில்லை என்று கர்நாடகா மறுப்பதோடு, மழை வெள்ள காலத்தில் தேக்கி வைத்துக் கொள்ள முடியாத உபரி நீரை மேட்டூருக்கு அனுப்பிவிட்டு, அதையும் தன் கணக்கில் சேர்த்துக் கொண்டு விடுகிறது!





• நடராஜன்

துவக்கத்திலிருந்தே கர்நாடக அரசின் பிடிவாத மான நோக்கம் தமிழகத்தில் குறுவை சாகுபடியைக் கைவிட வேண்டும் என்பதுதான். கபினி அணை நிரம்பி வழிந்தால்தான் காவிரி நீர் மேட்டூருக்கு என்கிற அவல நிலை இன்று உள்ளது. கர்நாடகம் தன் பாசன நீர்த் தேவையை அதிகரித்துக் கொண்டே செல்கின்றது. அரசியல் சூதாட்டத்தில் மத்திய, மாநில அரசுகள் சிக்கித் தவிக்கின்றன. கூட்டணிக் கட்சிகளோ தேச நலனை விட தத்தமது சுய லாபமே பெரிதாகக் கருதி செயல்படத்

# தவிக்கும் விவசாயிகள்! கண் திறக்குமா கர்நாடகம்?

துவங்கி விட்டன. அரசியல் கட்சிகளும், அரசுகளும் இவ்வாறு இருக்க இறைவனையும், பருவ மழையையும் வேண்டி நிற்பதைத் தவிர தமிழக காவிரிப் பாசன விவசாயிகளுக்கு வேறு வழியில்லை என்றே தோன்றுகிறது!" என்கிறார் காவிரி பாசன விவசாயிகள் சங்கத் தலைவர் க. ராஜாராம்.

தமிழக அரசுக்குச் சமீபத்தில் காவிரிப் பாசன விவசாயிகள் சங்கத்தினரின் ஆலோசனையின் பேரில் ஹொகேனக்கல் - சென்னை குடிநீர்த் திட்டத்தை வடிவமைத்துக் கொடுத்துள்ளவரும், ஓய்வு பெற்ற தமிழ் நாடு பொதுப் பணித்துறை கண்காணிப்புப் பொறியாளருமான என். நடராஜனைச் சந்தித்தோம்.

"நமக்கு செப்டெம்பர் பதினைந்துக்குள் தென் மேற்கு பருவ மழை பெய்யக் கூடிய வாய்ப்புகள் உள்ளன. அதனால் காவிரி நீர் பிடிப்புப் பகுதிகளில் நல்ல மழை பெய்து மேட்டூர் அணைக்கு நீர் வரத்து அதிகரிக்கும் சூழ்நிலை உருவாகலாம். எனினும் இன்றுள்ள சூழ்நிலையில் மேட்டூர் அணையின் நீர் இருப்பு குறைவாகவே உள்ளது. மேலும் அணையின் நீர் வரத்து அன்றாடத் தேவைக்குத் திறந்து விடப்படுவதால் நீர் மட்டம் உயர வழி இல்லை. இது மிகவும் கவலை தரக் கூடிய ஒன்று. கர்நாடக அணைகளின் நீர் இருப்பைக் கணக்கில் கொண்டு, அவர்களுக்கு வரும் நீரை மேலும் தங்கள் அணைகளில் தேக்கி வைக்காமல் வரத்து நீரை யாவது கர்நாடகம் தமிழகத்திற்குத் தருவதற்கு முன் வர வேண்டும்" என்கிறார்.

— திருநாவுக்கரசு



• டூல்ஸ்

# மீண்டும் பிறந்தேன்!

**ரா**பர்ட் டூல்ஸ் என்ற ஐம்பத்தொன்பது வயதான அந்த அமெரிக்கருக்கு, பத்து வருடமாக இருதயக் கோளாறு. போராடிப் பார்த்தார் உயிர் வாழ. ஒரு முறை அறுவை சிகிச்சையும் செய்து கொண்டார். ஆனாலும் டாக்டர்கள் "கடவுளை வேண்டிக்குங்க'' என்று சென்டிமென்டாக கைவிரித்துவிட மரணத்தை எதிர்நோக்கியிருந்தார் அவர்.

மீன் பிடிப்பதை ஹாபியாகக் கொண்டிருந்த அவருக்கு சாப்பாடு, பேச்சு எதுவுமில்லாமல் சாய்வு நாற்காலி மட்டுமே சொந்தமாகி, வானை வெறித்தபடி படுத்திருக்கிறார். அவரைச் சாவுக்குத் தயார்ப்படுத்தும் விதமாக அவரிடம் பேசிக் கொண்டிருக்கும் டாக்டர் ஃபிரடி, ஐபோகோர் (Aibocor) என்ற இயந்திர இருதயம் பற்றிய கட்டுரையை 'நியூஸ் வீக்' இதழில் படிக்கிறார். அந்த இயந்திர இருதயத்தைப் பொருத்திப் பரிசோதிக்க ஒரு மனிதர் தேவைப்படுவது தெரிகிறது. விஷயத்தைச் சொன்னார் டாக்டர். டூல்ஸ் ரெடியென்று தலையாட்ட தொடர்ந்தது அறுவை சிகிச்சை.

மரணத்தை எதிர்நோக்கும் ஒருவர்- இன்னும் ஒரு மாத காலத்துக்குள் உயிரிழக்க என்பது சதவிகிதம் சாத்தியக் கூறு உள்ளது என்கிற நிலையில் மட்டுமே இப் பரிசோதனைக்கு அனுமதி. டூல்ஸ் இந்த நிலையில்தான் இருந்தார்.

இதன் விளைவை மருத்துவ உலகமே



• டாக்டர் ஃபிரடியுடன் டூல்ஸ்

எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. மருத்துவர்களின் நோக்கம் சிகிச்சைக்குப் பிறகு அறுபது நாட்களாவது டூல்ஸ் உயிரோடு இருக்க வேண்டுமென்பதுதான்.

சிகிச்சை முடிந்த மறுநாள் கண்விழித்தார் டூல்ஸ். சில நாட்களில் அவரால் நடக்க முடிந்தது. அதுவரை பேச சிரமப்பட்ட அவர், பேட்டி கொடுக்குமளவுக்குப் பேசினார்.

"மீண்டு பிழைத்திருக்கிறேன். கடவுளுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்'' என்கிறார் டூல்ஸ், நீண்ட நாட்கள் வாழ முடியாது என்பது தெரிந்தும்!

— லட்சுமி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka